| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 208 | புறம்பயம் † | சோ | 1 | 1 | 1 | 3 | சாக்ஷிநாதேசுரர் | * கரும்பன்னசொல்லம்மை, இக்ஷுவாணி | வன்னிவிருக்ஷம் |
| 209 | புறவார்பனங்காட்டூர் (பனையபுரம்) | நடு | 1 | – | – | 1 | பனங்காட்டீசுரர், நேத்ரோத்தாரணர், கண்ணுகந்தநாதர் | புறவாம்பிகை, சத்யாம்பிகை, மெய்யாம்பிகை | பனைவிருக்ஷங்கள் (ஆண், பெண் இரண்டு) |
| 210 | புனவாயில் | பா | 1 | – | 1 | 2 | * பழம்பதிநாதேசுரர் | கருணைநாயகியம்மை, பெரியநாயகி | மகிழமரம், * புன்னைமரம் |
| 211 | புன்கூர் | சோ | 1 | 1 | 1 | 3 | * சிவலோகநாதர் | சொக்கநாயகியம்மை | புங்கவிருக்ஷம் |
| 212 | பூந்துருத்தி ‡ | ,, | – | 3 | – | 3 | புஷ்பவனநாதேசுரர் | * அழகாலமர்ந்தநாயகி | |
| 213 | பூவணம் † | பா | 2 | 1 | 1 | 4 | பூவணநாதேசுரர் | * மின்னனையாளம்மை | * வைகைநதி, பலாவிருக்ஷம் |
| 214 | பூவனூர் | சோ | – | 1 | – | 1 | புஷ்பவனேசுரர் | கற்பகவல்லியம்மை, ராஜராஜேச்வரி | |
| 215 | பேண்ணுகடம் | நடு | 1 | 1 | – | 2 | * சுடர்க்கொழுந்தீசர் | கடந்தைநாயகி | |
| 216 | பெரும்புலியூர் ‡ | சோ | 1 | – | – | 1 | வியாக்கிரபுரீசுரர் | சௌந்தரநாயகி | காவிரிநதி |
| 217 | பெருவேளூர் | ,, | 1 | 1 | – | 2 | * பிரியாஈசுரர் | மின்னனையா ளம்மை | |
| 218 | பேணுபெருந்துறை | ,, | 1 | – | – | 1 | சிவாநந்தேசுரர், பிரணவேசுரர் | மலையரசியம்மை, மங்களநாயகி | |

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 219 | பேரெயில் | சோ | — | 1 | — | 1 | ஜகதீசுரர் | ஜகந்நாயகி, பெண்ணமிர்தநாயகி | அக்கினிதீர்த்தம் |
| 220 | பைஞ்ஞீலி | ,, | 1 | 1 | 1 | 3 | * நீலகண்டேசுரர், * ஆரணியவிடங்கர் | விசாலாக்ஷியம்மை, * நீணெடுங்கண்ணி | கல்வாழை |
| 221 | மங்கலக்குடி | ,, | 1 | 1 | — | 2 | பிராணவரதேசுரர், மாணிக்க வரதர் | மங்களநாயகி | * காவிரிநதி |
| 222 | மணஞ்சேரி | ,, | 1 | 1 | — | 2 | அருள்வள்ள ஞயகேசுரர் | * யாழின்மொழி யம்மை | |
| 223 | மண்ணிப்படிக்கரை (இலுப்பைப்பட்டு) | ,, | — | — | 1 | 1 | * நீலகண்டேசுரர் | அமிர்தகரவல்லி யம்மை | |
| 224 | மயிலாடுதுறை (மாயூரம்)‡ | ,, | 2 | 1 | - | 3 | மாயூரநாதேசுரர் | அபயாம்பிகை, * அஞ்சொஞயகி | *காவிரிநதி |
| 225 | மயிலாப்பூர் ‡ | தொ | 1 | - | - | 1 | * கபாலீசுரர் | கற்பகவல்லியம்மை | கபாலிதீர்த்தம், புன்ஞகவிருக்ஷம் |
| 226 | மயேந்திரப்பள்ளி ‡ | சோ | 1 | - | - | 1 | * திருமேனி யழகர் | வடிவாம்பிகை | |
| 227 | மருகல் | ,, | 2 | 1 | - | 3 | மாணிக்கவண்ணே சுரர் | வண்டுவார் குழலம்மை | |
| 228 | மழபாடி | ,, | 3 | 2 | 1 | 6 | * வஜ்ரஸ்தம்பேசுரர் | அழகாம்பிகை | கொள்ளிடநதி, பனைவிருக்ஷம் |

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 229 | மறைக்காடு ‡ (வேதாரணியம்) | சோ | 4 | 5 | 1 | 10 | வேதாரண்யேசுரர், * மறைக்காட்டீசுரர் | * யாழைப்பழித்த மொழியம்மை | வேததீர்த்தம், *மணிகர்ணிகை ; வன்னிவிருக்ஷம் |
| 230 | மாகறல் | தொ | 1 | - | - | 1 | அடைக்கலங்காத்த நாதேசுரர், அகத்தீசுரர் | * புவனநாயகி, திரிபுவனேசுரி | |
| 231 | மாணிகுழி ‡ | நடு | 1 | - | - | 1 | மாணிக்கவரதேசுரர், வாமநபுரீஸ்வரர் | மாணிக்கவல்லியம்மை அம்புஜாக்ஷி | கெடிலநதி, கொன்றை |
| 232 | மாந்துறை ‡ | சோ | 1 | - | - | 1 | ஆம்ரவனேசுரர் | அழகாலுயர்ந்த அம்மை, அழகாம்பிகை | மாவிருக்ஷம் |
| 233 | மாற்பேறு | தொ | 2 | 4 | - | 6 | மால்வணங்கீசுரர், * மணிகண்டேசுரர் | கருணைநாயகி, அஞ்சனாக்ஷியம்மை | * பாலாறு, வில்வவிருக்ஷம் |
| 234 | மீயச்சூர் | சோ | 1 | - | - | 1 | முயற்சிநாதேசுரர் | சௌந்தரநாயகி | சூரியபுஷ்கரணி வில்வவிருக்ஷம் |
| 235 | மீயச்சூர் இளங்கோயில் | ,, | - | 1 | - | 1 | சகலபுவனேசுரர் | * மேகலாம்பிகையம்மை, மின்னுமேகலையாள் | |
| 236 | முண்டீச்சரம் | நடு | — | 1 | — | 1 | முண்டீசுரர், * சிவலோகநாதர், * கைலாசநாதர் | கானார்குழலியம்மை, செல்வநாயகி, சௌந்தர்யநாயகி | |

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 237 | முதுகுன்றம் ‡ (விருத்தாசலம்) | நடு | 7 | 1 | 3 | 11 | பழமலைநாதர் | பெரியநாயகி | மணிமுத்தநதி, வன்னிவிருக்ஷம் |
| 238. | முருகன்பூண்டி ‡ | கொ | – | – | 1 | 1 | முருகநாதேசுரர், ஸ்கந்தநாதேசுரர் | முயங்குபூண்முலையம்மை | |
| 239 | முல்லைவாயில் (வட-திரு) ‡ | தொ | – | – | 1 | 1 | * மாசிலாமணீசுரர் | கொடியிடை நாயகி | |
| 240 | முல்லைவாயில் (தென்-திரு) | சோ | 1 | – | – | 1 | முல்லைவனநாதர் | கோதையம்மை | |
| 241 | மூக்கீச்சுரம் (உறையூர்) | ,, | 1 | – | – | 1 | பஞ்சவர்ணேசுரர், நாகேசர் | காந்திமதியம்மை | |
| 242 | வக்கரை ‡ | தொ | 1 | – | – | 1 | * சந்திரசேகரேசுரர், சந்திரமௌலீசுரர் | வடிவாம்பிகை, அமிர்தாம்பிகை | சந்திரபுஷ்கரணி |
| 243 | வடுகூர் ‡ | நடு | 1 | – | – | 1 | வடுகேசுரர், பஞ்சநதேஸ்வரர் | வடுவகிர்க்கண்ணம்மை, திரிபுரசுந்தரி | |
| 244 | வலஞ்சுழி ‡ | சோ | 3 | 2 | – | 5 | கற்பகநாதேசுரர், கபர்த்தீசுரர் | பெரியநாயகி | காவிரிநதி |
| 245 | வலம்புரம் | ,, | 1 | 2 | 1 | 4 | வலம்புரிநாதேசுரர் | வடுவகிர்க்கண்ணம்மை | |

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 246 | வலிதாயம் (பாடி) ‡ | தொ | 1 | — | — | 1 | வலிதாயநாதர் | தாயம்மை, ஜகதாம்பா | |
| 247 | வலிவலம் ‡ | சோ | 2 | 1 | 1 | 4 | * மனத்துணை நாதேசுரர் | *மாழையங்கண்ணியம்மை | புன்னைவிருக்ஷம் |
| 248 | வல்லம் ‡ | தொ | 1 | - | - | 1 | வல்லநாதேசுரர் | வல்லாம்பிகையம்மை | நிவாநதி |
| 249 | வன்னியூர் | சோ | - | 1 | - | 1 | அக்கினீசுரர் | பார்வதியம்மை | அக்கினிதீர்த்தம் |
| 250 | வாஞ்சியம் † ‡ | ,, | 1 | 1 | 1 | 3 | வாஞ்சிலிங்கேசுரர் | மங்களநாயகி, வாழவந்தநாயகி | சந்தனவிருக்ஷம், குப்தகங்கைதீர்த்தம் |
| 251 | வாட்போக்கி (ரத்நகிரி) ‡ | ,, | - | 1 | - | 1 | ரத்தினகிரீசுரர் | சுரும்பார்குழலம்மை | காவிரிதீர்த்தம், வேப்பவிருக்ஷம் |
| 252 | வாய்மூர் | ,, | 1 | 2 | - | 3 | * வாய்மூர்நாதேசுரர் | *பாலினுநன்மொழியம்மை | |
| 253 | வாளொளிபுற்றூர் | ,, | 2 | - | 1 | 3 | *மாணிக்க வண்ணேசுரர் | *வண்டார்பூங்குழலம்மை | |
| 254 | வான்மியூர் ‡ | தொ | 2 | 1 | - | 3 | மருந்தீசுரர், அமுதேசர் | சொக்கநாயகி | |
| 255 | விசயமங்கை | சோ | 1 | 1 | - | 2 | விஜயநாதேசுரர் | *மங்கைநாயகி | அருச்சுனதீர்த்தம் |

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 256 | வியலூர் | சோ | 1 | - | - | 1 | யோகாநந்தேசுரர், புராதனேசுரர், வில்வாரணியேசுரர் | சௌந்தரநாயகி, சாந்தநாயகி | |
| 257 | விளநகர் | ,, | 1 | - | - | 1 | *துறைகாட்டு வள்ளலார், உசீரவனேசுரர் | *வேயுறுதோளி யம்மை, வம்சபுஜாம்பாள் | *காவிரிநதி |
| 258 | விளமர் | ,, | 1 | - | - | 1 | பதஞ்சலி மநோகரேசுரர், வியாக்ரபாதேசுரர் | *யாழினுமென்மொழி யம்மை | அக்கினிதீர்த்தம் |
| 259 | விற்குடி ‡ | ,, | 1 | - | - | 1 | வீரட்டானேசுரர் | மைவார்குழலியம்மை, ஏலவார்குழலி | |
| 260 | விற்கோலம் (கூவம்) | தொ | 1 | - | - | 1 | *திரிபுராந்தகேசுரர் | திரிபுராந்தகியம்மை | |
| 261 | வீழிமிழலை ‡ | சோ | 15 | 8 | 1 | 24 | நேத்திரார்ப்ப ணேசுரர், வீழியழகேசுரர் | சுந்தரகுஜாம்பிகை | விஷ்ணுதீர்த்தம், வீழிவிருக்ஷம் |
| 262 | வெஞ்சமாக்கூடல் ‡ | கொ | - | - | 1 | 1 | *விகிர்தநாதேசுரர் | விகிர்தநாயகி | |
| 263 | வெண்காடு † | சோ | 3 | 2 | 1 | 6 | சுவேதாரணியேசுரர் | பிரமவித்தியாநாயகி | சோம, சூரிய, அக்கினி ஆகிய*முக்குளம் |
| 264 | வெண்டுறை | ,, | 1 | - | - | 1 | வெண்டுறைநாதேசுரர் | *வேனெடுங்கண்ணி யம்மை | |

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 265 | வெண்ணியூர் | சோ | 1 | 2 | - | 3 | இக்ஷுபுரீசுரர், *வெண்ணிக்கரும்பர், வெண்ணிநாயகேசுரர். | அழகியநாயகி | நந்தியாவர்த்தம் |
| 266 | வெண்ணெய்நல்லூர் ‡ | நடு | - | - | 1 | 1 | தடுத்தாட்கொண்ட ஈசுரர், கிருபாபுரீசுரர் | வேற்கண்ணி யம்மை, மங்களாம்பிகை | பெண்ணைநதி |
| 267 | வெண்பாக்கம் | தொ | - | - | 1 | 1 | தியாகேசுரர், வெண்பாக்க நாதேசுரர், ஊன்றீசுரர் | கனிவாய்மொழி யம்மை, மின்னலொளி யம்மை | இலந்தைவிருக்ஷம், குசஸ்தலைநதி |
| 268 | வேட்களம் ‡ | சோ | 1 | 1 | - | 2 | பாசுபதேசுரர் | *நல்லநாயகி | |
| 269 | வேட்டக்குடி | ,, | 1 | - | - | 1 | திருமேனியழகேசுரர் | சாந்தநாயகி | |
| 270 | வேதிகுடி ‡ | ,, | 1 | 1 | - | 2 | வேதபுரீசுரர் | *மங்கையர்க் கரசி | |
| 271 | வேள்விக்குடி | ,, | 1 | - | 2 | 3 | கலியாணசுந்தரேசுரர் | பரிமளசுகந்த நாயகி | |
| 272 | வேற்காடு ‡ | தொ | 1 | - | - | 1 | வேற்காட்டீசுரர், * வேதபுரீசுரர் | வேற்கண்ணி யம்மை, பாலாம்பிகை | |
| 273 | வைகன்மாடக்கோயில் | சோ | 1 | - | - | 1 | வைகலுதேசுரர் | வைகலாம்பிகை, கொம்பிலிளங்கோதை | |

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 274 | வைகாவூர் | சோ | 1 | — | — | 1 | வில்வவனேசுரர் | வளைக்கைநாயகியம்மை, சர்வஜநரக்ஷகி, பூவைவல்லியம்மை | யமதீர்த்தம், வில்வவிருக்ஷம். |
| | ஆகத் திருப்பதிகங்கள். | | 377 | 275 | 97 | 749 | | | |
| | பொதுப் பதிகங்கள். | | 7 | 37 | 4 | 48 | | | |
| | ஆக மொத்தம். | | 384 | 312 | 101 | 797 | | | |

☞ 1. திருப்புகலிக்கும் திருவீழிமிழலைக்கும் பொதுவாயுள்ள 'மைம்மரு பூங்குழல்' என்னும் பதிகம் இரண்டு ஸ்தலத்துக்குந் தனித்தனியே சேர்த்துக்கொள்ளப்பட் டிருக்கின்றது.

2. திருநீரேருக்கும் திருப்புன்கூருக்கும் பொதுவாயுள்ள "பிறவாதே தோன்றிய" என்னும் பதிகம் திருப்புன்கூருக்கு மாத்திரஞ் சேர்க்கப்பட்டுள்ளது.

## தேவாரப் பதிகத் தொகைப்படி ஸ்தலவரிசை.

| | | | |
|---|---|---|---|
| 1. | சீகாழி-பதிகத்தொகை. | | 71 |
| 2. | ஆரூர் | ,, | 34 |
| 3. | வீழிமிழலை | ,, | 24 |
| 4. | ஐயாறு | ,, | 19 |
| 5. | அதிகை | ,, | 18 |
| 6. | இடைமருது | ,, | 12 |
| | கச்சியேகம்பம் | ,, | 12 |
| 8. | ஆலவாய் | ,, | 11 |
| | கோயில் | ,, | 11 |
| | முதுகுன்றம் | ,, | 11 |
| 11. | மறைக்காடு | ,, | 10 |
| | | | 233 |

8-பதிக முள்ளன (4) :

12. ஆவடுதுறை
ஒற்றியூர்
கழிப்பாலை
புகலூர்

32

7-பதிக முள்ளன (4) :

16. ஆனைக்கா
கயிலாயம்
நள்ளாறு
நாகைக்காரோணம்

28

6-பதிக முள்ளன (7) :

20. சோற்றுத்துறை
நாகேச்சுரம்
நெய்த்தானம்
பழனம்
மழபாடி
மாற்பேறு
வெண்காடு

42

5-பதிக முள்ளன (7) :

27. அண்ணாமலை
ஆமாத்தூர்
இன்னம்பர்
கடவூர்
நல்லூர்
நாரையூர்
வலஞ்சுழி

35

4-பதிக முள்ளன (11) :

34. ஆலங்காடு
காளத்தி
கோடிகா
கோளிலி
சாய்க்காடு
சிவபுரம்
நறையூர்
நின்றியூர்
பூவணம்
வலம்புரம்
வலிவலம் 44

3-பதிக முள்ளன (28) :

45. அம்பர் மாகாளம்
அரிசிற்கரைப் புத்தூர்
இராமேசுரம்
கடம்பூர்
கடவூர்மயானம்
கழுக்குன்றம்
கற்குடி
செங்காட்டங்குடி
செம்பொன்பள்ளி
சேறை
துருத்தி
நனிபள்ளி

நெல்வாயி லரத்துறை
பருப்பதம்
பாசூர்
பாண்டிக்கொடுமுடி
புள்ளிருக்குவேளூர்
புறம்பயம்
புன்கூர்
பூந்துருத்தி
பைஞ்ஞீலி
மயிலாடுதுறை
மருகல்
வாஞ்சியம்
வாய்மூர்
வாளொளிபுற்றூர்
வான்மியூர்
வெண்ணியூர் — 84

2-பதிக முள்ளன (49) :

73. அவளிவணல்லூர்
அன்பி லாலந்துறை
அன்னியூர்
ஆக்கூர்
ஆரூ ரரநெறி
எறும்பியூர்
ஓமாம்புலியூர்
கச்சி மேற்றளி
கண்டியூர்
கருகாவூர்
கருப்பறியலூர்
காட்டுப்பள்ளி-மேலை
காவிரிப்பூம்பட்டினம்
கானப்பேர்
கானூர்
கீழ்வேளூர்
குடமூக்கு
குடவாயில்
குரங்காடுதுறை-தென்
குருகாவூர்
குறுக்கை
குற்றாலம்
கேதாரம்
கேதீச்சரம்
கொண்டீச்சரம்
கோகர்ணம்
கோட்டாறு
கோலக்கா
கோவலூர்
கோழம்பம்
சிராப்பள்ளி
தேவூர்
நல்லம்
பந்தணைநல்லூர்
பரங்குன்று
பராய்த்துறை
பனையூர்
பாச்சிலாச்சிராமம்
பாதிரிப்புலியூர்
புத்தூர்
புனவாயில்
பெண்ணாகடம்
பெருவேளூர்
மங்கலக்குடி
மணஞ்சேரி
விஜயமங்கை
வேட்களம்
வேதிகுடி
121. வேள்விக்குடி — 98

இந்நூற்றிருபத்தொரு (121) தலங்கள் நீங்க, ஏனைய நூற்றைம்பத்துமூன்று (153) தலங்களும் ஒரே பதிகம் பெற்றனவாம். — 749

## திருஞானசம்பந்த ஸ்வாமிகள் பதிகத் தொகைப்படி ஸ்தலவரிசை.

1. ஸ்ரீகாழி-பதிகத்தொகை 67
2. திருவீழிமிழலை ,, 15
3. ஆலவாய் ,, 9
4. முதுகுன்றம் ,, 7
5. இடைமருது ,, 6
6. ஆரூர் ,, 5
ஐயாறு ,, 5

114

4-பதிக முள்ளன (3):

8. கச்சியேகம்பம்
நள்ளாறு
மறைக்காடு

12

3-பதிக முள்ளன (9):

11. அம்பர்மாகாளம்
ஆனைக்கா
சிவபுரம்
நல்லூர்
நறையூர்
நாரையூர்
மழபாடி
வலஞ்சுழி
வெண்காடு

27

2-பதிக முள்ளன (24):

20. அண்ணாமலை
ஆமாத்தூர்
இராமேசுரம்
கயிலாயம்
கழிப்பாலை
காளத்தி
காவிரிப்பூம்பட்டினம்
குடவாயில்
குற்றாலம்
கோட்டாறு
கோயில்
சாய்க்காடு
செங்காட்டங்குடி
தேவூர்
நாகேச்சுரம்
நாகைக்காரோணம்
புகலூர்
பூவணம்
மயிலாடுதுறை
மருகல்
மாற்பேறு
வலிவலம்
வாளொளிபுற்றூர்
43. வான்மியூர்

48

ஓரே பதிக முள்ளன (176):

ஸ்தல அகராதியில்

1, 2, 5, 6, 8, 9-11, 13-20, 26, 29, 30, 32, 33, 36, 37, 39-45, 47, 49, 51, 53, 54, 57, 62-65, 67-69, 71-74, 76, 78, 80-83, 85, 86, 90, 91, 93-95, 97, 100-103, 107-111, 114-116, 118, 120, 121, 123-127, 129, 131, 132, 134, 135, 138-145, 147, 148, 150, 152-154, 156, 157, 159, 162, 168, 170,

173-181, 183-188, 191, 193-200, 202, 204-211, 215-218, 220-222, 225, 226, 230-232, 234, 240-243, 245, 246, 248, 250, 252, 255-260, 264, 265, 268-274 ஆகிய எண்களுள்ள நூற்றெழுபத்தாறு (176) தலங்களாம்.

ஆகத் திருஞானசம்பந்த ஸ்வாமிகள் தேவாரம் பெற்ற ஸ்தலங்கள் (43+176=) 219; ஸ்தலப் பதிகங்கள் 377.

---

திருநாவுக்கரசு ஸ்வாமிகள் பதிகத் தொகைப்படி ஸ்தலவரிசை.

---

1. ஆரூர் - பதிகத்தொகை 21
2. அதிகை ,, 16
3. ஐயாறு ,, 12
4. கோயில் ,, 8
வீழிமிழலை ,, 8
6. கச்சியேகம்பம் ,, 7

72

5-பதிக முள்ளன (8):

7. ஆவடுதுறை
இடைமருது
ஒற்றியூர்
கழிப்பாலை
நெய்த்தானம்
பழனம்
புகலூர்
மறைக்காடு

40

4-பதிக முள்ளன (5):

15. இன்னம்பர்
கயிலாயம்
சோற்றுத்துறை
நாகைக்காரோணம்
மாற்பேறு

20

3-பதிக முள்ளன (7):

20. அண்ணாமலை
ஆனைக்கா
கடவூர்
ஸ்ரீகாழி
கோடிகா
நாகேச்சுரம்
பூந்துருத்தி

21

2-பதிக முள்ளன (23):

27. ஆமாத்தூர்
ஆரூ ரரநெறி
ஆலங்காடு
ஆலவாய்
எறும்பியூர்
கடம்பூர்
குறுக்கை
கொண்டீச்சுரம்
கோளிலி
சாய்க்காடு
செம்பொன்பள்ளி
சேறை
நல்லூர்
நள்ளாறு
நாரையூர்
பாசூர்

| | |
|---|---|
| புள்ளிருக்குவேளூர் | வாய்மூர் |
| மழபாடி | வெண்காடு |
| வலஞ்சுழி | 49. வெண்ணியூர் |
| வலம்புரம் | |
| | 46 |

ஒரே பதிக முள்ளன (76):

ஸ்தல அகராதியில்

10, 11, 16-18, 21, 27, 38, 54, 58, 60, 61, 64, 66, 68, 72, 75, 80, 83, 84, 86, 89, 93, 94, 96, 97, 99, 102, 112, 116, 124, 125, 128, 132, 133, 137, 146, 150, 157, 162, 170, 172, 177, 181, 182, 184, 186, 189, 190, 197, 199, 201, 205, 208, 211, 213-215, 217, 219-222, 224, 227, 235-237, 247, 249-251, 254, 255, 268, 270 ஆகிய எண்களுள்ள எழுபத்தாறு (76) தலங்களாம்.

ஆகத் திருநாவுக்கரசு ஸ்வாமிகள் தேவாரம்பெற்ற ஸ்தலங்கள் (49+76=) 125; ஸ்தலப் பதிகங்கள் 275.

சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் பதிகத் தொகைப்படி ஸ்தலவரிசை.

| | | | | |
|---|---|---|---|---|
| 1. ஆரூர் - பதிகத்தொகை | 8 | நின்றியூர்-பதிகத்தொகை | | 2 |
| 2. முதுகுன்றம் ,, | 3 | வேள்விக்குடி | ,, | 2 |
| 3. ஆவடுதுறை ,, | 2 | | | |
| ஒற்றியூர் ,, | 2 | | | 19 |

ஸ்தல அகராதியில்

3, 5, 10, 12, 22, 25, 26, 31, 34, 35, 46, 50, 52, 55, 56, 58, 59, 63, 64, 70, 74, 77, 79, 80, 83, 88, 89, 91, 92, 103, 106-108, 117, 122, 123, 126, 136, 142, 149-151, 160-166, 169, 171, 177, 183, 186, 192, 194, 196, 197, 203, 208, 210, 211, 213, 220, 223, 228, 229, 238, 239, 245, 247, 250, 253, 261-263, 266, 267 ஆகிய எண்களுள்ள எழுபத்தெட்டு (78) தலங்கள் ஒரே பதிகம் பெற்றனவாம்.

ஆகச் சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் தேவாரம்பெற்ற ஸ்தலங்கள் (6+78=) 84; ஸ்தலப் பதிகங்கள் 97.

சிவமயம்.

# சிவஸ்தல மஞ்சரி.

[குறிப்பு :

| | |
|---|---|
| சோ=சோழ நாடு. | துளுவ=துளுவ நாடு. |
| ஈழ=ஈழ நாடு. | தொ=தொண்டை நாடு. |
| கொ=கொங்கு நாடு. | நடு=நடு நாடு. |
| பா=பாண்டி நாடு. | ச=சம்பந்தர் பாடல். |
| மலை=மலை நாடு. | அ=அப்பர் பாடல். |
| வட=வட நாடு. | சு=சுந்தரர் பாடல். |
| | மூ=மூவர் பாடல்.] |

1. அகத்தியான்பள்ளி : [சோ; ச; அகத்தீசுரர் - பாகம்பிரியாநாயகி; அக்கினி தீர்த்தம்]

ரெயில்வே ஸ்டேஷன். வேதாரணியத்துக்குத் (229) தெற்கு 1-மைல்.

ஸ்வாமியின் திருக்கலியாண கோலத்தைத் தரிசிக்கும் பொருட்டு அகஸ்தியர் தங்கியிருந்து வழிபட்ட ஸ்தலம். அகஸ்தியர் விக்கிரகம் கோயிலி லிருக்கிறது. கோயிலுக்கெதிரில் அக்கினி தீர்த்த மிருக்கிறது.

தெரிந்ததுவுங் கணையொன்று முப்புரஞ் சென்றுட
னெரிந்ததுவு முன்னெழிலார் மல ருறைவான்றலை
யரிந்ததுவும் பொழில் சூழகத்தியான் பள்ளியான்
புரிந்ததுவு முமையாளோர் பாகம் புனைதலே. (ச)

2. அச்சிறுபாக்கம் : [தொ; ச; பாக்கபுரேசர்-சுந்தரநாயகி; தேவதீர்த்தம்; கொன்றை விருக்ஷம்]

ரெயில்வே ஸ்டேஷன் ; சென்னைக்குத் தெற்கு 59-மைல்.

சிவபெருமான் திரிபுரதகனஞ் செய்யும்பொருட்டுத் தேவர்கள் சமைத்த தேரில் எழுந்தருளினபொழுது, அத்தேவர்கள் விநாயக மூர்த்தியை நினையாத காரணத்தால் தேரின் அச்சு இற்றது (முறிந்தது) ; அந்தக் காரணத்தால் இந்த ஸ்தலத்துக்கு அச் சிறு பாக்கம் எனப் பெய ருண்டாயிற்று. கண்ணுவரும் கௌதமரும் பூசித்த தலம்.

கிழக்கே பெரிய கோபுரம். கோபுரவாயிலுக்கும் ரெயில் ரோட்டுக்கும் மத்தியிற் பாறு தீர்த்தம் இருக்கின்றது. துவஜ ஸ்தம்பமும் நந்தியும் கோபுரவாயிலுக்கு நேராக இல்லாமற் சற்று வடக்கே இருக்கின்றன. துவஜஸ்தம்பத்துக்கு நேராக மூலஸ்தானம். கோபுர வாயிலுக்கு நேராகப் பாண்டியன் பிரதிஷ்டித்த சிவலிங்கமும் (உமைபாட்சிநாதர்) அம்மனும் (மெல்லியலாள்) இருக்கின்றன. மூலவர் 'ஆட்சிநாதர்'; தேவியார் 'இளங்கிளியம்மை' (பால சுகாம்பிகை). வடக்குப் பிராகாரத்திற் கொன்றை விருக்ஷமும் சிம்ஹ கூபம் என்னுந் தீர்த்தமும் (கிணறும்), இளங்கிளியம்மை சந்நிதியும் இருக்கின்றன. கோயிலுக்கு வடக்கே சற்று தூரத்திற் சங்கு தீர்த்தம் என்னும் நல்ல தண்ணீர்த் தாமரைக்குளம் இருக்கின்றது.

மைம்மலர்க் கோதை மார்பின ரெனவு
மலைமக ளவளொடு மருவின ரெனவுஞ்
செம்மலர்ப் பிறையுஞ் சிறையணி புனலுஞ்
சென்னிமே லுடையரெஞ் சென்னிமே லுறைவார்
தம்மல ரடியொன் றடியவர் பரவத்
தமிழ்ச்சொலும் வடசொலுந் தாணிழற் சேர
அம்மலர்க் கொன்றை யணிந்தவெம் மடிகள்
அச்சிறு பாக்கம தாட்சி கொண் டாரே. (ச)

3. திரு அஞ்சைக்களம்: [மலை; ச; அஞ்சைக்களத்தீசர்—உமையம்மை; சிவகங்கை]

சென்னபட்டணத்துக்குத் தென்மேற்கே 360-மைல் தூரமுள்ள சோரனூர் என்னும் ஜங்க்ஷன் ஸ்டேஷனுக்குத் தென்மேற்கு 35-மைல் தூரத்திலுள்ள இருஞாலக்கடை என்னும் ரெயில்வே ஸ்டேஷனை யடைந்து, அங்கிருந்து தென்மேற்கு 5-மைல் (மோடாரில்) சென்று இருஞாலக்கடை என்னும் ஊரை யடைந்து, அங்கிருந்து தென்மேற்கு (குதிரை வண்டியில்) 6-மைல் சென்று கருவப்படந்தை என்னும் ஊரைச் சேர்ந்து, அங்கிருந்து கழியில் (படகில்) 4-மைல் சென்றால் திரு அஞ்சைக் களத்தைச் சேரலாம். கழியில் 2½-மைல் கடந்ததும் கொடுங்களூர் இருக்கின்றது. எர்ணாகுளம் ஸ்டேஷனிலிருந்து ஸ்டீம் லான்சில் 22-மைல் தூரம் கழியிற் சென்று கோட்டப்புர மடைந்து, அங்கிருந்து வடக்கு ¾-மைல் சென்றாலும் திரு அஞ்சைக் களத்தைச் சேரலாம். சுந்தரர், சேரமான் இவர்களுடைய உற்சவ விக்கிரகங்கள் இருக்கின்றன.

சுந்தரமூர்த்திநாயனுர் வெள்ளையானையின்மீதும் அவருடைய தோழராகிய சேரமான் பெருமாணுயனுர் குதிரையின்மீதும் ஏறிக் கைலாயத்துக்குச் சென்ற ஸ்தலம்*.

பரசுராமர், தாயைக்கொன்ற பாவம் நீங்கும் பொருட்டுப் பூசித்த ஸ்தலம்.

* வெறுத்தேன்மனை வாழ்க்கையை விட்டொழிந்தேன்
விளங்குங்குழைக் காதுடை வேதியனை
யிறுத்தாயிலங் கைக்கிறை யாயவனைத்
தலைபத்தொடு தோள்பல விற்றுவிழக்
கறுத்தாய்கட னஞ்சமு துண்டு கண்டங்
கடுகப்பிர மன்றலை யைந்திலுமொன்
றறுத்தாய்கட லங்கரை மேன் மகோதை
யணியார்பொழி லஞ்சைக் களத்தப்பனே. (௬)

4. <u>திருஅண்ணுமலை :</u> [நடு; ச-அ; அருணசலேசுரர் - உண்ணுமுலையம்மை; பிரம தீர்த்தம்; மகிழமரம்]

ரெயில்வே ஸ்டேஷன், விழுப்புரத்துக்கு வடமேற்கு 42-மைல்.

இது பஞ்சபூத ஸ்தலங்களில் தேயு ஸ்தலம். நினைக்க முத்தி யளிக்கும் நிர்மல க்ஷேத்திரம்.

" நினைத்துத் தொழுவார் பாவந் தீர்க்கும் நிமல ருறைகோயில் " (ச)

" தில்லையைக் காணக் காசியி லிறக்கச் சிறக்குமா ரூர்தனிற் பிறக்க
எல்லையி லருண கிரிதனை நினைக்க வெய்தலா முத்தி."

சிவபெருமான் வல்லாள மகாராசனுக்குப் புத்திரராய்த் தோன்றி அநுக்கிரகித்த ஸ்தலம். 'யான்பரம்' 'யான்பரம்' என்று தர்க்கித்த பிரம விஷ்ணுக்களுக்கு முன் சிவபெருமான் அக்கினிமலையாய்த் தோன்றி, அவர்கள் அன்னமாயும் பன்றியாயுஞ் சென்று முடியையும் அடியையுந் தேடிக் காணுமல், அகந்தை தீர்ந்து திகைத்து நிற்கத் தாமே பரம்பொருள் என்று ஸ்தாபித்தருளிய ஸ்தலம்†. இந்த ஐதிஹ்யத்தைக்கொண்டு இப்பொழுதும் பிரதி வருஷமும் கார்த்திகை மாதக் கிர்த்திகையில் உலகப் பிரசித்தமான தீபதரிசன உற்சவம் நடந்துவருகிறது.

" என்னிக ரெவரு மில்லென் றிருவரு மிகலு மெல்லை
அன்னவர் நடுவு தோன்றி அடிமுடி தெரியா தாகி
உன்னினர் தங்கட் கெல்லாம் ஒல்லையின் முத்தி நல்கித்
தன்னிக ரின்றி நின்ற தழற்பெருஞ் சயிலங் கண்டான்."

[கந்தபுராணம்; வழிநடைப் படலம்—௪௦].

மிகப் பெரிய கோயில். நாலு பக்கமும் பெரிய கோபுரங்கள் இருக்கின்றன. மேலைக்கோபுரம் பேய்க்கோபுரம் எனப்படுகிறது. மலைப் பிரதக்ஷிணம் 8-மைல். வழியிற் பல தீர்த்தங்களும் அணி அண்ணாமலை என்னுந் தலமும், குகைநமசிவாயரது கோயிலும் உள்ளன.

பார்வதிதேவியார் தவஞ்செய்து சிவபெருமானுடைய இடப் பாகம் பெற்ற ஸ்தலம். இந்த ஐதிஹ்யம் "பவளக் குன்று" என இப்பொழுது வழங்கும் குன்றின்மேல் உள்ள ஆலயத்தில் விளக்க முறுகின்றது.

திருப்புகழ் பாடிய அருணகிரிநாத ஸ்வாமிகளுடைய ஜநந பூமி. அவர் அடக்கமான இடம் மேலைப் பிராகாரத்தில் இருக்கின்றது. அங்கே அவருடைய உருவம் ஒன்று இருக்கிறது. அவருக்கு அநுக்கிரகஞ் செய்த முருகக் கடவுளி னுருவம் கோயிலுக்குக் கிழக்கே ஒரு ஸ்தம்பத்தி லிருக்கிறது. அவருக்குக் 'கம்பத் திளையனார்' என்று பெயர். கோபுரத்திளையனார் சந்நிதியில் அருணகிரிநாத ருடைய உருவம் சிலையி லிருக்கின்றது.

ஸ்தல புராணம்: "அருணசல புராணம்" என வழங்கும்; சைவ எல்லப்ப நாவலர் பாடியது; அவர் பாடிய 'அருணைக் கலம்பகமும்' விசேஷமான நூல்.

† விளவார்கனி படநூறிய கடல்வண்ணனும் வேதக்
கிளர்தாமரை மலர்மேலுறை கேடில்புக ழோனும்
அளவாவணம் அழலாகிய அண்ணாமலை அண்ணல்
தளராமுலை முறுவல்லுமை தலைவன்னடி சாணே. (ச)

தேடிச் சென்று திருந்தடி யேத்துமின்
நாடி வந்தவர் நம்மையு மாட்கொள்வர்
ஆடிப் பாடியண் ணாமலை கைதொழ
ஓடிப் போம்நம துள்ள வினைகளே. (அ)

**5. திருஅதிகை:** [நடு; மூ; வீரட்டேசுரர்—திரிபுரசுந்தரி; கெடிலம்.]

பண்ணுருட்டி ரெயில்வே ஸ்டேஷனுக்குத் தென்கிழக்கு ஒரு மைல். கெடிலநதியின் வடகரையி லிருக்கிறது. 'வீசுங்கெடில வடகரைத்தே யெந்தை வீரட்டமே' என்பது தேவாரம்.

'தவலரும் புரங்கள் மூன்றுந் தழனுதற் றிருக்கண் சாத்திப்
பவமறு மூவ ரன்பிற் பட்டவன் பதியைக் காண்மின்'.
திருவிளையாடற் புராணம்; அநுச்சனைப் படலம்—கசு.

அஷ்டவீரத் தலங்களி லொன்று. திரிபுரதகனஞ் செய்த ஸ்தலம்.* திருநாவுக்கரசு நாயனுருடைய தமக்கையாராகிய திலகவதியார் சிவ பெருமானை வழிபட்ட திருப்பதி. அந்நாயனுர் ஜைநமதத்தை விட்டுச் சைவராய்க் "கூற்ருயினவாறு விலக்ககிலீர்" என்னுந் திருப்பதிகம் பாடிச் சூலைநோய் தீரப்பெற்ற திருநகர். காடவன் என்னும் சமண ராஜன் சைவசமயம் மெய்யெனத் தெளிந்தபின், பாடலிபுத்திரத்தி லிருந்த சமணருடைய பள்ளிகளையும் பாழிகளையும் இடித்து அவற்றின் கற்களைக்கொண்டு கட்டிய "குணதரேச்சுரம்" என்னும் ஆலயமும் இந்தத் தலத்தி லிருக்கின்றது.

கோயிலுக்குள்ளே திருக்குளம் இருக்கின்றது. கர்ப்பக்கிரகம் தேர்போலப் பதுமைகளால் அலங்கரிக்கப் பெற்றும் நிழல் பூமியிற் சாயாதபடியுங் கட்டப்பட் டிருக்கின்றது. ஸ்தல புராணம் அச்சிடப்பட் டுள்ளது.

எண்ணு ரெயிலெய்தா னிறைவ னனலேந்தி
மண்ணர் முழவதிர முதிரா மதிசூடிப்
பண்ணர் மறைபாடப் பரம னதிகையுள்
விண்ணோர் பரவநின் ருடும் வீரட் டானத்தே. (ச)

* முற்ற வெண்மதி சூடு முதல்வனுர்
செற்ருர் வாழுந் திரிபுரந் தீயெழ
விற்ருன் கொண்டெயி லெய்தவர் வீரட்டம்
கற்ற லல்லதென் கண்டுயில் கொள்ளுமே. (அ)

தம்மானை யறியாத சாதியா ருளரே
சடைமேற்கொள் பிறையானை விடைமேற்கொள் விகிர்தன்
கைம்மாவி னுரியானைக் கரிகாட்டி லாட
லுடையானை விடையானைக் கறைகொண்ட கண்டத்
தெம்மான்ற னடிக்கொண்டென் முடிமேல் வைத்திடுமென்னு
மாசையால் வாழ்கின்ற அறிவிலா நாயேன்
எம்மானை யெறிகெடில வடவீரட் டானத்
துறைவானை யிறைபோது மிகழ்வன்போ லியானே. (சு)

**6. அம்பர்:** [சோ; ச; பிரமபுரீசுரர் – பூங்குழலம்மை; பிரமதீர்த்தம்; புன்னைவிருக்ஷம்.]

பேரளம் ஜங்க்ஷனுக் கடுத்த பூந்தோட்டம் ரெயில்வே ஸ்டேஷ னுக்குத் தென்கிழக்கு 2-மைல். அம்பர்மாகாளத்துக்குக் (7) கிழக்கு முக்கால் மைல்.

சோமாசிமாற நாயனூர் முத்தியடைந்த ஸ்தலம்.

ஸ்வாமி சந்நிதி கட்டுமலைமேல் இருக்கின்றது. ஸ்வாமிக்குப் பின்புறத்திற் பார்வதி பரமேசுரர்களுடைய உருவங்கள் இருக்கின்றன. இங்குள்ள ஆலயத்துக்குப் பெருந்திருக்கோயில் என்று பெயர். 'அம்பர் நகர்ப் பெருங்கோயி லமர்கின்றூன்காண்' என்பது தேவாரம். இத்தலத்திலுள்ள ஆலயம் கோச்செங்கட் சோழ ராஜாவாற் கட்டப்பட்டது *. இவர் திருவானைக்காமுதல் அம்பர்ப் பெருந் திருக்கோயி லீறுகவுள்ள 64—மாடக் கோயில்கள் கட்டுவித்தார்.

'மாடக்கோயில்' என்பது கட்டுமலையையும் யானைகள் செல்லக் கூடாதிருக்குஞ் சந்நிதியையும் உடையது.

மீனுக்ஷிசுந்தரம்பிள்ளை யவர்கள் பாடிய ஸ்தலபுராண முள்ளது.

* எரிதர அனல்கையி லேந்தி யெல்லியி
னரிதிரி கானிடை நட்டம் ஆடுவார்
அரிசிலம் பொருபுனல் அம்பர் மாநகர்க்
குரிசில்செங் கண்ணவன் கோயில் சேர்வரே. (ச)

**7. அம்பர்மாகாளம்:** [சோ; ச; மாகாளநாதர் — பயக்ஷயநாயகி; மாகாள தீர்த்தம்.]

இது 'கோயில் திருமாகாளம்' என்று வழங்குகின்றது. அம்பர் (6) என்னும் ஸ்தலத்துக்கு மேற்கு ¾—மைல். பேரளம் ரெயில்வே ஸ்டேஷனுக்குத் தென்கிழக்கு 3¾—மைல். அம்பருக்கும் அம்பர்மாகாளத்துக்கும் இடையிற் சோமாசிமாற நாயனூர் யாகம் செய்த மண்டபம் இருக்கின்றது. யாக உற்சவம் வைகாசி ஆயில்யத்தில் நடக்கிறது; வெகு நன்று யிருக்கும்.

அம்பன், அம்பாசூரன் என்னும் ராக்ஷதர்களைக் கொன்ற பாவந் தீரக் காளி பூஜைசெய்த ஸ்தலம் †. பாண லிங்கம்.

வெளிப்பிராகாரத்தில் தென்பக்கம் காளிகோயில் இருக்கிறது. மஹாகாள ருஷியும் பூஜை செய்த ஸ்தலம்.

சோமாசிமாற நாயனூர், அவர் பத்தினி, சுந்தரமூர்த்தி நாயனூர், பாவை நாச்சியார் இவர்களது உருவங்கள் இருக்கின்றன. இவற்றுக் கெதிரில் தியாகராஜருடைய விக்கிரமும், தேவியாருடைய விக்கிரமும் இருக்கின்றன.

† பழகமா மலர்பறித் திண்டைகொண் டிறைஞ்சுவார் பாற்செறிந்த
குழகனார் குணம்புகழ்ந் தேத்துவா ரவர்பலர் கூடநின்ற
கழகனார் கரியுரித் தாடுகங் காளர்நங் காளியேத்தும்
அழகனா ரரிவையோ டிருப்பிடம் அம்பர்மா காளந் தானே. (ச)

**8.** அரசிலி என்பது ஒழுந்தியாப்பட்டு. [தொ; ச; அரசிலிநாதர்-பெரிய நாயகி; அரசடி தீர்த்தம்.]

புதுச்சேரியிலிருந்து திண்டிவனம் போகும் வழியில் வடமேற்கு 5—மைல் சென்று, இரும்பை மாகாளத்தைச் [40] சேர்ந்து, அங்கிருந்து ஒட்டன்பாளையம் வழியாய் வடகிழக்கு 3-மைல் சென்றால் அரசிலியை அடையலாம்.

வாமதேவமுநிவர் பூசித்த ஸ்தலம். கோயில் சிறிதன்று; நல்ல ஸ்திதியி லிருக்கின்றது. லிங்கமூர்த்தி சிறிய உருவம்; ஸ்வாமி சந்நிதிக்கு வடகிழக்கு அம்மன் சந்நிதி; ஆறுமுகக் கடவுள் தேவிமாருடன் பிராகாரத்தில் வீற்றிருக்கின்றார்.

மிக்க காலனை வீட்டி மெய்கெடக் காமனை விழித்துப்
புக்க வூரிடு பிச்சை யுண்பது பொன்றிகழ் கொன்றை
தக்க நூறிகழ் மார்பிற் றவளவெண் ணீறணிந் தாமை
யக்கி னாரமும் பூண்ட வடிகளுக் கிடமர சிலியே. (ச)

**9.** அறைதைப்பெரும்பாழி என்பது அரித்துவாரமங்கலம். [சோ; ச; பாதாளேசுரர்—அலங்காரநாயகி; பிரமதீர்த்தம்.]

தஞ்சாவூருக்குக் கிழக்கு 9-மைலிலுள்ள சாலியமங்கலம் ரெயில்வேஸ்டேஷனி லிறங்கி, வடக்கு $2\frac{1}{2}$-மைல் சென்று, கிழக்கே திரும்பி 4-மைல் சென்று அவளிவணல்லூரைச் [11] சேர்ந்து, பின்னும் 1-மைல் கிழக்கே சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

சிவபெருமான் வராக அவதாரங்கொண்ட விஷ்ணுவினுடைய கொம்பை முறித்துத் தம்முடைய மார்பி லணிந்தருளிய ஸ்தலம்.

மண்ணார்நீ ராரழ லார்மலி காலினார்
விண்ணார்வே தம்விரித் தோதுவார் மெய்ப்பொருள்
பண்ணார்பா டலுடை யாரொரு பாகமும்
பெண்ணார்கோ யில்லரி தைப்பெரும் பாழியே. (ச)

**10.** அரசிற்கரைப்புத்தூர்: [சோ; மூ; படிக்காசளித்த ஈசுரர்-அழகாம்பிகை; அரிசிலாறு.]

இஃது 'அழகார்புத்தூர்' என வழங்கிவருகின்றது. "அலைக்கும் புனல்சேர் அரிசிற் றென்கரை அழகார் திருப்புத்தூ ரழகனீரே" எனத் தேவாரத்திலேயே கூறப்பட்டிருக்கின்றது. கும்பகோணத்துக்குத் தென்கிழக்கு $4\frac{1}{2}$-மைல். நல்ல வழி. இதே வழியில் இன்னும் 1-மைல் சென்றால் திருநறையூர்ச் சித்தீச்சுரம் (161) இருக்கின்றது.

உண்மையாநந்த முநிவர் பூசித்த ஸ்தலம். புகழ்த்துணைநாயனார் சிவபெருமானைப் பூசித்து முத்தியடைந்த க்ஷேத்திரம்*. சிறிய கோயில்; சிறிய கோபுரம்.

* நிலந்த ணீரோ டனல்கால் விசும்பி னீர்மையான்
சிலந்தி செங்கட் சோழ னாகச் செய்தானூ
ரலந்த வடியா னற்றைக் கன்றோர் காசெய்திப்
புலர்ந்த காலை மாலை போற்றும் புத்தூரே. (ச)

அருப்புப் போன்முலை யாரல்லல் வாழ்க்கைமேல்
விருப்புச் சேர்நிலை விட்டுநல் விட்டமாய்த்
திருப்புத் தூரனைச் சிந்தை செயச் செயக்
கருப்புச் சாற்றிலு மண்ணிக்குங் காண்மினே. (அ)

* " அகத்தடிமை செய்யு மந்தணன்றா னரிசிற் புனல்
கொண்டு வந்தாட்டு கின்றான்
மிகத்தளர் வெய்திக் குடத்தைநும் முடிமேல்
விழுத்திட்டு நடுங்குதலும்
வருத்தவனுக்கு நித்தற் படியும் வருமென் றொரு
காசினை நின்ற நன்றிப்
புகழ்த்துணை கைபுகச் செய்துகந்தீர் பொழிலார்
திருப்புத்தூர்ப் புரித னீரே." (கூ)

**11. அவளிவணல்லூர்:** [சோ; ச- அ; சாக்ஷிநாயகேசுரர்—சௌந்தர நாயகி; சந்திர புஷ்கரணி.]

தஞ்சாவூருக்கும் நீடாமங்கலத்துக்கும் மத்தியில் உள்ள சாலியமங்கலம் ரெயில்வேஸ்டேஷனுக்கு வடகிழக்கு $6\frac{1}{2}$-மைல். அரித்துவாரமங்கலமாகிய அரதைப்பெரும்பாழிக்குச் (9) சொல்லியிருக்கும் வழியைப் பார்க்க.

வராக அவதாரத்திற் சிவபெருமானாற் கொம்பு முறியப்பெற்ற விஷ்ணுமூர்த்தி பூசித்த ஸ்தலம். காசிபருஷி முதலியோர் பூசித்த திருப்பதி.

பிணியுமிலர் கேடுமிலர் தோற்றமில ரென்றுலகு பேணிப்
பணியுமடி யார்களன பாவமற வின்னருள் பயந்து
துணியுடைய தோலுமுடை கோவணமு நாகமுட னுங்க
அணியுமழ காகவுடை யானுறைவ தவளிவண லூரே. (௪)

நன்மைதா னறிய மாட்டா னடுவிலா வரக்கர் கோமான்
வன்மையே கருதிச் சென்று வலிதனைச் செலுத்த லுற்றுக்
கன்மையான் மலையை யோடிக் கருதித்தா னெடுத்து வாயால்
அம்மையோ என்ன வைத்தார் அவளிவ ணல்லூ ராரே. (அ)

**12.** அவிநாசி: [கொ; சு; அவிநாசியீசுரர்-கருணைம்பிகை; பாதிரிவிருக்ஷம்.]

ஈரோட்டிலிருந்து போத்தனூருக்குப் போகும் வழியிலுள்ள திருப்பூர் ரெயில்வேஸ்டேஷனுக்கு வடக்கு 8-மைல். வழியில் 5-மைலில் திருமுருகன் பூண்டி [238] யிருக்கின்றது. நல்ல வழி. திருப்பூருக்கு அடுத்த ஸ்டேஷனாகிய வஞ்சிப்பாளயத்துக்கு நேர் வடக்கு 5—மைல்.

அவிநாசி என்றால் விநாசமில்லாதது என்று பொருள்.

† சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் முதலைவாயினின்றும் பிராமணப் பிள்ளையை மீட்டுக்கொடுத் தருளிய ஏரியும் இருக்கின்றது. அதன் தெற்கில்தான் திருப்புக்கொளியூர் இருந்ததாம். அங்கே யிப்பொழுது வீடுகள் ஒன்றுமில்லை. கொல்லைவெளியா யிருக்கின்றது. ஏரிக் கரை யின்கீழ் சுந்தரமூர்த்தி ஸ்வாமிகளின் கோயில் இருக்கின்றது. அக் கோயிலில் முதலை வாயினின்றும் பிள்ளையை அழைப்பித்த பாவனை காட்டப்பட் டிருக்கின்றது.

கோயிலில் ஒரு பழைய பாதிரி விருக்ஷத்தின் கீழ் ஓர் அம்மன் இருக்கின்றது. அம்மன் அங்கே தவஞ்செய்ததாகச் சொல்லுகிறார்கள். 63-நாயன்மார்களுடைய விக்கிரகங்கள் செப்பிற் செய்யப்பட்டிருக் கின்றன. நந்தி—பெரிய உருவம். முருகர் ஆறு திருமுகங்களுடன் விளங்குகின்றார். ஸ்தலபுராணம் அச்சிடப்பட் டுள்ளது.

† உரைப்பா ருரையுகந் துள்கவல் லார்தங்க ளுச்சியா
யரைக்கா டரவா வாதியு மந்தமு மாயினாய்
புரைக்காடு சோலைப் புக்கொளி யூரவி நாசியே
கரைக்கான் முதலையைப் பிள்ளை தரச்சொல்லு காலனையே. (க)

**13.** திருவழுந்தூர் என்பது தேரழுந்தூர். [சோ; ச; வேதபுரீசுரர்- சௌந்தராம்பிகை; வேத தீர்த்தம்.]

மாயூரத்துக்குத் தென்மேற்கு 5½-மைலிலுள்ள குற்றாலம் ரெயில்வேஸ்டேஷனுக்குத் தென்கிழக்கு 3-மைல்.

வேதங்களும், விண்ணவர்களும், அஷ்டதிக்குப் பாலகர்களும் பூசித்த ஸ்தலம். அழுந்தை மறையவரின் பெருமையைத் திருஞான சம்பந்தமூர்த்தி ஸ்வாமிகள் "அழுந்தை மறையோர் வழிபாடுசெய் மாமட மன்னினையே" என விசேடித்துக் கூறியிருத்தல் காண்க*.

மேற்குப்பார்த்த சந்நிதி. மேற்புறம் பெரியகோபுரம். கோயிலுக்கு வெளியில் மேற்புறத்தில் வேததீர்த்தம் இருக்கிறது. பாடல் பெற்ற விஷ்ணு கோயில் மேற்கு ¼-மைலில் இருக்கின்றது. பெருமாள் நின்ற திருக்கோலம்.

* தோழுமாறு வல்லார் துயர்தீர நினைந்
தெழுமாறு வல்லா ரிசைபாட விம்மி
யழுமாறு வல்லா ரழுந்தை மறையோர்
வழிபாடு செய்மா மடமன் னினையே. (ச)

**14. அறையணிநல்லூர்:** [நடு; ச; அறையணி நாதேசுரர்—அருள்நாயகி; பெண்ணையாறு.]

திருக்கோவலூர் ரெயில்வே ஸ்டேஷனுக்குத் தென்கிழக்கு அரைக்கால் மைல். பெண்ணையாற்றின் வடகரை.

கோயில் ஒரு சிறு குன்றின்மேற் கட்டப்பட்டிருக்கின்றது. சந்நிதி மேற்குப் பார்த்தது. பெரிய கோபுரம். கோயிலுக்குக் கிழக்கிலுந் தெற்கிலும் பாறையில் ஒரு பெருங்குளம் இருக்கின்றது. இதற்கருகிற் பஞ்சபாண்டவர் குகை என ஐந்து அறைகளும் திரௌபதை யிருந்ததொரு சிற்றறையும் அதற்கெதிரில் ஒரு சிறு சுனையும் உள்ளன. விநாயகருருவம் சுவரிலேயே அமைந்திருக்கின்றது. பாறையும் கோபுரமும் வெகு அழகாயுள்ளன. பிரசண்டருஷி பூஜித்த ஸ்தலம். இதற்கெதிரிற் பெண்ணையாற்றின் தென்கரையில், திருக்கோவல் வீரட்டம் (124) இருக்கின்றது.

தக்க னார்பெரு வேள்வியைத் தகர்த்துகந்தவன் றாழ்சடை
முக்க ணன்மறை பாடிய முறைமை யான்முனி வர்தொழ
அக்கி னோடெழி லாமைபூ ணண்ண லாரறை யணிநல்லூர்
நக்க னாரவர் சார்வலால் நல்கு சார்விலோம் நாங்களே. (ச)

**15. அனேகதங்காபதம்:** [வட ; ச ; அருண்மன்னேசுரர் — மனோமணியம்மை.]

இது வடநாட்டு ஸ்தலங்கள் ஐந்தினில் ஒன்று. இந்து அம்பிகை தவஞ்செய்த ஸ்தலமாகிய 'கௌரிகுண்டம்' என்று சொல்லப்படுகின்றது. இதற்கு வழி சரியாகத் தெரியவில்லை.

சூரியனும் சந்திரனும் பூசித்த ஸ்தலம்.

தந்தத் திந்தத் தட மென்றரு வித்திரள் பாய்ந்துபோய்ச்
சிந்த வெந்த கதி ரோனொடு மாசறு திங்களா
ரந்த மில்ல வளவில்ல வனேகதங் காபத
மெந்தை வெந்தபொடி நீறணிவார்க்கிட மாவதே. (ச)

**16. அன்பி லாலந்துறை:** (கீ ழன்பில்). [சோ ; ச—அ ; சத்தியவாகேசுரர் — சௌந்தரநாயகி ; கொள்ளிடநதி.]

லால்குடி ரெயில்வே ஸ்டேஷனுக்குக் கிழக்கு 3—மைல். பிரமன் முதலியோரும் வாகீசமுநிவரும் பூசித்த ஸ்தலம். கொள்ளிடத்துக்குத் தென்கரையில் நின்ற சம்பந்தர்—அப்பர் இவர்களது பாடல்களைச் செவியேற்ற "செவிசாய்த்த விநாயகர்" திருவுருவம் கோயிலுள் பிராகாரத்தில் தென்மேற்கி லிருக்கின்றது.

நீடும்புனற் கங்கையுந் தங்க முடிமேல்
கூடும்மலை யாளொரு பாக மமர்ந்தார்
மாடும்முழ வம்மதி ரம்மட மாதர்
ஆடும்பதி யன்பிலா லந்துறை யாரே. (ச)

வானஞ் சேர்மதி சூடிய மைந்தனை
நீநெஞ் சேகெடு வாய்நினை கிற்கிலை
ஆனஞ் சாடியை யன்பிலா லந்துறைக்
கோனெஞ் செல்வனைக் கூறிடக் கிற்றியே. (அ)

**17. திருஅன்னியூர்** என்பது பொன்னூர். [சோ ; ச—அ ; ஆபத் சகாயேசுரர் — பெரியநாயகி ; வருணதீர்த்தம்.]

திருநீடூருக்கு (171) மேற்கு 3-மைல். திருநீடூர் மாயூரத்துக் கடுத்த ரெயில்வேஸ்டேஷன்.

வருணன் பூசித்த ஸ்தலம்.

இதற்கு மேற்கு $2\frac{1}{2}$—மைலில் திருவேள்விக்குடி (271) இருக்கின்றது.

நீதி பேணுவீர்
ஆதி யன்னியூர்ச்
சோதி நாமமே
ஓதி யய்ம்மினே. (ச)

பாறலைத்த படுவெண் டலையினன்
நீறலைத்தசெம் மேனிய னேரிழை
கூறலைத்தமெய் கோளர வாட்டிய
ஆறலைத்த சடையன்னி யூரரே. (அ)

**18.** ஆக்கூர்: [சோ ; ச—அ ; தான்தோன்றியப்பர் – வாணெடுங்கண்ணியம்மை.]

ரெயில்வே ஸ்டேஷன். மாயூரத்திலிருந்து கிழக்கே தரங்கம்பாடிக்குப் போகும் வழியில் 10-மைல்.

கோயில் சிறிது. மாடக்கோயில்; ஆலயத்துக்குத் தான்தோன்றி மாடம் என்று பெயர். அறுபத்துமூன்று நாயன்மார்களில் ஒருவராகிய சிறப்புலிநாயனு ருடைய ஸ்தலம். இத் தலத்து வேளாளர்களைத் திருஞானசம்பந்தமூர்த்தி ஸ்வாமிகள் சிறப்பித்துக் கூறியிருக்கின்றார்

ஓ ரரசன் ஸ்வாமியின் கட்டளைப்படி ஆயிரம் பிராமணர்களுக்கு சந்தர்ப்பணை செய்வித்ததாகவும், அவர்களில் ஸ்வாமியும் ஒருவராய் வந்து புசித்ததாகவும், அது பின்பு அரசனுக்கு வெளிப்பட்டதாகவுஞ் சொல்லுகிறார்கள். ஒரு தனி சந்நிதியில் "ஆயிரத்திலொருவ" ருடைய உற்சவ விக்கிரகம் இருக்கின்றது.

ஆக்கூருக்குக் கிழக்கு 3-மைல் திருக்கடவூர் (63).

வாளார்கண் செந்துவர்வாய் மாமலையான் றன்மடந்தை
தோளாகம் பாகமாப் புல்கினான் றொல்கோயில்
வேளாள ரென்றவர்கள் வள்ளன்மையான் மிக்கிருக்குந்
தாளாள ராக்கூரிற் றான்றோன்றி மாடமே. (ச)

ஓதிற் றொருநூலு மில்லை போலும்
உணரப் படாததொன் றில்லை போலும்
காதிற் குழையிலங்கப் பெய்தார் போலும்
கவலைப் பிறப்பிடும்பை காப்பார் போலும்
வேதத்தோ டாறங்கஞ் சொன்னார் போலும்
விடஞ்சூழ்ந் திருண்ட மிடற்றார் போலும்
ஆதிக் களவாகி நின்றார் போலும்
ஆக்கூரிற் றான்றோன்றி யப்ப னாரே. (அ)

**19. திருஆடானை:** [பா ; ச; ஆடானைநாதர் : ஆதிரத்நேசர்-சிநேகவல்லி: அன்பாயியம்மை ; சூரியதீர்த்தம்.]

மானாமதுரை ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடகிழக்கு 44-மைல். காளையார் கோயிலுக்குக் (91) கிழக்கு 21-மைல்.

பரமகுடி ரெயில்வே ஸ்டேஷனி லிருந்து 32-மைல். இராமநாத புரத்திலிருந்தும் 32-மைல். அறந்தாங்கியிலிருந்து 30-மைல். ஆனால் இம்மூன்றில் ஒன்றுவது சரியான வழியன்று.

கோயில் பெரிது. கோயிலுக்குட் சூரிய தீர்த்தமும் வெளியிற் கிழ்ப்புறத்தில் வருணதீர்த்தமும் உள்ளன. நீலரத்தினத்தாற் சிவ லிங்கஞ்செய்து சூரியன் பூசித்த ஸ்தலம். அதனால் ஸ்வாமிக்கு ஆதிரத்நேஸ்வரர் என்று பெயர். வருணனுடைய புதல்வர் (வாருணி) துருவாசமுநிவருக்கு மரியாதை செய்யாமையால், அவரால் ஆட்டுத்தலையும் ஆனையின் உடலும் உள்ள உருவெய்தும்படி சபிக்கப் பெற்றார். அந்தச் சாபம் இந்தத் தலத்தில் நிவாரணமாயிற்று. தலத்துக்கு ஆடானை என்றும், ஸ்வாமிக்கு ஆடானைநாதர் (அஜ கஜேஸ்வரர்) என்றும் பெயருண்டாயிற்று. ஸ்தலபுராணம் அச்சிடப் பட்டுள்ளது.

மாதோர் கூறுகந் தேற தேறிய, ஆதியா னுறை யாடானை
போதி னற்புனைந் தேத்து வார்தமை, வாதியா வினை மாயுமே. (ச)

**20. திருஆப்பனூர்** என்பது திருஆப்புடையார் கோவில். [பா ; ச ; திருவாப்புடையார் – குரவங் கமழ் குழலம்மை ; இடபதீர்த்தம்.]

மதுரை ஸ்ரீ மீநாக்ஷியம்மை கோயிலுக்கு வடக்கு 1-மைல். மத்தியில் வைகையாறு ஓடுகின்றது.

சோழாந்தகன் என்னும் பாண்டியராஜன் நிமித்தம் சிவபெரு மான் ஓர் ஆப்பினிடத்தில் தோன்றியருளிய ஸ்தலம். ஸ்வாமிக்கு இடபபுரேசர் என்னும் பெயருண்டு. அருச்சகராகிய சைவ வேதி யருக்காக அவர் உலையிலிட்ட வைகையாற்று மணலை அன்னமாக்கு வித்தமையால் அன்னவிநோதன் என்ற பெயருமுண்டு. நடேசர் விக்கிரகமும், சிவகாமியம்மை விக்கிரகமும் சிலையிலும் செப்பிலும் நன்று யமைந்திருக்கின்றன.

திருப்பூவணம் கந்தசாமிப் புலவ ரியற்றிய ஸ்தலபுராணம் அச்சிடப்பட்டுள்ளது.

துரவங் கமழ் குழலாள் குடிகொண்டு நின்று விண்ணோர்
விரவுந் திரு மேனி விளங்கும் வளை யெயிற்றின்
அரவ மணிந்தானை யணி யாப்பனூ ரானைப்
பரவு மன முடையார் வினைபற் றறுப்பாரே. (௪)

**21. திருஆப்பாடி:** [சோ; அ; பாலுகந்தநாதர் — பெரியநாயகி; மண்ணியாறு; ஆத்திவிருக்ஷம்.]

ஆடுதுறை ரெயில்வே ஸ்டேஷனுக்குச் சமீபம். திருப்பனந்தாளுக்குத் (193) தென்மேற்கு 1-மைல்.

மண்ணி ஆறு கோயிலுக்கு வடக்கே சமீபத்தி லிருக்கின்றது. க்ஷீரபுஷ்கரணி தீர்த்தம். சண்டேசுர நாயனார் பூசைசெய்த ஸ்தலம் *

இங்கிருந்த இடையன் ஒருவன் பாலைக் கறந்து வீட்டிற்குக் கொண்டு போகும்பொழுது, வழியில் தினந்தோறும் கால் தடுக்கிப் பால் கவிழ்ந்துகொண்டு வருதலை யுணர்ந்து, கையிலிருந்த கொடுவாளால் அவ்விடத்தி லோச்ச, அங்கிருந்து இரத்தம் வெளிப்படக் கண்டு, மனமிரங்கிப், "பாலுகந்தநாதரோ" என்று தொழ, ஸ்வாமி அவனுக்கு அநுக்கிரகஞ் செய்த ஸ்தலம்.

* அண்டமா ரமரர் கோமா னாதியெம் மண்ணல் பாதங்
கொண்டவன் குறிப்பி னாலே கூப்பினன் றாபரத்தைக்
கண்டவன் றாதை பாய்வான் காலற வெறியக் கண்டு
தண்டியார்க் கருள்கள் செய்த தலைவரா்ப் பாடி யாரே. (அ)

**22. திருஆமாத்தூர்:** [நடு; மூ; அபிராமேசுரர் — முத்தாம்பிகை; பம்பையாறு; வன்னிவிருக்ஷம்.]

விழுப்புரம் ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடமேற்கு 4-மைல். பம்பை என்னும் ஒரு சிற்றாற்றின் வடகரையி லுள்ளது.

பசுக்களுக்குத் தாயகமான ஸ்தலம். இராமர் பூசித்த ஸ்தலம்†. கோயிலில் வன்னிவிருக்ஷமும், கொன்றை விருக்ஷமும் உள்ளன. அம்மன் கோயிலுக்குப் பெரிய கோபுரம் இருக்கின்றது. அம்மையை "முத்தார்நகை அழகுடையாள்" என்பர் அருணகிரிநாதர். ஊரின் ஒரு புறத்திற் புலவர் புராணம் பாடின 'தண்டபாணி ஸ்வாமிகள்' என்பாரது சமாதி இருக்கின்றது. ஸ்தலபுராணம் அச்சிடப்பட்டுள்ளது.

இரட்டைப் புலவர்கள் திருவாமாத்தூர்க் கலம்பகம் பாடி யிருக்கின்றார்கள்.

மாறுத வெங்கூற்றை மாற்றி மலைமகளை
வேறாக நில்லாத வேடமே காட்டினான்
ஆறாத தீயாடி யாமாத்தூ ரம்மானைக்
கூறாத நாவெல்லாங் கூறாத நாக்களே. (ச)

† தூராம னுங்குழ லாளொரு கூறனார்
அராம னுஞ்சடை யான்திரு வாமாத்தூர்
இராம னும்வழி பாடுசெ யீசனை
நிராம யன்றனை நாளு நினைமினே. (அ)

காய்ந்தவன் காய்ந்தவன் கண்ணழ லாலன்று காமனைப்
பாய்ந்தவன் பாய்ந்தவன் பாதத்தி னாலன்று கூற்றத்தை
ஆய்ந்தவ னாய்ந்தவ னாமாத்தூ ரெம்மடிகளார்
ஏய்ந்தவ னேய்ந்தவ னெம்பிராட்டியைப் பாகமே. (சு)

**23. திருஆரூர்:** [சோ; மூ; வன்மீகநாதர் — அல்லியங்கோதை; கமலாலயம்.]

ரேயில்வே ஸ்டேஷன். நாகபட்டினத்துக்கு மேற்கு 14-மைல். "நிறை செல்வத் திருவாரூர்" எனப்படும் இவ்வூர் ஆலயத்துக்குத் திருமூலட்டானம் என்றும், பூங்கோயில் * என்றும் பெயர்.

"தேங்காவி னூறுந் திருவாரூர்த் தொன்னகரிற்
பூங்கோயி லுண்மகிழ்ந்து போகா திருந்தாரே"

என்பர் அப்பர் ஸ்வாமிகள்.

இலக்குமி பூசித்த ஸ்தலம். "மலர்மென்பாவை
முழுதுள திருவும் என்றும் முடிவில் மங்கலமு மெய்த
விழுமிதி னோற்றுப் பெற்ற வியன் திருவாரூர்.
—கந்தபுராணம், குமாரபுரிப்படலம்—அக.

பிறக்க முத்தியளிக்கும் பெரும்பதி.

"பிறந்தவர் பிறவாப் பெரும்பதி"—கல்லாடம்—ருஉ.
"முத்தியங் குதித்தோ ரெய்தும் பதியது"
—திருவிளையாடற் புராணம்—அருச்சனைப்படலம்—கள.

மநுநீதிகண்ட சோழருடைய ராஜதானி. சிதம்பரத்தில் இருந்த தேவாரப் பதிகங்களைக் கண்டெடுத்து அவைகளை ஏழு திருமுறைக

ளாக்கி அவற்றையும், எட்டாந் திருமுறையாகிய திருவாசகம் திருக்கோவையாரையும், ஒன்பதாந் திருமுறையாகிய திருவிசைப்பா திருப்பல்லாண்டையும், பத்தாந் திருமுறையாகிய திருமந்திரத்தை யும், திரு ஆலவாயுடையார், காரைக்காலம்மையார், சேரமான் பெருமாள்நாயனார், நக்கீரர், பட்டினத்துப் பிள்ளையார், நம்பியாண்டார் நம்பி முதலிய பன்னிருவர் செய்த பிரபந்தங்க ளாகிய பதினோராந் திருமுறையையும், செப்பேடுசெய்து தியாகேசர் சந்நிதியில் ஏற்றுவித்த அபயகுலசேகர சோழ மகாராஜரும், அதற்குப்பின் சேக்கிழார் நாயனார் அருளிச்செய்த பெரிய புராணத்தைப் பன்னிரண்டாந் திருமுறை யென வகுத்து அதனையும் செப்பேடு செய்து தியாகேசர் சந்நிதியில் ஏற்றுவித்த அநபாய சோழ மகாராஜரும் அரசாட்சி செய்த அரும்பதி. சுந்தரமூர்த்திநாயனார் திருத்தொண்டத் தொகை அருளிச்செய்த 'தேவாசிரியன்' என்னும் ஆயிரக்கால் மண்டபத்தையும், அவர் விருத்தாசலத்தில் மணிமுத்த நதியில் இட்ட பொன்னைப் பரவையாருக்கு எடுத்துக்கொடுத்த 'கமலாலயம்' என்னுந் திருக்குளத்தையும் உடைய ஸ்தலம். சுந்தரமூர்த்தி நாயனார் பொருட்டுத் தியாகேசர் நள்ளிருளிற் பரவையாரிடம் தூது சென்ற பழம்பதி. "அடியேற் கெளிவந்த தூதனை" என்பர் அந் நாயனாரும்.

காஞ்சீபுரத்தில் ஒரு கண் பார்வை பெற்ற அவர், "மீளா அடிமை" என்னுந் திருப்பதிகம்பாடி மற்றொரு கண் பார்வையும் பெற்ற ஸ்தலம். அவரிடம் சேரமான் பெருமாள் நாயனார் வந்து சிநேகமான திருப்பதி.

விறன்மிண்ட நாயனார், நமிநந்தியடிகள் நாயனார், செருத்துணை நாயனார், தண்டியடிகள் நாயனார், கழற்சிங்க நாயனார் முதலிய அடியார்கள் முத்திபெற்ற முதுநகர்.

சப்தவிடங்கத் தலங்களுள் முதன்மையான ஸ்தலம் *.

"திருவாரூர்த் தேரழகு" என ஒ ருலகவழக் குள்ளது. திருவாரூரிற் கோயில், குளம், செங்கழுநீ ரோடை இவை யொவ்வொன்றும் அவ்வைந்து வேலிக ளென்பர்.

'அஞ்சனை வேலி யாரூர் ஆதரித் திடங்கொண்டாரே' என்பது தேவாரம். கோயில் மிகவும் பெரிது. நாற்புறமுங் கோபுரங்கள் உள்ளன. கோயிலுள் வெளிப்பிராகாரத்தில் அநேக இலிங்கங்கள் சிறு ஆலயங்களில் இருக்கின்றன.

ஆடகேச்சுரம் என்னும் ஆலயமும் கோயிலுக்குள் இருக்கின்றது. அதிற் பிலம் ஒன்று கல்லினால் மூடப்பட்டிருக்கிறது. இது புற்றிடங் கொண்டார் கோயிலுக்குத் தென்கீழ்த் திசையி லிருக் கின்றது. இதற்கு நாகபிலம் என்று பெயர். அதில் எழுந்தருளியுள்ள ஆடகேசரைத் தரிசித்துப் பூமியிலுள்ளார் எல்லோரும் சுவர்க்க லோகத்தை அடைந்தமையால், அவ்வுலகத்தில் இடமில்லாமற் போனதை யுணர்ந்த இந்திரன் அரதனசிருங்கம் என்கிற மலை யொன்றாற் பிலத்தை அடைத்தனன் என்ப. இதனைத் திருவாரூர்ப் புராணத்தா லறியலாகும்.

நீலோற்பலாம்பாள் அல்லது அல்லியங்கோதை என்பது அம்மையின் பெயர். கமலாம்பாள் சந்நிதி தனியாக மேற்குக் கோபுரத்துக்குச் சமீபத்திலிருக்கின்றது. கமலாலய ஈசான மூலையில் மாற்றுரைத்த பிள்ளையார் ஆலயம் இருக்கின்றது. தெற்குக் கோபுரத் துக் கருகிற் பரவை நாச்சியார் கோயி லிருக்கின்றது. மநுச்சோழன் மகன் தேர் ஏறிச் சென்றதும், பசுவின் கன்று இறந்ததும், தன் மகன் மீது சோழன் தேரை ஊர்ந்ததும் ஆன ஐதிஹ்யங்களைக் காட்டக் கல்லினால் தேர் முதலிய செய்யப்பட்டிருப்பதைக் கிழக்குக் கோபுரத் துக் கப்பாற் காணலாம்.

கமலாலயத்தின் மத்தியில் ஒரு சிறு கோயி லிருக்கின்றது. இத்தலத்தின் பெருமையைக் காட்டும் பாடல் :

" திருமகள் தவஞ்செய் செல்வத் திருவாரூர் பணிவ னென்னு
ஒருவனே முடிந டந்து மீண்டிடின் ஒப்பில் காசி
விரிபுனற் கங்கை யாடி மீண்டவ னுவ னென்றால்
இருடிகாள் ஆரூர் மேன்மை பிரமற்கு மியம்ப வற்றோ."

—திருவாரூர்ப்புராணம்—தலமகிமைச் சருக்கம்—எக.

சம்பந்த முனிவ ரியற்றிய திருவாரூர்ப் புராணமும், மீநாக்ஷி சுந்தரம் பிள்ளையவர்கள் பாடிய தியாகராஜலீலையும், அந்தகக் கவி-வீரராகவ முதலியார் செய்த திருவாரூர் உலாவும் அச்சிடப்பட் டுள்ளன.

கருத்த னேகரு தீர்புர மூன்றெய்த
ஒருத்த னேயுமை யாளொரு கூறனே
திருத்த னேதிரு வாரூரெந் தீவண்ண
அருத்த வென்னெனை யஞ்சலென் னுதே. (ச)

* உயிரா வணமிருந் தூற்றுநோக்கி
யுள்ளக் கிழியி னுருவெழுதி
உயிரா வணஞ்செய்திட் டுன்கைத் தந்தா
லுணரப் படுவாரோ டொட்டிவாழ்தி
அயிரா வணமேறா தானே றேறி
யமரர்நா டாளாதே யாரூ ராண்ட
அயிரா வணமேயென் னம்மானே நின்
னருட்கண்ணா னோக்காதா ரல்லாதாரே. (அ)

மண்ணினை யுண்டுமிழ்ந்த மாயனு மாமலர்மேல்
அண்ணலு நண்ணரிய ஆதியை மாதினொடும்
திண்ணிய மாமதில் சூழ் தென்திரு வாரூர்புக்
கெண்ணிய கண்குளிர என்றுகொ லெய்துவதே. (சு)

**24.** திருஆரூர் அரநெறி: [சோ; அ; அரநெறி யப்பர்—வண்டார் குழலி.]

இச் சந்நிதி திருவாரூர் திருமூலட்டானம் (23) என்னும் பெரிய ஆலயத்தின் இரண்டாம் பிராகாரத்தில் மேற்கு முகமா யுள்ளது.

நமிநந்தியடிகளுயனார் தண்ணீரால் திருவிளக்கேற்றி வைத்த ஸ்தலம். இதனைத் திருநாவுக்கரசு ஸ்வாமிகள் தாமருளிச் செய்த திருவாரூ ரரநெறித் திருத்தாண்டகத்தில்,

"நந்திபணி கொண்டருளு நம்பன்"—எனவும்,

திருவாரூர்த் திருவிருத்தத்தில்,

"ஆராய்ந் தடித்தொண்ட ராணிப்பொ னாரூ ரகத்தடக்கிப்
பாரூர் பரிப்பத்தம் பங்குனி யுத்திரம் பாற்படுத்தான்
நாரூர் நறுமலர் நாத னடித்தொண்ட னம்பிநந்தி
நீராற் றிருவிளக் கிட்டமை நீணா டறியுமன்றே."—

எனவுஞ் சிறப்பித்துப் பாராட்டிக் கூறியுள்ளார்.

பாலை நகுபனி வெண்மதி பைங்கொன்றை
மாலையுங் கண்ணியு மாவன சேவடி
காலையு மாலையுங் கைதொழு வார்மனம்
ஆலய மாரூ ரரநெறி யார்க்கே. (அ)

**25.** திருஆரூர்ப் பரவையுண்மண்டளி: [சோ; சு; தூவாயநாதர்-பஞ்சின் மெல்லடி யம்மை.]

இவ்வாலயம் திருவாரூர்ப் பெரியகோயிலின் மஹாரத நிலைக்குச் சமீபத்தில் தென்மேற்கில் உள்ளது. இது துலாநாயனார் (*தூவாய் நாயனார்) கோயில் என்று சொல்லப்படுகின்றது. ஒருகாலத்து

வருணன் இந்நகரமீது அனுப்பிய கடலை உண்டமைபற்றி இத் தலத்துக்குப் பரவை யுண் மண்டளி என்னும் பெய ரெய்தியது.

துருவாச மாமுநி பூசித்த ஸ்தலம். ஸ்வாமியின் உருவம் கண்ணாடிபோலப் பளபளப்பா யிருக்கின்றது. தூர்வாசருடைய உருவம் விநாயகர் பக்கத்தி லிருக்கின்றது. சிறிய குளம் ஒன்று கோயிலுக்குள் இருக்கின்றது. அதில் முழுகித்தான் சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் ஒரு கண் பார்வை பெற்றனர்.

* தூவாயா தொண்டுசெய் வார்படு துக்கங்கள்
காவாயா கண்டுகொண் டாரைவர் காக்கினு
நாவாயா லுன்னையே நல்லன சொல்லுவேற்
காவாவென் பரவையுண் மண்டளி யம்மானே. (க)

**26.** திருஆலங்காடு: (வடாரணியம்; பழையனூர்—ஆலங்காடு).
[தொ ; மூ ; தேவர்சிங்கப் பெருமான்—வண்டார் குழலி ; முத்தி தீர்த்தம் ; பலாவிருக்ஷம்.]

சென்னபட்டணத்துக்கு மேற்கு 37—மைலிலுள்ள திருஆலங்காடு ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடகிழக்கு 3—மைல். இடையில் ஒரு சிற்ருறு ஓடுகின்றது.

பஞ்ச சபைகளில் ஒன்ருகிய ரத்நசபையை யுடைய ஸ்தலம். சிவபெருமான் காளியுடன் நிருத்தஞ் செய்தருளிய ஸ்தலம்.

'ஆடினர் காளி காண ஆலங்காட் டடிக ளாரே'

என்பது தேவாரம்.

கொடிய வெஞ்சினக் காளியிக் குவலய முழுது
முடிவு செய்வனென் றெழுந்தனாள் முளரியோன் முதலோ
ரடைய அஞ்சலும் அவள்செருக் கழிவுற அழியாக்
கடவு ளாடலால் வென்றதோர் வடவனங் கண்டான்.

—கந்தபுராணம்—வழிநடைப்படலம்-அ.

அண்டம், புழைபட விடத்தா ணீட்டி
யற்புதன் காளிதோற்க ஆடியதிது.

—திருவிளையாடல்—அருச்சனை—கஅ.

திருக்குளம் பெரிது. இதற்கு வடகிழக்கிலும், கோயிலுக்கு வடமேற்கிலும் காளிகோயில் இருக்கின்றது. காரைக்கா லம்மையார் கைலாசகிரியிலிருந்து தலையாலே நடந்து வந்து, ஸ்வாமியைத் தரிசித்து, அவருடைய குஞ்சிதபாதத்தின் கீழ்ச் சிவாநந்தத்தை

யநுபவித்துக்கொண்டிருக்கும் ஸ்தலம். அவ்வம்மையார் அருளிச்செய்த திருப்பதிகத்தைப் பெற்றுள்ள க்ஷேத்திரம்.

ஒரு செட்டிப்பிள்ளைக்குத் தாங்கள் கொடுத்த வாக்கைக் காப்பாற்றும் நிமித்தம் தங்கள் உயிரைக்கொடுத்த மேன்மையாளர்களாகிய வேளாளகுலத்தார் வசிக்கும் பழையனூர் இதற்குக் கிழக்கு 1-மைலிலிருக்கின்றது. இங்கும் ஒரு சிவாலயம் உண்டு. இங்ஙனம் 'பழையனூரார் இயம்புமொழி காத்த கதை'யினைத் திருஞானசம்பந்தர் 'துஞ்சவருவாரும்' என்னும் திருவாலங்காட்டுப் பதிகத்திற் சிறப்பித் தோதி யுள்ளார். *

ஸ்தலபுராணம் அச்சிடப்பட்டுள்ளது.

துஞ்ச வருவாருந் தொழுவிப் பாரும் வழுவிப்போய்
நெஞ்சம் புகுந்தென்னை நினைவிப் பாரு முனைநட்பாய்
வஞ்சப் படுத்தொருத்தி வாணாள் கொள்ளும் வகைகேட்
டஞ்சும் பழையனூ ராலங் காட்டெம் மடிகளே. (ச)

வெள்ளநீர்ச் சடையர் போலும் விரும்புவார்க் கெளியர் போலும்
உள்ளுளே யுருகி நின்றங் குகப்பவர்க் கன்பர் போலும்
கள்ளமே வினைக ளெல்லாங் கரிசறுத் திடுவர் போலும்
அள்ளலம் பழனை மேய ஆலங்காட் டடிக ளாரே. (அ)

வண்டார் குழலி யுமைநங்கை பங்கா கங்கை மணவாளா
விண்டார் புரங்க ளெரிசெய்த விடையாய் வேத நெறியானே
பண்டாழ் வினைகள் பலதீர்க்கும் பரமா பழைய னூர்மேய
அண்டா ஆலங் காடாவுன் அடியார்க் கடிய னாவேனே. (க)

**27. திரு ஆலம்பொழில்:** [சோ; அ; ஆத்மநாதேசுரர்-ஞாநாம்பிகை; காவிரி; ஆலவிருக்ஷம்.]

தஞ்சாவூரிலிருந்து வடக்கே திருவையாற்றுக்குப் போகும் வழியில் 3-மைல் சென்று திருக்கண்டியூரை (68) யடைந்து, அங்கிருந்து மேற்கே 2-மைல் சென்று, திருப்பூந்துருத்தியை (212) யடைந்து, பின்னும் 1-மைல் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

அஷ்டவசுக்கள் பூசித்த ஸ்தலம். மேற்குப் பார்த்த சந்நிதி. கோயிலுக்கெதிரிற் பெரிய தாமரைத் தடாகம் இருக்கின்றது.

பார்முழுதாய் விசும்பாகிப் பாதாளமாம்
பரம்பரனைச் சுரும்பமருங் குழலாள் பாகத்
தாரமுதா மணிதில்லைக் கூத்தன் றன்னை
ஆட்போக்கி யம்மானை யெம்மா னென்று

வாரமதா மடியார்க்கு வார மாகி
வஞ்சனைசெய் வார்க்கென்றும் வஞ்ச னாகுஞ்
சீரரசைத் தென்பரம்பைக் குடியின் மேய
திருவாலம் பொழிலானைச் சிந்தி நெஞ்சே. (அ)

**28.** திரு ஆலவாய் என்பது மதுரை. [பா; ச-அ; சொக்கநாதர்-மீனாக்ஷியம்மை; பொற்றாமரை—வைகையாறு; கடம்பவிருக்ஷம்.]

ரெயில்வே ஸ்டேஷன். பாண்டிநாட்டின் ராஜதானி. சோமசுந்தரக் கடவுள் 64-திருவிளையாடல்களைச் செய்தருளிய ஸ்தலம். கபிலர், பாணர், நக்கீரர் முதலிய பொய்யடிமையில்லாத புலவர்களாகிய சங்கத்தார் இருந்த இடம். விபூதி, ருத்திராக்ஷம், சடைமுடி என்னும் மூன்றையுந் தரித்து மூர்த்திநாயனார் அரசாட்சி செய்த க்ஷேத்திரம். அரிமர்த்தன பாண்டியராஜன் காலத்தில் மாணிக்கவாசக ஸ்வாமிகள் 'தென்னவன் பிரமராயன்' என்னும் பெயருடன் மந்திரியா யிருந்த பட்டணம். திருஞான சம்பந்த மூர்த்திநாயனார், சமணசமயத்திற் பிரவேசித்திருந்த கூன்பாண்டியருடைய சுரநோயை "மந்திரமாவது நீறு" என்னுந் திருநீற்றுப்பதிகம் ஓதித் தீர்த்தருளியும், "போகமார்த்த பூண்முலையாள்" என்னுந் திருநள்ளாற்றுப்பதிகம் எழுதியிருந்த ஏட்டைக் கனலி லிட்டு வேகாம லெடுத்தும், "வாழ்க அந்தணர்" என்னும் திருப்பாசுரம் எழுதிய ஏட்டை வைகையாற்றிலே விட்டு நீரை யெதிர்த்துக்கொண்டு செல்லும்படியாகச் செய்தும், இவ்வாறு சமணர்களை வென்று, பாண்டியருடைய கூனை நீக்கி, அவரை நெடுமாறனுக்கிச் சைவருமாக்கிப் பாண்டியநாடு முழுவதும் பரவியிருந்த சமண் இருளைப்போக்கிச் சைவ ஒளியைப்பரப்பிய திருப்பதி. அரசருடைய மனைவியாரும் சைவ சிரோமணியு மாகிய மங்கையர்க் கரசியாரும், மந்திரியா ராகிய குலச்சிறை நாயனாரும் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாராலே "மங்கையர்க்கரசி" என்னுந் தேவாரத் திருப்பதிகத்திலே சிறப்பித்துப் பாடப்படும்படியான பெரும்பாக்கியத்தைப் பெற்று வாழ்ந்திருந்த வளநகர்*. கோயில் மிகப் பெரிது. பெரிய பிராகாரம் ஆடிவீதி யெனப்பெறும். பஞ்ச சபைகளில் ஒன்றாகிய ரஜத சபையை (வெள்ளியம்பலத்தை) உடைய ஸ்தானம்.

எல்லாம்வல்ல சித்தருடைய திருவுருவம் சுவாமி கோயிலில் வாயுதிக்கில் இருக்கின்றது. மீனாக்ஷியம்மன் சந்நிதிக் கெதிரி லுள்ள கிளிமண்டபத்தில் ஸ்தல விநாயக ராகிய சித்திவிநாயகர், சுப்ரமண்ய ஸ்வாமி இவர்கள் சந்நிதானங்கள் இருக்கின்றன. கோயிலுக்குள்

அம்மன் சந்நிதிக்குத் தென்கீழ்பால் பொற்றாமரைத் தடாகம் இருக்கின்றது.

நாக முமிழ்ந்த விஷத்தைச் சிவபெருமான் நீக்கி, அமுதத்தால் மதுரமாக்கின காரணத்தால் 'மதுரை' என்னும் பெயர் போந்தது.

திருவம ரருள்சேர் சொக்கன் தேவர்கள் தேவன் வெய்ய
அரவுமி ழால வாற்றை மதுரமாக் குதலா லாங்கு
வார்புகழ் பதிக்கு நாமம் மதுரைமா நகரி யென்றே
பரிவுற அன்று முன்னுப் பரந்தது பாரின் மீது."

—மதுரையான திருவிளையாடல்–கரு

## ஸ்தலத்தின் பெருமை :

தேடி நான்முகன் செங்கண்மால் காண்கிலான் திங்கள்
சூடி னுனடி யார்மனத் தான்மறைத் தொகுதி
பாடி னுனரு ளாலறு பத்து நா லாட
லாடி னுனதி லெனினதன் பெருமையா ரறைவார் ?

—சீகாளத்திப் புராணம்-நக்கீரச் சருக்கம்–உ.

மின்னவிரம் பலங்காணக் காசிநகர் வதிந்திறக்க வியன் காளத்திப்
பொன்னகரம் பக்தியினுல் வழிபாடு செயவளிக்கும் போகம் வீடு.
அறந்தழையுந் திருவால வாய்கேட்ட வுடன்போக மளிக்த மீண்டு
பிறந்திறவாப் பேரின்பக் கதியளிக்கும்.

—திருவிளையாடல்–தலவிசேடம்–4,5.

வீமநாத பண்டிதர் பாடிய கடம்பவன புராணம், பரஞ்சோதி முநிவ ரருளிய திருவிளையாடற் புராணம், பெரும்பற்றப் புலியூர் நம்பி இயற்றிய வேப்பத்தூரார் திருவிளையாடல் எனவழங்கும் "திருவாலவாயுடையார்" திருவிளையாடற்புராணம், மதுரைக் கலம்பகம், மீநாக்ஷியம்மை பிள்ளைத்தமிழ் முதலிய நூல்கள் அச்சிடப்பட்டுள்ளன.

※ மங்கையர்க் கரசி வளவர் கோன்பாவை வரிவளைக் கைம்மட மானி
பங்கயச் செல்வி பாண்டிமா தேவி பணிசெய்து நாடொறும் பரவப்
பொங்கழ லுருவன் பூதநா யகனுல் வேதமும் பொருள்களு மருளி
அங்கயற் கண்ணி தன்னெடு மமர்ந்த வாலவா யாவது மிதுவே.(௪)

வேதியா வேத கீதா விண்ணவ ரண்ணு வென்றென்
ஞேதியே மலர்க டூவி யொருங்கிநின் கழல்கள் காணப்
பாதியோர் பெண்ணை வைத்தாய் படர்சடை மதியஞ் சூடும்
ஆதியே யால வாயி லப்பனே யருள்செய் யாயே. (அ)

**29.** திருஆவடுதுறை: [சோ ; மூ ; மாசிலாமணீசுரர்—ஒப்பிலாமுலையம்மை ; கோமுத்திதீர்த்தம் ; படரரசு விருக்ஷம்.]

மாயூரத்துக்கு மேற்கு 10–மைலிலுள்ள நரசிங்கன்பேட்டை ரெயில்வே ஸ்டேஷனுக்குக் கிழக்கு 1½மைல்.

திருமூலநாயனார் வருஷத்துக்கு ஒவ்வொரு பாடலாக மூவாயிரந் திருப்பாடல்களால் 'திருமந்திரம்' என்னும் அருமையான நூலைச் செய்தருளிய ஸ்தலம். கோயில் மேற்குப் பிராகாரத்தில் அவர் சந்நிதி யிருக்கின்றது. திருவிசைப்பா பாடிய திருமாளிகைத்தேவர் வாழ்ந்த பதி.

திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார், தம்முடைய பிதா யாகஞ் செய்யும் பொருட்டு "இதுவோ வெமை யாளுமா றீவதொன் றெமக் கில்லையே, லதுவோ வுன தின்னரு ளாவடு துறை யரனே"—எனவரும் பதிகம் பாடிப் பொற்கிழி பெற்ற ஸ்தலம். இவ்விஷயத்தை அப்பர் ஸ்வாமிகள் திருவாவடுதுறை - திருநேரிசைப் பதிகத்திற்

"காயிரும் பொழில்கள் சூழ்ந்த கழுமல வூரர்க் கம்பொன்
ஆயிரம் கொடுப்பர் போலும் ஆவடு துறைய னாரே"

என்று பாராட்டியுள்ளார். விநாயகருக்கு அழகிய விநாயகர் என்று பெயர்.

இடரினுந் தளரினு மெனதுறுநோய்
தொடரினு முனகழல் தொழுதெழுவேன்
கடறனி லமுதொடு கலந்த நஞ்சை
மிடறினி லடக்கிய வேதியனே
இதுவோ எமை யாளுமா றீவதொன் றெமக் கில்லையேல்
அதுவோ உனதின்னருள் ஆவடு துறை யரனே. (க)

பாதிப் பெண்ணொரு பாகத்தன் பன்மறை
ஓதி யென்னுளங் கொண்டவ னொண்பொருள்
ஆதி யாவடு தண்டுறை மேவிய
சோதி யேசுட ரேயென்று சொல்லுமே. (அ)

ஒப்பி லாமுலை யாளொரு பாகா வுத்தமா மத்த மார்தரு சடையாய்
முப்பு ரங்களைத் தீவளைத் தங்கே மூவ ருக்கருள் செய்யவல் லானே
செப்ப வானிழற் கீழிருந் தருளும் செல்வ னேதிரு வாவடு துறையு
ளப்ப னேயென்னை யஞ்சலென் றருளா யாரெ னக்குற வமரர்க ளேறே.(க)

**30. ஆலூர்:** [சோ ; ச ; பசுபதீசுரர் — மங்களநாயகி ; பிரமதீர்த்தம்.]

கும்பகோணத்துக்குத் தென்மேற்கு 4-மைலிலுள்ள பட்டீச்சுரத்துக்குத் [180] தென்மேற்கு 4½-மைல்.

இந்தத் தலத்திலுள்ள ஆலயத்துக்குப் பசுபதீச்சுரம் என்று பெயர். இது பசுக்கள் பூசித்த ஸ்தலம்.

புண்ணியர் பூதியர் பூத நாதர் புடைபடு வார்தம்ம னத்தார் திங்கட்
கண்ணிய ரென்றென்று காத லாளர் கைதொழு தேத்தவி ருந்த வூராம்
விண்ணுயர் மாளிகை மாட வீதி விரைகமழ் சோலைசு லாவியெங்கும்
பண்ணியல் பாடல றாத ஆவூர்ப் பசுப தீச்சுரம் பாடு நாவே. (ச)

**31. திருஆனைக்கா** என்பது ஜம்புகேஸ்வரம். [சோ ; மூ ; ஜம்புகேசுரர் — அகிலாண்டநாயகி ; காவிரிநதி; வெள்ளைநாவல் விருக்ஷம்.]

ஸ்ரீரங்கம் ரெயில்வே ஸ்டேஷனுக்குக் கிழக்கு ½-மைல்.

வெள்ளையானை வழிபட்ட ஸ்தலமாதலால், இதற்கு "ஆனைக்கா" (யானைவனம்) என்றும், ஸ்வாமி, ஜம்புநாவல் (வெள்ளைநாவல்) மரத்தடியில் எழுந்தருளியிருப்பதால் "ஜம்புகேஸ்வரம்" என்றும் பெயர் உண்டாயின.

"விறன்மிக்க கரிக்கருள் செய்தவனே"

"வெண்ணாவலின் மேவிய எம் மழகா"

என்பர் திருஞான சம்பந்தர். ஜம்பு நாவல் மரம் ஸ்வாமிக்குச் சமீபத்திற் கருப்ப கிரஹத்துக்கு வெளியி லிருக்கின்றது.

பஞ்சபூத ஸ்தலங்களில் ஒன்றாகிய அப்பு ஸ்தலம். கோயில் மிகப் பெரிது. கோயிலின் மூலஸ்தானத்தில் எப்பொழுதும் ஜலம் நிரம்பியிருக்கும்.

"செழுநீர்த் திரளைச் சென் றாடி னேனே"

என்னும் தேவாரம் இங்கு உணரற்பாலது. முன் ஜன்மத்திற் சிலந்தியாயிருந்து சிவபெருமானை வழிபட்டு, அப்பெரும் புண்ணியத்தினால் அரசராய்ப் பிறந்த * கோச்செங்கட் சோழ நாயனாராலே கட்டுவிக்கப்பட்ட ஆலயத்தையும், அவ்வாலயத்திலே சிவபெருமான் சித்தரா யெழுந்தருளிவந்து திருநீற்றையே கூலியாகக் கொடுத்துக் கட்டுவித்த காரணத்தால் "நீறிட்டான்மதில்" என்று சொல்லப்படும் திருமதிலையும் உடைய விசேஷமான ஸ்தலம்.

* சிலந்தியு மானைக் காவிற் றிருநிழற் பந்தர் செய்து
உலந்தவ ணிறந்த போதே கோச்செங்க ணானு மாகக்
கலந்தநீர்க் காவிரிசூழ் சோணாட்டுச் சோழர் தங்கள்
குலந்தனிற் பிறப்பித் திட்டார் குறுக்கைவீ ரட்ட னாரே. (அ)

"திருவானைக் காவிலோர் சிலந்திக் கந்நாட்
கோச்சோழர் குலத்தரசு கொடுத்தார் போலுங்
குடந்தைக் கீழ்க் கோட்டத்தெங் கூத்தனாரே." (அ)

"அகில காரணர் வினைஞர்பால் பூதியை யளித்து
முகில் சுலாவ நன்கிழைத்த மாமதில்."

—திருவானைக்காப் புராணம்—ஆரஞ்சாத்து படலம்.

"ஆழித் தேர்மறு கிற்பயில் மெய்த்திரு
நீறிட் டான்மதிள் சுற்றிய பொற்றிரு ஆனைக்கா" (திருப்புகழ்).

ஸ்வாமியை அம்மன் பூஜித்த ஐதிஹ்யத்தைக் காட்ட, இன்றும் உச்சிக்காலத்தில் அம்மன்கோயில் குருக்கள் அம்மனைப்போல வேஷந் தரித்து ஸ்வாமி கோயிலுக்கு வந்து அர்ச்சனை செய்கிறார்.

உறையூர்ச் சோழமகாராஜா பதக்கந் தரித்துக்கொண்டு காவிரியில் ஸ்நாநஞ் செய்தபொழுது அது நதியில் விழுந்துவிட, அவர் 'சிவபெருமானே கொண்டருளும்' என்று பிரார்த்திக்க, அந்தப் பதக்கம் திருமஞ்சனக்குடத்திலே அகப்பட்டு அபிஷேகத்தின் பொழுது ஸ்வாமி மேல்விழ, அதனை ஸ்வாமி அணிந்து, அரசருக்குத் திருவருள்புரிந்த ஸ்தலம். இதனைச் சுந்தரமூர்த்தி நாயனார் இத் தலத் தேவாரப் பதிகத்தில், *ஏழாம் பாசுரத்திற் சிறப்பித்துப் பாடியிருக்கின்றார்.

"ஆர நீரோ டேந்திளை ஞானைக் காவு சேர்மினே"
என்பர் சம்பந்த ஸ்வாமிகள்.

வளவர் பெருமான் திருவாரஞ் சாத்திக் கொண்டு வரும்பொன்னிக்
கிளருந் திரைநீர் மூழ்குதலும் வழுவிப் போகக் கேதமுற
அளவில் திருமஞ் சனக்குடத்தி லதுபுக் காட்ட அணிந்தருளித்
தளரு மவனுக் கருள்புரிந்த தன்மை சிறக்கச் சாற்றினார்.

—பெரியபுராணம் ஏயர்கோன். (எஎ)

யாற்றில் மிதந்துவந்த நாவற்பழத்தைச் சம்புமுனிவர் உண்ண அது அவர் வயிற்றின் முளைத்துக் கபாலங் கிழித்து மரமாக வளர்ந்தோங்க, அதன் பாரம் பொறாது, அவர் சிவபெருமானை வேண்ட,

ஈசனும் அவரை அங்கிருக்கச் செய்து, அம்மா நிழலில் தாமும் வீற்றிருப்பதாக ஐதிஹ்யம். கோயிற் சுவரிலும் வெளிக் கம்பத்திலும் இவ்வுருவங்களைக் காணலாம்.

ஸ்தலத்தின் ஐதிஹ்யம், பெருமை முதலியவற்றைக் காட்டும் பாடல்கள் :—

"ஆனைக் காரருட் புரிதலி னானைக்கா வாயிற்று,"

—திருவானைக்காப் புராணம்—கஜாரணியப்படலம்.

"முடங்குகாற் சிலந்தி யானை மலைமகள் முளரி நாட்டத்
தடங்கடல் வண்ண னேற்ற தவநக ரிது"

—திருவிளையாடற் புராணம்—அருச்சனைப் படலம்—உஎ.

சம்பு மாதவன் பராசரன் தாமரைக் கிழவன்
கும்ப மாமுநி திநகரன் குளிர்மதி யிராமன்
உம்பர்கோ னழற் கடவுளென் றிவர்க்கெலா முவந்து
தம்பிரா னருள் தழைதரக் கொடுத்ததித் தலமே.

—திருவானைக்காப் புராணம்—திருமால் வழிபடு படலம்.

வன்றிவலம் புரிதோகை குமலியென்று கழுதைவா யசங்க ளென்று
கொன்றுதசை தின்றுழலும் புலையரென்று வெவரேனுங் கோல மார்ந்த
வென்றிபுனை ஞானதலந் திருப்பரெனின் விண்ணவருண் மேலாய் வாழ்வர்
கன்றெறிந்து கனியுகுத்தோன் சகோதரியென் றுலகியம்புங் கடிப்பூங்
கோதாய்!

மேதலைகய பயன் விழைவோர் ஞானதலத் துறைகவது மேவா தாயின்
ஓதுக அத்தலப் பெயரை யாங்கதுவு முற்றாதே லுரைப்பக் கேட்க
காதலொடு கேட்டவரு மூவகைய பாதகமுங் கடந்து மேலாம்
போதமுணர்ந் தெமதடியிற் புக்கிருப்ப ரிஃதுண்மை பொலங்கொம் பன்னாய்!

—திருவானைக்காப் புராணம்—தலவிசேடப்படலம்.

கச்சியப்பமுநிவ ரருளிய திருவானைக்காப்புராணம் அச்சிடப்பட்டுள்ளது.

* செங்கட்பெயர் கொண்டவன் செம்பியர்கோ
னங்கட்கரு ணைபெரி தாயவனே
வெங்கண் விடையா யெம்வெண் ணாவலுளா
யங்கத் தயர் வாயின ளாயிழையே. (ச)

ஒழுகு மாடத்து ளொன்பது வாயிலுங்
கழுக ரிப்பதன் முன்னங் கழலடி
தொழுது கைகளாற் றூமலர் தூவிநின்
றழும வர்க்கன்ப னானைக்கா வண்ணலே. (அ)

தார மாகிய பொன்னித் தண்டுறை யாடி விழுத்து
நீரி னின்றடி போற்றி நின்மல கொள்ளென வாங்கே
ஆரங் கொண்டவெம் மானைக் காவுடை யாதியை நாளு
மீர முள்ளவர் நாளு மெம்மையு மாளுடை யாரே. (சு)

**32. இடும்பாவனம்:** [சோ ; ச ; சற்குணநாதேசுரர்—மங்களநாயகி.]

திருத்தருப்பூண்டி ஸ்டேஷனுக்குத் தெற்கு 10-மைல். இதற்குக் கிழக்கு ஒருமைலிற் கடிக்குளம் (65) கற்பகனூர் கோயில் இருக்கின்றது. நெடும்பலம், பாண்டி, தில்லைவிளாகம் முதலிய ஸ்டேஷன்களிலிருந்தும் போகலாம்.

இடும்பன் பூசித்த ஸ்தலம். விநாயகர் வெள்ளை விநாயகர். நிறம் வெண்மை. வேதாரணியத்தி லிருப்பது போல இங்கும் ஸ்வாமிக்குப் பின்புறத்திற் பார்வதி பரமேசுரர்கள் மணவாள கோலமா யிருக்கின்றார்கள். கோயிலுக்குக் கிழக்கிற் சீத புஷ்கரணி என்ற திருக்குள மிருக்கின்றது.

நீறேறிய திருமேனியர் நிலவும்முல கெல்லாம்
பாறேறிய படுவெண்டலை கையிற்பலி வாங்காக்
கூறேறிய மடவாளொரு பாகம்மகிழ் வெய்தி
ஏறேறிய விறைவர்க்கிட மிடும்பாவன மிதுவே. (ச)

**33. திருஇடைச்சுரம்:** [தொ ; ச ; இடைச்சுரநாதர்—இமைய மடக்கொடியம்மை.]

செங்கற்பட்டிலிருந்து கிழக்கே திருப்போரூருக்குப் போகும் வழியில் 5-மைல் சென்றால், வழிக்கு வடக்கே $\frac{1}{2}$-மைலில் இந்த ஸ்தல மிருக்கின்றது.

சநற்குமாரமுநிவர் பூசித்த ஸ்தலம்.

வரிவள ரவிரொளி யரவரை தாழ வார்சடை முடிமிசை வளர்மதி சூடிக்
கரிவளர் தருகழல் கால்வல னேந்திக் கனலெரி யாடுவர் காடரங் காக
விரிவளர் தருபொழி லிளமயி லால வெண்ணிறத் தருவிக டிண்ணென வீழு
மெரிவள ரினமணி புனமணி சார லிடைச்சுர மேவிய விவர்வண மென்னே.

**34. திருவிடைமருதூர்:** [சோ ; மூ ; மகாலிங்கேசுரர்—பெருநலமாமுலை நாயகி; காவிரி ; மருதவிருக்ஷம்.]

ரெயில்வே ஸ்டேஷன். கும்பகோணத்துக்கு வடகிழக்கு 5-மைல். வடநூலார் இதனை மத்தியார்ஜுனம் என்பர்.

காவிரியின் தென்கரையி லுள்ளது. தெற்குக் கோபுரம். ரெயில்வே ஸ்டேஷனுக்குச் சமீபம். வடக்குக் கோபுரத்துக்கு நேராக வீர சோழியம் என்னும் கால்வாயைத் தாண்டிக் காவிரிநதிக்குச் செல்ல வேண்டும். திருவிடைமருதூர்க் காவிரித் துறையில், தைப்பூசத்தில், ஸ்நாநஞ் செய்வது மிகவும் விசேஷம். * இதனைத் திருஞானசம்பந்த மூர்த்திநாயனார் "ஓடேகலன்" என்னும் தேவாரத்தில் "வாசங்கமழ்" என்னும் 5-ஆவது திருப்பாட்டினும், "பொங்குநூன் மார்பினீர்" என்னும் தேவாரத்தில் "வருந்திய மாதவத்தோர்" என்னும் 5-ஆவது திருப்பாட்டினும் சிறப்பித்திருக்கின்றார். திருநாவுக்கரசு நாயனாரும் "பாசமொன்றிலராய்" என்னுந் திருக்குறுந்தொகையில் பூச ஸ்நானத்தைச் சிறப்பித்துப் பாடியிருக்கின்றார். வரகுண பாண்டியருடைய பிரமஹத்தியைப் போக்கியருளிய ஸ்தலம். அவர் அநேகந் தொண்டுகள்செய்து முத்திபெற்ற முதுநகர். உருத்திரர், உமையம்மை, விநாயகர், முருகர், பிரமா, விஷ்ணு முதலியோர் பூசித்த ஸ்தலம். 'திருவிடைமருதூர்த் தெரு அழகு' என உலக வழக்கு ஒன்றுளது. கோயில் பெரிது. நாலுபக்கமுங் கோபுரங்க ளிருக்கின்றன.

படித்துறை விநாயகர் பெரிய இடபமூர்த்திக்குக் கிழக்கே வீற்றிருக்கின்றார். ஸ்வாமி சந்நிதானம் மிக நீளமாயும் அழகாகவும் அமைந்துள்ளது. கிழக்குக் கோபுர வாயிலிற் பட்டினத்தார் உருவமும் மேற்குக் கோபுரவாயிலிற் பத்திரகிரியார் உருவமும் உள்ளன.

மூகாம்பிகையம்மன் சந்நிதி அம்மன் கோயிலுக்குப் போகும் வழியில் தனியா யிருக்கின்றது. அம்மையார் மவுநமாயிருந்து தபசு செய்தபடியால் இப்பெய ருண்டாயிற்று.

ஸ்தல ஐதிஹ்யங்களைக் காட்டும் பாடல்கள் :—

"சாமகண் டத்தன் தன்னைத் தானருச் சித்த தென்னர்
கோமகன் பிரம சாயை குறைத்ததிப் பதியாம்"

—திருவிளை : அருச்சனை-உ௩.

"ஒத்த சிந்தையராய்ப் பதினொருகோடி யுருத்திரர் வழிபடு மருது"

—பழநித்தலபுராணம், வராககிரிச் சருக்கம்-௬.

கொட்டையூர்ச் சிவக்கொழுந்துதேசிக ரியற்றிய மருதவன புராணம் அச்சிடப்பட்டுள்ளது.

* வருந்திய மாதவத்தோர் வானோ ரேனோர் வந்தீண்டிப்
பொருந்திய தைப்பூச மாடி யுலகம் பொலிவெய்தத்
திருந்திய நான்மறையோர் சீரா லேத்த இடைமருதிற்
பொருந்திய கோயிலே கோயி லாகப் புக்கீரே. (ரு)

கனியினுங் கட்டி பட்ட கரும்பினும்
பனிமலர்க் குழற் பாவைநல் லாரினுந்
தனிமுடி கவித் தாளு மரசினும்
இனியன் தன்னடைந் தார்க்கிடை மருதனே. (அ)

குற்றந் தன்னொடு குணம்பல பெருக்கிக்
கோல நுண்ணிடை யாரொடு மயங்கிக்
கற்றி லேன்கலை கள்பல ஞானங்
கடிய வாயின கொடுமைகள் செய்தேன்
பற்ற லாவதோர் பற்றுமற் றில்லேன்
பாவியேன் பல பாவங்கள் செய்தேன்
எற்று ளேனெனக் குய்வகை யருளாய்
இடைமரு துறை யெந்தை பிரானே. (சு)

**35. இடையாறு :** [நடு; சு; இடையாற்றீசுரர்—சிற்றிடைநாயகி; பெண்ணை நதி]

திருவெண்ணெய்நல்லூருக்கு வடமேற்கு 3-மைல். அத்தலத்துக்குச் [266] சொல்லியிருக்கும் வழியைப் பார்க்க. மாம்பழப்பட்டு ஸ்டேஷனிலிருந்து தென்மேற்கு $4\frac{1}{2}$-மைல். வழியிற் பெண்ணையாற்றையும் மலட்டாற்றையும் கடக்கவேண்டும்.

சுகர் பூசித்த ஸ்தலம்.

கருக்க நஞ்சமு துண்டகல் லாலன்கொல் லேற்றன்
தருக்க ருக்கனைச் செற்றுகந் தான்றன் முடிமேல்
எருக்க நாண்மல ரிண்டையு மத்தமுஞ் சூடி
யிருக்கு மூரெய்த மானிடை யாறிடை மருதே. (சு)

**36. இந்திரநீலபருப்பதம் :** [வட; ச; நீலாசலநாதர், நீலாம்பிகை ; இந்திர தீர்த்தம்]

இது வடநாட்டுத் தலங்கள் ஐந்தனுள் ஒன்று. தேவேந்திரனுற் பூசிக்கப்பட்ட ஸ்தலம். இதனைத் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர் இத்தலத் தேவாரத்தின் திருக்கடைக்காப்பிலே "இந்திரன் தொழு நீல பர்ப்பதம்" என்று கூறியிருத்தலா லறிக. இதற்குச் சரியான மார்க்கந் தெரியவில்லை.

பூவி னானொடு மாலும் போற்றுறுந்
தேவ னிந்திர நீல பர்ப்பதம்
பாவி யாவெழு வாரைத் தம்வினை
கோவி யாவருங் கொல்லுங் கூற்றமே. (ச)

**37. இராமனதீச்சுரம்:** [சோ; ச; இராமநாதேசுரர் — கருவார்குழலியம்மை, இராமதீர்த்தம்.]

நன்னிலம் ரெயில்வே ஸ்டேஷனில் இறங்கி, கிழக்கே $3\frac{3}{4}$-மைல் சென்று திருப்புகலூர் [203] என்னும் க்ஷேத்திரத்தை அடைந்து, அங்கிருந்து தெற்கே திரும்பி முடிகொண்டான் ஆற்றைக் கடந்து, 1-மைல் சென்றால், இந்த ஸ்தலத்தை அடையலாம்.

இராமனதீச்சுரத்துக்கு மேற்கே திருக்கண்ணபுரம் என்னும் விஷ்ணுஸ்தலம் இருக்கிறது. இராமனதீச்சுரமும் கண்ணபுரமும் சேர்ந்திருக்கின்றன.

இராமர் பூசித்த ஸ்தலம்.

இதற்குக் கிழக்கு 1-மைலில் திருச்செங்காட்டங்குடி [137] இருக்கின்றது.

தாழ்ந்த குழற்சடை முடியதன்மேற்
றோய்ந்த இளம்பிறை துளங்குசென்னிப்
பாய்ந்தகங் கையொடு படவரவம்
ஏய்ந்தவ னிராமன தீச்சுரமே. (௧)

**38. இராமேசுரம்:** [பா; ச-அ; ராமநாதேஸ்வரர்-மலைவளர்காதலி, பர்வதவர்த்தனி; தநுகோடித் தீர்த்தம்.]

ரெயில்வே ஸ்டேஷன். மதுரைக்குத் தென்கிழக்கு 100-மைல்.

இராவணன் முதலியோரைக் கொன்றதால் உண்டான பிரமஹத்திதோஷம் நீங்கும்பொருட்டு ஸ்ரீராமர் சிவலிங்க பிரதிஷ்டை செய்து பூசித்த ஸ்தலம் *.

"மறவாளிலங்கை யிறைமகனை வதைத்த பழியால் மருண்டு, அரி யன்று அறவாள் நேமி யளித்தவனை யருச்சித் தகன்ற அணிநகர்"

—திருவிளை. அருச்சனை (௧௧).

கோயில் மிகவும் பெரிது. கடல் (அக்கினிதீர்த்தம்) கிழக்குக் கோபுரத்துக்கு நேராக இருக்கின்றது. கோடி தீர்த்தம் கோயிலுக்குள் இருக்கின்றது. பிராகாரங்கள் அழகாயும் ஒழுங்காயும் இருக்கின்றன. சேதுமாதவர் சந்நிதி தனியாய் இருக்கின்றது. ஹநுமார் கொண்டு வந்த இலிங்கத்துக்குக் 'காசி விசுவநாதர்' என்று பெயர். இங்குத் தான் முதலில் பூஜை ஆகின்றது. சீதை தாபித்து இராமர் பூசித்த லிங்கம் 'இராம லிங்கம்'.

இராமேசுரத்திலிருந்து தெற்கே 12-மைல் தூரஞ்சென்ருல் தநுஷ்கோடி என்று சொல்லப்படும் ஸ்நாநகட்டம் இருக்கின்றது. அங்கே தான் (சேது) ஸ்நாநஞ் செய்யவேண்டும். தநுக்கோடி ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து ஸ்நாந கட்டம் 2-மைல்.

"நீடுதநுக் கோடியினை நினைந்தாலும் புகழ்ந்தாலும் சேர்கண் டாலும்
வீடுபெற லெளிதாகும்" சேது புராணம்-தநுக்கோடிச் சருக்கம் (உ)

நிரம்பவழகிய தேசிக ரருளிய 'சேது புராணம்' அச்சிடப்பட்டுள்ளது.

* தேவியை வௌவிய தென்னிலங் கைத்தச மாமுகன்
பூவிய லும்முடி பொன்றுவித் தபழி போயற
ஏவிய லுஞ்சிலை யண்ணல் செய்தஇரா மேச்சுர
மேவிய சிந்தையி னார்கடம் மேல்வினை வீடுமே. (சு)

பாசமுங் கழிக்க கில்லா வரக்கரைப் படுத்துத் தக்க
வாசமிக் கலர்கள் கொண்டு மதியினுன் மால்செய் கோயில்
நேசமிக் கன்பி னாலே நினைமினீர் நின்று நாளும்
தேசமிக் கானி ருந்த திருவிரா மேச்சுரமே. (அ)

**39.** திரு இரும்பூளை என்பது ஆலங்குடி. [சோ; ச; காசி ஆரணியேசுரர் - *ஏலவார்குழலியம்மை.]

தஞ்சாவூருக்குக் கிழக்கிலுள்ள நீடாமங்கலம் ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடமேற்கே கும்பகோணம் போகும் வழியில் 4-மைல்.

விசுவாமித்திரர் முதலியோர் பூசித்த ஸ்தலம்.

நச்சித்தொழு வீர்கண டக்கிது சொல்லீர்
* கச்சிப்பொலி காமக் கொடியுடன் கூடி
யிச்சித்திரும் பூளை யிடங்கொண்ட ஈசன்
உச்சித்தலை யிற்பலி கொண்டுழ லூணே. (ச)

**40.** இரும்பை மாகாளம்: [தொ; ச; மாகாளேசுரர் - குயில்மொழியம்மை.]

புதுச்சேரி ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடமேற்கு 5-மைல். இதற்கப்பால் 3-மைலில் அரசிலி [8] என்னும் ஸ்தல மிருக்கின்றது.

மாகாளர் பூசித்த ஸ்தலம்.

பங்குனி உத்திரத்தில் முருகக்கடவுளுக்குப் பல காவடிகள் வருகின்றன. கார்த்திகை சோமவாரந்தோறும் உற்சவம். பிராகாரத்தில் ஆறுமுகக்கடவுள் தேவிமாருடன் வீற்றிருக்கின்ருர்.

நட்டத்தோடு நரியாடுகா னத்தெரி யாடுவான்
அட்டமூர்த்தி யழல்போ லுருவன்னழ காகவே
யிட்டமாக விருக்குமிடம் போலிநும் பைதனுள்
வட்டஞ்சூழ்ந்து பணிவார் பிணிதீர்க்குமா காளமே. (சு)

**41. இலம்பையங்கோட்டூர்:** [தொ; சந்திரசேகரேசுரர்—கோடேந்து முலையம்மை; சந்திர தீர்த்தம்.]

திருவிற்கோலமாகிய [260] கூவத்துக்குச் சொல்லியிருக்கும் வழியைப்பார்க்க. கூவத்துக்குத் தென்மேற்கு $1\frac{1}{4}$-மைல். கூவத்து ஏரியில் ஜலமில்லா திருக்கும்பொழுது அதிலிறங்கிப்போனால் இவ்வளவு சமீபத்தி லிருக்கின்றது. ஏரியில் ஜலமிருந்தால் ஏரிக்கரையின் மேலே 1-மைல் மேற்கே சென்று, பின்பு தெற்கே திரும்பி, ஏரியின் மேற்புறமாகவே $1\frac{1}{2}$-மைல் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம். செம்மையான வழி யில்லை.

அரம்பையர் பூசித்த ஸ்தலம். கூவத்திற்போல இங்கும் ஸ்வாமி தீண்டாத் திருமேனி. திருக்குளம் கோயிலுக்குத் தெற்கில் உள்ளது.

இலம்பையங்கோட்டூர் முழுமையும் இப்பொழுது கிறித்தவக் கிராமமா யிருக்கின்றது. பிரதிதினமும் கூவத்திலிருந்து குருக்கள் வந்து ஒருவேளை பூஜை செய்துவிட்டுப் போகிறார்.

நீருளான் றீயுளா னந்தரத் துள்ளான்
நினைப்பவர் மனத்துளா னித்தமா வேத்தும்
ஊருளா னெனதுரை தனதுரை யாக
ஒற்றைவெள் ளேறுகந் தேறிய வொருவன்
பாருளார் பாடலோ டாடல றாத
பண்முரன் றஞ்சிறை வண்டினம் பாடும்
ஏருளார் பைம்பொழி லிலம்பையங் கோட்டூர்
இருக்கையாப் பேணியென் னெழில்கொள்வ தியல்பே. (சு)

**42. இன்னம்பர்:** [சோ; ச; எழுத்தறிநாதேசுரர்—கொந்தார்பூங் குழலம்மை.]

கும்பகோணத்திலிருந்து மேற்கே 3-மைல் சென்று புளியஞ்சேரி யென்னும் ஊரைச்சேர்ந்து, அங்கிருந்து வடக்கே 1-மைல் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம். சாதாரணமான வழி. கொட்டையூருக்கு [112] வடமேற்கு $1\frac{1}{2}$-மைல்.

அகஸ்தியர் பூசித்து இலக்கணம் உபதேசிக்கப்பெற்ற ஸ்தலம்.

கோயில் சிறிது. கோபுரம் இருக்கின்றது. ஐராவதம் பூஜைசெய்த தலம். கருப்பகிருஹத்தின் மேற்பாகம் யானையின் உருவம் போலச் செய்யப்பட்டிருக்கின்றது. கோயிலுக்கெதிரில் ஐராவததீர்த்தம் இருக்கின்றது. கோயிலுக்குட் பலாமரமும் சண்பகமரமும் இருக்கின்றன. நிர்த்தன விநாயகர் திருக்கோயில் கம்பத்தி லிருக்கிறார். அம்மன் சந்நிதி யிரண்டு; சுருந்தகுந்தளாம்பா சந்நிதி வெளிப்பிராகாரத்தில் தனியாக இருக்கின்றது.

எண்டிசைக் கும்புக ழின்னம்பர் மேவிய
வண்டிசைக் குஞ்சடை யீரே
உண்டிசைக் குஞ்சடையீ ருமை வாழ்த்துவார்
தொண்டிசைக்குந் தொழிலோரே. (௪)

தோழுது தூமலர் தூவித் துதித்துநின்
றழுது காமுற் றரற்றுகின் றாரையும்
பொழுது போக்கிப் புறக்கணிப் பாரையும்
எழுதுங் கீழ்க்கணக் கின்னம்ப ரீசனே. (அ)

**43. திரு ஈங்கோய்மலை** : [சோ ; ச ; மரகதாசலேசுரர்—மரகதவல்லியம்மை.]

இஃது இப்பொழுது திருவிங்கநாதமலையென வழங்கிவருகின்றது. திரிசிராப்பள்ளிக்கு [132] மேற்கிலுள்ள குழித்தலை ஸ்டேஷனிலிறங்கி, வடமேற்கு 1-மைல் சென்று திருக்கடம்பந்துறையைச் [61] சேர்ந்து, அங்கே 1-மைல் அகன்ற காவிரியைக் கடந்துசென்றால் அக்கரையில் திருஈங்கோய்மலை யிருக்கின்றது.

அகஸ்தியமுனிவர் ஈ ரூபமாகச் சென்று ஸ்வாமியைத் தரிசித்த ஸ்தலம். கோயில் குன்றின்மேல் இருக்கின்றது. 500-படிகட்டுக்கள் இருக்கும்.

ஒரே தினத்திற் காலையிற் கடம்பர்கோயிலையும் [61], மத்தியானத்தில் இரத்தினகிரியையும் [251], மாலையில் திருஈங்கோய்மலையையுந் தரிசித்தால் விசேஷ பலன் உண்டென்றும், கார்த்திகை சோமவாரத்தில் இந்தப்படி தரிசிப்பது அதிக விசேஷமென்றுங் கொள்ளப்படுகின்றது. 'காலைக்கடம்பர், மத்தியானச்சொக்கர், அந்தித் திருவீங்கோய் நாதர்' என வழங்குகின்றது.

வானத் துயர்தண் மதிதோய் சடைமேல் மத்த மலர்சூடித்
தேனேத் தனமென் மொழிமான் விழியாள் தேவி பாகமாக்
கானத் திரவி லெரிகொண் டாடுங் கடவு ளுலகேத்த
ஏனத் திரள்வந் திழியுஞ் சார லீங்கோய் மலையாரே. (ச)

**44.** திரு உசாத்தானம் என்பது கோயிலூர். [சோ; ச; மந்திரபுரீசுரர்-பெரியநாயகியம்மை.]

முத்துப்பேட்டை ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடக்கு 2-மைல். ஸ்ரீராமர், லக்ஷ்மணர், ஜாம்புவான், சுக்கிரீவன், ஹநுமார் முதலியோர் பூசித்த ஸ்தலம்.*

இராமர் இலங்கைக்குப் போவதன் முன் இங்கு உபதேசம் பெற்றமையால் ஸ்வாமிக்கு 'மந்த்ரபுரீசுரர்' என்று பெயர். இலிங்கமூர்த்தி வெண்மை நிறச்சுயம்பு. காக்ஷி கொடுத்த நாதரும் இருக்கிறார். கோபுரவாசலில் அதிகாரநந்தி இருக்கிறார். இந்த இடம் முன் மாமரக் காடாக இருந்ததால் தலத்துக்குச் சூதவநம் என்று பெயர். விநாயகருக்குச் சூதவநப் பிள்ளையார் என்று பெயர்.

சூதவந புராணம் அச்சிடப்பட் டுள்ளது.

* "நீரிடைத் துயின்றவன் றம்பிநீள் சாம்புவான்
பேருடைச் சுக்கிரீ வன்அநு மன்றொழுக்
காருடை நஞ்சுண்டு காத்தருள் செய்தவெஞ்
சீருடைச் சேடர்வாழ் திருவுசாத் தானமே. (ச)

**45.** திரு ஊறல் என்பது தக்கோலம். [தொ; ச; உமாபதீசுரர்-உமையம்மை.]

தக்கோலம் ரெயில்வே ஸ்டேஷனுக்குக் கிழக்கு 3-மைல். திருவாலங்காடு [26] ரெயில்வே ஸ்டேஷனிலிருந்தும் இத்தலத்தை யடையலாம். நந்திதேவரது வாயிலிருந்து ஜலம் எப்பொழுதும் விழுந்து கொண்டிருக்கின்றது. இதனால் இவ்வூருக்குத் திருவூறல் என்னும் பெயர் எய்தியது. ஊருக்குக் கிழக்கே ஒருபுறத்தில் கோயில் இருக்கின்றது. கோபுரம் மேற்கி லிருக்கின்றது. கோயிலுக்கு வடக்கில் நந்தி தீர்த்தம் இருக்கின்றது. நந்தி தீர்த்தத்துக்குக் கிழக்கே கல்லாறு என்கிற விருத்தக்ஷீரநதி ஓடுகின்றது. கோயிலுக்குள்ளும் ஒரு திருக்குளம் இருக்கின்றது. பிராகாரத்திற் புதிதாய் ஸ்தாபிக்கப் பட்ட முருகர் கோயில் இருக்கின்றது.

நீரின் மிசைத்துயின்றோ னிறை நான் முகனு மறியா தன்று
தேரும் வகைநிமிர்ந்தா னவன் சேரு மிடம் வினவிற்
பாரின் மிசையடியார் பலர் வந்திறைஞ்ச மகிழ்ந் தாக
மூரு மரவசைத்தான் றிரு வூறலை யுள்குதுமே. (௩)

**46.** எதிர்கோள்பாடி யென்பது மேலைத்திருமணஞ்சேரி. [சோ ; சு ; ஐராவதேசுரர் - மலர்க்குழல்மாதம்மை.]

குற்றாலம் ரெயில்வே ஸ்டேஷனி லிறங்கி வடகிழக்கு 3-மைல் சென்று திருவேள்விக்குடி [271] என்னும் ஸ்தலத்தை அடைந்து, அங்கிருந்து வடக்கு $1\frac{1}{2}$-மைல் சென்றால் இந்தத் தலத்தை அடையலாம். எதிர்கொள்பாடிக்குக் கிழக்கு $\frac{1}{4}$-மைலிற் கீழைத் திருமணஞ்சேரி என வழங்குந் திருமணஞ்சேரி [222] யிருக்கின்றது.

ஐராவதம் பூசித்த ஸ்தலம். வேள்விக்குடியில் திருமணஞ் செய்துகொண்ட இராசகுமாரன் ஒருவன் மனைவியுடன் தன் நகர் செல்லும்பொழுது, சிவபெருமான் அவனுடைய அம்மானைப்போல இந்தத் தலத்திலிருந்து எதிர்கொண்டு, அவனை அழைத்துக்கொண்டு போனதினாலே இதற்கு எதிர்கோள்பாடி என்னும் பெயர் வந்தது.

கூட நீக்கிக் குற்ற நீக்கிச் செற்ற மனநீக்கி
வாச மல்கு குழலி னார்கள் வஞ்ச மனைவாழ்க்கை
யாசை நீக்கி யன்பு சேர்த்தி யென்பணிந் தேறேறு
மீசர் கோயி லெதிர்கொள் பாடி யென்ப தடைவோமே. (௧)

**47.** எருக்கத்தம்புலியூர் என்பது ராஜேந்திர பட்டணம். [நடு ; ச ; நீலகண்டேசுரர் - நீலமலர்க்கண்ணம்மை ; வெள்ளெருக்கு விருக்ஷம்.]

திருமுதுகுன்றத்துக்குத் [237] தெற்கு 7-மைல். நல்ல வழி.

கோயிலுக்குள் வெள்ளெருக்கஞ்செடி யொன்றிருக்கின்றது. திருஞானசம்பந்த ஸ்வாமிகள் அருளிச்செய்த திருப்பதிகங்களை யாழி லிட்டு வாசித்த திருநீலகண்டப்பெரும்பாண நாயனார் திருவவதாரஞ் செய்த ஸ்தலம்.

இதற்குக் கிழக்கு 4-மைலில் ஸ்ரீமுஷ்ணம் என்னும் பிரபலமான விஷ்ணுக்ஷேத்திர மிருக்கின்றது. ஸ்ரீமுஷ்ணம் சிதம்பரத்திலிருந்து [122] 24-மைல்.

விண்ணோர் பெருமானே விகிர்தா விடையூர்தி
பெண்ணா னலியாகும் பித்தா பிறைசூடி
யெண்ணா ரெருக்கத்தம் புலியூ ருறைகின்ற
அண்ணா வெனவல்லார்க் கடையா வினைதானே. (௪)

**48.** திரு எறும்பியூர் என்பது திருவெறும்பூர்.

[சோ ; அ ; எறும்பீசுரர் - நறுங்குழல்நாயகி.]

ரெயில்வே ஸ்டேஷன். திரிசிரபுரத்துக்குக் [132] கிழக்கு $6\frac{1}{4}$–மைல்.

தேவர்கள் எறும்பு ரூபம் எடுத்துவந்து பூசித்த ஸ்தலம். கோயில் குன்றின்மே லிருக்கின்றது. இலிங்கமூர்த்தி வடபுறஞ் சாய்ந்திருக்கின்றார். விஷ்ணுவும் பிரமனும் நைமிச முநிவர்களும் பூசித்த ஸ்தலம்*. 'மேவி வையம் அளந்தவனை நான்முகனை அல்லல் தீர்க்கும் அருமருந்தை'; 'முநிக் கணங்க ளேத்துஞ் சிரெறும்பியூர்'— என்பன தேவாரம்.

* கார்முகிலாய்ப் பொழிவானைப் பொழிந்த முந்நீர்
கரப்பானைக் கடியநடை விடையொன் றேறி
ஊர்பலவுந் திரிவானை யூர தாக
ஒற்றியூ ருடையனாய் முற்று மாண்டு
பேரெழுத்தொன் றுடையானைப் பிரம னோடு
மாலவனு மிந்திரனு மந்திரத்தா லேத்துஞ்
சீரெறும்பி யூர்மலைமேன் மாணிக்கத்தைச்
செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றே னானே. (அ)

**49.** திருஏடகம்: [பா ; ச ; ஏடகநாதேசுரர்-ஏலவார்குழலி ; வைகை ;]

மதுரைக்கு [28] வடமேற்கு $12\frac{1}{2}$ மைல். செம்மையான வழி. மதுரைக்கு வடக்கு 13-மைலிலுள்ள சோழவந்தான் ரெயில்வே ஸ்டேஷனுக்குத் தெற்கு மதுரைக்குப் போகும் வழியில் 3–மைல்.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் சமணர்களுடன் வாது செய்த பொழுது, "வாழ்க அந்தணர்" என்னும் திருப்பாசுரம் எழுதி விட்ட ஏடு வைகையாற்றின் நீரை யெதிர்த்துச் செல்ல, நாயனார் "வன்னியு மத்தமும்" என்னுந் திருப்பதிகம் பாடினவுடன் அவ் வேடு தனக்கருகில் ஒதுங்கி நிற்கப் பெற்ற ஸ்தலம்.

கோடுசந் தனமகில் கொண்டிழி வைகைநீ
ரேடுசென் றணைதரும் ஏடகத் தொருவனை—,

என்பது தேவாரம்.

இதனால் ஸ்வாமிக்கு "ஏடகநாதேசுரர்" என்றும், தலத்துக்கு "ஏடகம்" என்றும் பெயர் போந்தன.

" விரைவோ டிகலா விடுமே டெதிர்போய்க்
கரைசேர் தலிஞ லுறைகா ரணனைப்
பரவே டகனென் றிடவே பதியுந்
திருவே டகமென்று சிறந் ததுவே"— திருவாலவா யுடையார்
திருவிளையாடற் புராணம்—கழுவேற்றின திருவிளையாடல் (௬௫)

திருமால், கருடன், சேடன் (ஆதிசேடன்), சாத்தனார் இவர்கள் பூசித்த தலம்.

" உன்னி மாலும் உவணனுஞ் சேடனும்
மன்னு சாத்தனும் நான்குகம் வாழ்த்தகம்" —(ஷெ ௬௬)

கோயில் பெரிது. கோயிலுக்குப் பின் பக்கம் வைகையாறு தெற்கு நோக்கி ஓடுகின்றது.

ஸ்தல புராணம் அச்சிடப்பட் டுள்ளது.

ஏலமார் தருகுழ லேழையோ டெழில்பெறுஞ்
சோலமார் தருவிடைக் குழகனு றுறைவிடஞ்
சாலமா தவிகளுஞ் சந்தனஞ் சண்பகஞ்
சீலமா ரேடகஞ் சேர்தலாஞ் செல்வமே. (௪)

**50**. திருவையாறு: [சோ; மூ; பஞ்சநதேசுரர் - தருமசம்வர்த்தநி; செம்பொற் ஜோதீஸ்வரர் - அறம் வளர்த்த நாயகி; காவிரிநதி.]

தஞ்சாவூருக்கு வடக்கு 7-மைல். நல்ல வழி.

ஸ்வாமி திருநாவுக்கரசு நாயனாருக்குக் கைலாச தரிசநம் கொடுத்தருளிய ஸ்தலம். இந்த ஐதிஹ்யத்தைக் காட்டும் உற்சவம் ஆடி அமாவாசையில் நடக்கின்றது. அங்ஙனம் தரிசநம் கொடுத்த மூர்த்தி தெற்குப் பிராகாரத்தி லிருக்கிறார். அவருக்குத் தனி சந்நிதி. அப்பர் ஸ்வாமிகளும் அங்கிருக்கிறார். அப்பர் ஸ்வாமிகள் எழுந்து வந்ததாகச் சொல்லுங் குளம் கோயிலுக்கு வடமேற்கில் இருக்கின்றது.

சப்த ஸ்தானம் என்று வழங்கும் 7-ஸ்தலங்களில் முதன்மையான ஸ்தலம். சுந்தரமூர்த்திநாயனாருக் காகவும் சேரமான்பெருமானாயனாருக் காகவும் ஸ்வாமி காவிரியின் பெருக்கைத் தவிர்க்க, நாயன்மா ரிருவரும் அடியார் கூட்டத்துடன் ஆற்றைக் கடந்து சென்று தரிசநஞ் செய்த ஸ்தலம். ஸ்தல விநாயகருக்கு ஆதிவிநாயகர் என்று பெயர். காவிரியாற்றில் மிகுந்த வெள்ளமா யிருந்ததால், சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் அதன் தென்கரையிலிருந்து "ஐயாறுடைய அடிகளோ" என் றழைத்தபொழுது, இவ்விநாயகர் 'ஓலம் ஓலம்' என்று சொன்னதாகச் சொல்லுகிறார்கள். இவ் விநாயகருக்குப் பக்கத்

தில் 'ஆட்கொண்டார் சந்நிதி' என்றொரு சந்நிதி இருக்கின்றது. ஒரு பிராமணப் பிள்ளையை யமன் தொடர்ந்து வந்ததாகவும், அப்பொழுது ஸ்வாமி வெளிப்பட்டு யமனை விலக்கி, அப்பிள்ளையைச் சோதி சொரூபமாய் ஆட்கொண்டதாகவும், ஆதலால் அவர் சந்நிதிக்கெதிரில் ஒரு சிறு குழி ஒன்றுண்டாக்கி அதிற் குங்கிலியம் போட்டுக் கொண்டு வருவதாகவும் சொல்லுகிறார்கள். பிரார்த்தனைக்காரர்கள் அநேகர் குங்கிலியம் போடுகிறார்கள்.

இந்திரன், வாலி முதலியோர் பூசித்த ஸ்தலம். 'எண்ணிலி தேவர்கள் இந்திரன் வழிபட,'—'இந்திர னுணர்ந்துபணி எந்தையிடம்,' எனச் சம்பந்தரும்,—'வாலியார் வணங்கி யேத்துந் திருவையா றமர்ந்த தேன்' என அப்பரும் அருளியுள்ளார்கள்.

ஸ்தலபுராணம் அச்சிடப்பட்டுள்ளது.

விண்ணவர் தம்மொடு வெங்கதி ரோனல
எண்ணிலி தேவர்க ளிந்திரன் வழிபடக்
கண்ணனும் பிரமனுங் காண்பரி தாகிய
அண்ணல்தன் னுறைவிட மையா றே. (௪)

எழுவா யிறுவா யிலாதன வெங்கள் பிணிதவிர்த்து
வழுவா மருத்துவ மாவன மாநர கக்குழிவாய்
விழுவா ரவர்தம்மை வீழ்ப்பன மீட்பன மிக்கவன்போ
டழுவார்க் கமுதங்கள் காண்க ஐயாறன் னடித்தலமே. (அ)

பாவும் பரிசொன் றறியேனுன் பண்டே யும்மைப் பயிலாதேன்
இரவும் பகலு நினைந்தாலு மெய்த நினைய மாட்டேனான்
கரவி லருவி கமுகுண்ணத் தெங்கங் குலைக்கீழ்க் கருப்பாலை
அரவந் திரைக்கா விரிக்கோட்டத் தையா றுடைய அடிகளோ. (கூ)

**51. திருஒற்றியூர்:** [தொ; மூ; ஆதிபுரீசுரர் - வடிவுடையம்மை; பிரம தீர்த்தம்; மகிழமரம்.]

ரெயில்வே ஸ்டேஷன். சென்னைக்கு வடக்கு 5-மைல். திருவிளக்குத் தொண்டு செய்துவந்த கலியநாயனாருடைய ஸ்தலம். சுந்தரமூர்த்தி நாயனார் சங்கிலிநாச்சியாரை மணம்புரிந்த ஸ்தலம். அவர் சங்கிலியாருக்கு மகிழமரத்தின்கீழ்ப் பிரமாணஞ் செய்து கொடுத்த ஐதிஹ்யத்தை முன்னிட்டு மகிழடி உற்சவம் மாசி மாதத்திற் பிரபலமாக நடக்கின்றது. தியாகேசரது சந்நிதி விசேஷம். கோயில் பெரிது. அதனுள் அநேக இலிங்கங்கள் இருக்கின்றன. புற்றிடங் கொண்டார் சந்நிதிக்கு வடக்கே ஆதிலிங்கம் வெகு பளபளப்பா

யிருக்கின்றது. சுந்தரர், சங்கிலியார் இவர்களுடைய உற்சவ விக்கிரகங்கள் மணவாள கோலமாய் இருக்கின்றன. முற்றுந் துறந்தவராகிய பட்டினத்துப் பிள்ளையார் முத்தியடைந்த முதுநகர். பட்டினத்தாருக்கும் அப்பர் ஸ்வாமிகளுக்கும் தனி ஆலயங்கள் இருக்கின்றன. இந்தத் தலத்துக்கு ' ஆதிபுரி ' என்றும் பெயர்.

ஸ்தல புராணம் அச்சிடப்பட்டுள்ளது.

விடையவன் விண்ணு மண்ணுந் தொழ நின்றவன் வெண்மழுவாட்
படையவன் பாய்புலித்தோ லுடை கோவணம் பல்கரந்தைச்
சடையவன் சாம வேதன் சசி தங்கிய சங்க வெண்டோ
டுடையவ னூனமில்லி யுறை யும்மிட மொற்றியூரே. (ச)

மண்ணல்லை விண்ணல்லை வலைய மல்லை
மலையல்லை கடலல்லை வாயு வல்லை
எண்ணல்லை யெழுத்தல்லை யெரியு மல்லை
யிரவல்லை பகலல்லை யாவு மல்லை
பெண்ணல்லை யாணல்லை பேடு மல்லை
பிறிதல்லை யானும் பெரியாய் நீயே
உண்ணல்லை நல்லார்க்குத் தீயை யல்லை
யுணர்வரிய வொற்றியூ ருடைய கோவே. (அ)

படையார் மழுவன் பால்வெண் ணீற்றன்
விடையார் கொடியன் வேத நாவன்
அடைவார் வினைக ளறுப்பா னென்னை
யுடையா னுறையு மொற்றி யூரே. (சு)

**52. திரு ஓண காந்தன்தளி.** [தொ ; சு ; ஓணகாந்தேசுரர் - காமாக்ஷியம்மை.]

இவ்வாலயம் காஞ்சீபுரத்துக்கு [56] மேற்கிலுள்ள சர்வதீர்த்தத்துக்கு வடக்கில் ஏகாம்பரேஸ்வர ராலயத்துக்கு மேற்கு $\frac{3}{8}$-மைலிலிருக்கின்றது.

சுந்தர மூர்த்தி நாயனர் "நெய்யும் பாலும்" என்னுந் திருப்பதிகம் பாடித்துதித்துப் பொன் பெற்ற ஸ்தலம். ஓணன், காந்தன் என்னும் இரண்டு அசுரர்கள் பூசித்த ஸ்தலம்.

மூன்று சந்நிதிக ளுள்ளன. ஓணன் பூசித்த மூர்த்தியும், காந்தன் பூசித்த மூர்த்தியும் வடபால் ஓ ராலயத்திலும், சலந்தரன் பூசித்த மூர்த்தி தென்பால் வேறோ ராலயத்திலும் வீற்றிருக்கின்றார்கள்.

கூடிக் கூடித் தொண்டர் தங்கள் கொண்ட பாணி குறைபடாமே
யாடிப் பாடி யழுது நெக்கங் கன்பு டையவர்க் கின்ப மோரீர்
தேடித் தேடித் திரிந்தெய்த் தாலுஞ் சித்த மென்பால் வைக்கமாட்டீர்
ஓடிப் போகீர் பற்றுந் தாரீ ரோண காந்தன் றளியு ளீரே. (சு)

**53. திருவோத்தூர்:** [தொ ; ச ; வேதநாதேசுரர்-இளமுலை நாயகி.]

காஞ்சிபுரத்துக்குத் [56] தென்மேற்கு 19-மைல். மூன்றாவது மைலிற் பாலாற்றைக் கடக்கவேண்டும். நல்ல வழி.

கோயிலுக்கு மேற்புறத்திற் சேயாறு ஓடுகின்றது. கோயில் பெரிது.

இஃது ஆண்பனை பெண்பனையான ஸ்தலம். இதனைக் "குரும்பை யாண்பனை யீன்குலை யோத்தூர்" என்னுந் திருஞான சம்பந்த ஸ்வாமிகள் தேவாரத்தின் திருக் கடைக்காப்பால் அறிக. கல்லினால் ஒரு பனைமரம் செய்திருக்கின்றது. அது பாதி ஆணும் பாதி பெண்ணுமா யிருக்கின்றது.

சிவபெருமான் வேதத்தின் பொருளை முனிவர்களுக்குந் தேவர்களுக்கும் அருளிச்செய்த ஸ்தலம். இதனைப் பின்வருஞ் செய்யுள்களாலறிக.

இத்தகைய மாமறைநூன் முன்னாளித் திருக்காஞ்சி வரைப்பிற் றென்சார்
தத்துநீ ரலைபுரட்டுஞ் சேயாற்றின் றடங்கரைக்க ணிமையோர் கட்கு
மெய்த்தவர்க்கு மோதுவித்தோ மாதலினன் மேவுதிரு வோத்தூ ரென்னும்
அத்தலத்தி னெமைத்தொழுவோ ரருமறைநூன் முழுதுணர்ந்து வீடுசேர்வர்.

—காஞ்சிப்புராணம் - திருவேகம்பப் படலம் - அ௰.

"ஓத்தி, னுரைவரம் பகன்ற முக்க ணுத்தமன் சந்தைகூட்டி
யருமறை யறவோர்க் கோது வித்திட மதனைக் காண்மின்.

—திருவிளையாடற் புராணம் - அருச்சனை - கஉ.

ஆதிகேசவப் பெருமாள் சந்நிதியும் உள்ளே இருக்கின்றது.

கருணாகரக் கவிராய ரியற்றிய ஸ்தலபுராணம் அச்சிடப்பட்டுள்ளது.

பூத்தேர்ந் தாயன கொண்டுநின் பொன்னடி
யேத்தா தாரில்லை யெண்ணுங்கால்
ஓத்தூர் மேய வொளிமழு வாளங்கைக்
கூத்தீ ரும்ம குணங்களே. (க)

**54. ஓமாம்புலியூர் :** [சோ; ச - அ; துயர்தீர்த்த நாதர் — பூங்கொடி நாயகி, கொள்ளிடநதி.]

சிதம்பரத்துக்குத் [122] தென்மேற்கு 15-மைலிலுள்ள மன்னார்குடிக்குத் தெற்கு 4-மைல். குற்றாலம் ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடக்கு 11-மைல். கொள்ளிடநதியைத் தாண்டவேண்டும்.

புலிக்குப் பயந்து வில்வமரத்திலேறிக்கொண்ட ஒரு வேடன் இரவு முழுதும் வில்வ இலைகளைப் பறித்துப் போட்டுக்கொண்டிருக்க அவை மரத்தடியிலிருந்த சிவலிங்கத்தின் மேல்விழ, சிவபெருமான் மனமிரங்கிக் காலையில் அவ்வேடனுக்குப் பிரத்தியக்ஷமாகி அவனுக்கு முத்தியளித்த தலம். இத்தலத்து அந்தணர்களின் பெருமையை சம்பந்த ஸ்வாமிகளும் அப்பர் ஸ்வாமிகளும் தேவாரத்தில் முறையே,

"நான்மறை தெரிந்து நலந்திகழ் மூன்றெரி யோம்பும்
ஒள்ளியார் வாழு மோமமாம் புலியூ ருடையவர் வடதளி யதுவே."

என்றும்,

"ஒன்றியசீ ரிருபிறப்பர் முத்தீயோம்பு முயர்புகழ்நான் மறையோமாம்
புலியூர் நாளுந், தென்றன்மலி வடதளியெஞ் செல்வன்"

என்றுஞ் சிறப்பித்துள்ளார்கள்.

கோயிலுக்குக் கீழ்ப்பாரிசத்தில் வடதளி என்னும் ஆலயம் இருக்கின்றது.

ஓமாம்புலியூருக்குத் தென்கிழக்கு 2-மைலில் கொள்ளிடத்தின் தென்கரையில் மண்ணிப்படிக்கரை [223] இருக்கின்றது.

புற்றரவ வணிந்து நீறுமெய்ப் பூசிப் பூதங்கள் சூழ்தர வூருர்
பெற்றமொன் றேறிப் பெய்பலி கொள்ளும் பிரானவ னுறைவிடம் வினவில்
கற்றநால் வேத மங்கமோ ராறுங் கருத்தினா ருத்தியாற் றெரியும்
உற்றபல் புகழா ரோமமாம் புலியூ ருடையவர் வடதளி யதுவே. (ச)

பாங்குடைய வெழிலங்கி யருச்சனை முன் விரும்பப்
பரிந்தவனுக் கருள்செய்த பரமன் றன்னைப்
பாங்கிலா நரகதனிற் றொண்ட ரானார்
பாராத வகைபண்ண வல்லான் றன்னை
யோங்குமதில் புடைதழுவு மெழிலோமாம் புலியூ
ருயர்புகழந் தணரேத்த வுலகர்க் கென்றுந்
தீங்கிறிரு வடதளியெஞ் செல்வன் றன்னைச்
சேராதே திகைத்துநாள் செலுத்தி னேனே. (அ)

**55.** கச்சி அநேகதங்காபதம்: [தொ; ௬; அநேகதங்காபதேசுரர் - காமாக்ஷியம்மை.]

காஞ்சீபுரத்தின் [56] வடமேற்கில் கழனி வெளிமத்தியி லிருக்கிறது. கணபதியும் குபேரனும் பூசித்த ஸ்தலம்.

“ஆனையுரித்த பிரான திடங் கலிக் கச்சி யநேகதங் காபதமே”

எனச் சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் கூறியதற்கேற்ப ‘ஆனையுரித்தான் வயல்’ எனப் பெயரிய வயல்கள் கோயிலுக்கு மேற்கே உள்ளன.

கொடிக ளிடைக்குயில் கூவுமி டம்மயி லாலும் மிடமழு வாளுடைய
கடிகொள் புனற்சடை கொண்ட நுதற்கறைக் கண்ட னிடம்பிறைத் துண்டமுடிச்
செடிகொள் வினைப்பகை தீரு மிடந்திரு வாகுமிடந்திரு மார்பகலத்
தடிக ளிடம்மழல் வண்ண னிடங்கலிக் கச்சி யநேகதங் காபதமே. (௧)

**56.** திருக்கச்சிஏகம்பம்: காஞ்சீபுரம். [தொ; மூ; ஏகாம்பரநாதர் - ஏலவார் குழலி, காமாக்ஷியம்மை; கம்பாநதி; மாவிருக்ஷம்.]

ரெயில்வே ஸ்டேஷன். பஞ்சபூத ஸ்தலங்களிற் பிருதிவி ஸ்தலம். உமாதேவியார் சிவபெருமானைப் பூசித்து முப்பத்திரண் டறமும் வளர்த்தருளிய ஸ்தலம். *

சிதம்பர முதலாகிய சிவஸ்தலங்கடோறுஞ் சென்று திருப்பணி செய்து, ஸ்தலத்துக்கு ஒவ்வொரு திருவெண்பா வீதம் க்ஷேத்திர வெண்பா பாடின ஐயடிகள் காடவர்கோனாயனார் அரசாட்சி செய்திருந்த ஸ்தலம். திருவொற்றியூர் எல்லையைக் கடந்தவுடன் இரண்டு கண்களின் பார்வையையும் இழந்த சுந்தரமூர்த்திநாயனார் இடதுகண் பார்வையைப் பெற்ற ஸ்தலம் *. திருக்குறிப்புத்தொண்டநாயனாரும் சாக்கியநாயனாரும் முத்தியடைந்த முதுநகர். முத்தி ஸ்தலங்கள் ஏழனுள் ஒன்றாகிய விசேஷ ஸ்தலம். காமாக்ஷியம்மை ஆலயமாகிய காமகோட்டம், முருகக்கடவுள் ஆலயமாகிய குமரகோட்டம், விஷ்ணு ஆலயமாகிய அஸ்திகிரி முதலிய அநேக ஆலயங்கள் நிறைந்த மகாக்ஷேத்திரம். ‘நகரேஷு காஞ்சி’ என்று நகரங்களுள் விசேஷமாகக் கொண்டாடப்படும் பெருமையையுடைய பெரும்பதி.

குமரகோட்டத்து அருச்சகர்-கச்சியப்ப சிவாசாரிய ஸ்வாமிகள் கந்தபுராணம் அரங்கேற்றிய அருட்பதி. ஸ்தல புராணம் அச்சிடப்பட்டுள்ளது. இத்தலத்தின் பெருமையைக் காட்டும் பாடல்கள் :—

பாட்டினி லடங்காக் காஞ்சியின் பெருமை
பகர்ந்திடத் தமியனுக் கெளிதோ —கந்த.-திருநகர.-௧0௩.

'உன்னினு முத்தி வழங்கு காஞ்சியைப்போல் உலகில்லை
லொருநக ருளதோ ' —கந்த.-திருநகர.-அ௬.

அவ்வூர் தன்னை, யண்ணினுங் கேட்பினுஞ் சொலினும்
வணங்கினும்பே ரின்பவீ டெவர்க்கு நல்குமே.-காஞ்சிப் புராணம்.

பற்றறத் துறந்தோர் பற்றுட் பட்டவ ரேனு ஞானம்
பெற்றவர் மடவ ரேனும் பெரும்பன்றி கழுதை ஞாளி
புற்றராப் புல்லுப் பூடு புழுமர மேனுங் காஞ்சி
நற்றலத் திறுதி கூடின் நம்மடி கலப்ப துண்மை.

எல்லைதீர் காஞ்சி யுள்ளார் யாவரு முனிவ ரங்கட்
கல்லெலா மிலிங்கஞ் சீதப் புனலெலாங் கங்கை சொல்லுஞ்
சொல்லெலா மநுக்கள் கைகாற் றொழிலெலாம் விடையோ னேவல்
செல்லலாந் தகைத்தன் றம்ம தென்றிசைக் கிழவர்க் கவ்வூர்.
—காஞ்சிப் புராணம்.

---

மறையானை மாசிலாப் புன்சடை மல்குவெண்
பிறையானைப் பெண்ணொடா ணாகிய பெம்மானை
இறையானை யேர்கொள் கச்சித்திரு வேகம்பத்
துறைவானை யல்லதுள் காதென துள்ளமே. (௪)

பொய்ய னைத்தையும் விட்டவர் புந்தியுள்
மெய்ய னைச்சுடர் வெண்மழு வேந்திய
கையனைக் கச்சி யேகம்ப மேவிய
ஐயனைத் தொழு வார்க்கில்லை யல்லலே. (அ)

*ஆலந் தானுகந் தமுதுசெய் தானை யாதி யையம ரர்தொழு தேத்துஞ்
சீலந் தான்பெரி தும்முடை யானைச் சிந்திப் பாரவர் சிந்தையு ளானை
ஏல வார்குழ லாளுமை நங்கை யென்று மேத்திவ ழிபடப் பெற்ற
கால காலனைக் கம்பனெம் மானைக் காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே. (௬)

**57.** கச்சிநெறிக்காரைக்காடு : [தொ ; ச ; காரைத்திருநாதேசுரர்-காமாக்ஷியம்மை ; இந்திர தீர்த்தம்.]

காஞ்சிபுரத்தின் [56] வடகிழக்கில் கொல்லைவெளியி லிருக்கின்றது. 'இது திருக்காலீசுரன்கோயில்' என்று வழங்கிவருகின்றது. வேப்பங்குளம் என்ற நல்ல தண்ணீர்க்குளம் தெற்கே இருக்கின்றது. **காரை** மிகுந்திருந்ததலிறைற் **காரைக்காடு** என்னும் பெயர் எய்தியது.

இந்திரன் பூசித்த ஸ்தலம். மேற்கு நோக்கிய சந்நிதி.

காருரு மணிமிடற்றார் கரிகாட ருடைதலைகொண்
டூரூரன் பலிக்குழல்வா ருழைமானி னுரியதளர்
தேரூரு நெடுவீதிச் செழுங்கச்சி மாநகர்வாய்
நீரூரு மலர்ப்பொய்கை நெறிக்காரைக் காட்டாரே. (ச)

**58. திருக்கச்சிமேற்றளி** என்பது திருமேற்றளி. [தொ; அ - சு; திருமேற்றளிநாதர்-காமாக்ஷியம்மை; விஷ்ணுதீர்த்தம்.]

இந்த ஆலயம் காஞ்சிபுரத்தின் [56] மேற்குப்பாகமாகிய பிள்ளைப் பாளையத்தி லிருக்கின்றது.

மகாவிஷ்ணு சிவசாரூபம் பெறும்பொருட்டுத் தவஞ்செய்து கொண்டிருந்து, திருஞானசம்பந்த ஸ்வாமிகளின் திருப்பதிகத்தாற் சிவஸ்வரூபம் பெற்ற ஸ்தலம். இரண்டு சந்நிதி; ஒன்று ஓதவுருகீசுரர் சந்நிதி. அவர் விஷ்ணுரூபமா யிருந்தவர்; திருஞானசம்பந்தர் பாடலாற் சிவலிங்கமாய் உருகினார். மற்றொன்று திருமேற்றளியீசுரர் சந்நிதி; இந்த சந்நிதி மேற்குப் பார்த்தது. இவ்விரண்டு சந்நிதிகளுக்குக் கிழக்கே, வீதி மூலையிற் சம்பந்தர்கோயி லிருக்கின்றது. அதற்கு மேற்கில் அவர் பாடலை உற்றுக்கேட்ட முத்தீசுரர் கோயி லிருக்கின்றது.

மாலன மாயன் றன்னை மகிழ்ந்தனர் விருத்த ராகும்
பாலனார் பசுப தியார் பால்வெள்ளை நீறு பூசிக்
காலனைக் காலாற் செற்றார் காஞ்சிமா நகர்தன் னுள்ளால்
ஏலநற் கடம்பன் றாதை யிலங்குமேற் றளியனாரே. (அ)

நொந்தா ஒண்சுடரே நுனையே நினைந்திருந்தேன்
வந்தாய் போயறியாய் மனமே புகுந்து நின்ற
சிந்தா யெந்தைபிரான் திருமேற்றளி யுறையும்
எந்தா யுன்னை யல்லா லினியேத்த மாட்டேனே. (கூ)

**59. திருக்கச்சூர்—ஆலக்கோயில்.** [தொ; சு; விருந்திட்டஈசுரர்—அஞ்சநாக்ஷி யம்மை; கூர்ம தீர்த்தம்.]

செங்கற்பட்டுக்கு வடக்கிலுள்ள சிங்கபெருமாள்கோயில் ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடமேற்கு $1\frac{1}{2}$-மைல்.

சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் பசியால் வருந்தியிருந்தபொழுது ஸ்வாமி பிராமணவீடுகள் தோறுஞ் சென்று அன்னம் யாசித்துக் கொண்டு வந்து அளித்தருளிய ஸ்தலம். இலிங்கம் மிகவும் சிறிது.

அமுதம் திரண்டுவருவதற்காக விஷ்ணு கூர்மமாயிருந்து பூசித்த தலம். கோயிலுள் அமுர்த தியாகர் சந்நிதி இருக்கின்றது.

இவ்வாலயத்துக்கு மேற்கு ¼-மைலில், மலையடிவாரத்தில் மருந்தீசர் ஆலய மிருக்கின்றது. தேவியார் - இருணீக்கித்தாயார். அருகி லிருக்கும் மலைக்கு ஔஷதகிரி என்று பெயர். இவ்வாலயத்துக்குப் போகும் வழியில் தாலமூல விநாயகர் அல்லது கருக்கடி விநாயகர் இருக்கிறார்; அதற்கு மேற்கில் 'இரந்திட்ட ஈசுரர்' வீற்றிருக்கும் ஒரு சிறு கோயி லிருக்கின்றது. கச்சபேசுரர் ஆலயத்துப் பிராகாரத்தில் 'விருந்திட்ட ஈசுரர்' என்ற இலிங்கம் இருக்கின்றது.

மேலை விதியே வினையின் பயனே விரவார் புரமூன் றெரிசெய்தாய்
காலை யெழுந்து தொழுவார் தங்கள் கவலை களைவாய் கறைக்கண்டா
மாலை மதியே மலைமேல் மருந்தே மறவே னடியேன் வயல்சூழ்ந்த
ஆலைக் கழனிப் பழனக் கச்சூ ராலக் கோயி லம்மானே. (சு)

**60.** கஞ்சனூர். [சோ; அ; அக்நீஸ்வரர்—கற்பகநாயகி; அக்நிதீர்த்தம்]

நரசிங்கன்பேட்டை ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து 1-மைல். காவிரியின் வடகரை. திருவிடைமருதூர் ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடகிழக்கு 5½-மைல். வழியில் 2½-மைலில் தென்குரங்காடு துறையும் [102], அதற்கு வடக்கு 1-மைலில் திருமங்கலக்குடியும் [221] இருக்கின்றன. கஞ்சனூரில் நடராஜர், சிவகாமியம்மை இவர்கள் உருவங்கள் சிலாரூபமாக இருக்கின்றன. ஹரதத்த சிவாசாரியார் சைவத்தின் மேன்மையை ஸ்தாபித்த ஸ்தலம். அவருக்குத் தனி ஆலயம் இருக்கின்றது. அவர் பூசித்த லிங்கமும் பக்கத்தி லிருக்கின்றது. அக்கினியும் பிரமனும் பூசித்த ஸ்தலம்*. கோயிலுக்குக் கிழக்கில் அக்கினிதீர்த்தம் இருக்கின்றது.

மூவிலைவேற் சூலம்வல னேந்தி னானை மூன்று சுடர்க் கண்ணானை
மூர்த்தி தன்னை
நாவலனை நரைவிடையொன் றேறு வானை நால்வேத மாறங்க
மாயி னானை
ஆவினிலைந் துகந்தானை யமரர் கோவை யயன்திருமா லானானை
யனலோன் போற்றுங்
காவலனைக் கஞ்சனூ ராண்ட கோவைக் கற்பகத்தைக் கண்ணாரக்
கண்டேன் நானே. (அ)

**61.** திருக்கடம்பந்துறை என்பது கடம்பர் கோயில். [சோ; அ; கடம்பவன நாதேசுரர் — முற்றிலாமுலையம்மை; காவிரிநதி; கடம்ப விருக்ஷம்.]

திரிசிராப்பள்ளிக்கு [132] மேற்கு 20-மைலிலுள்ள குழித்தலை ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடமேற்கு 1-மைல். சந்நிதி வடக்கு நோக்கியது.

கண்ணுவ முநிவருக்கும் தேவர்களுக்கும், சிவபெருமான் கடம்ப விருக்ஷத்தில் தோன்றிக் காக்ஷிகொடுத்த ஸ்தலம்.

பூமென் கோதை யுமையொரு பாகனை
ஓமஞ் செய்து முணர்மின்க ளுள்ளத்தால்
காமற் காய்ந்த பிரான்கடம் பந்துறை
நாம மேத்தநந் தீவினை நாசமே. (அ)

**62.** திருக்கடம்பூர்: [சோ; ச-அ; அமிர்தகடேசுரர்-சோதிமின்னம்மை.]

ஆலயத்துக்குக் "கரக்கோயில்" என்று பெயர். ஓமாம்புலியூருக்கு [54] வடமேற்கு 4-மைல். ஓமாம்புலியூருக்குச் சொல்லியுள்ள வழியைப் பார்க்க. மன்னார் குடியிலிருந்து 3-மைல் (மேல்) கடம்பூர்.

தேவேந்திரன் பூசித்து அமிர்தம் உண்டாகும்படி வரம்பெற்ற ஸ்தலம். மூலஸ்தானம் ரதம, சக்கிரம் குதிரையுட னிருக்கின்றது.

வானமர் திங்களு நீரு மருவிய வார்சடையானைத்
தேனமர் கொன்றையி னானைத் தேவர் தொழப்படு வானைக்
கானம ரும்பிணை புல்கிக் கலைபயிலுங் கடம்பூரில்
தானமர் கொள்கையி னானைத் தாடொழ வீடெளிதாமே. (ச)

நங்க டம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென்க டம்பைத்தி ருக்கரக் கோயிலான்
தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்துகி டப்பதே. (அ)

கரக்கோயிலுக்குக் கிழக்கு 1-மைலிற் 'கடம்பூரிளங் கோயில்.' என்னும் வைப்புத்தலம் இருக்கின்றது.

**63.** திருக்கடவூர்: [சோ; மூ; அமிர்தகடேசுரர் - அபிராமியம்மை; சிவகங்கை.]

ரெயில்வே ஸ்டேஷன். மாயூரத்துக்குக் [224] கிழக்கு தரங்கம்பாடிக்குப் போகும் வழியில் 13-ஆவது மைல்.

கோயில் பெரிது. மேற்குப் பார்த்த சந்நிதி. வீரட்டத் தலங்களில் ஒன்று. மார்க்கண்டருக்காக யமனை உதைத்தருளிய ஸ்தலம்*.

"கறுவிவீழ் காலன் மார்பிற் சேவடிக் கமலஞ் சாத்திச்
சிறுவனுக் காயு ளீந்த சேவகப் பெருமான் மேய
அறைபுனற் பழன மூதூர் "—திருவிளை-அருச்சனை- உஉ.

காலசம்ஹார மூர்த்தி சந்நிதி யொன் றிருக்கின்றது. குங்குலியக் கலய நாயனாரும், காரிநாயனாரும், வசித்திருந்து முத்தி பெற்ற ஸ்தலம். பிள்ளையார் - கள்ளவாரணப் பிள்ளையார். கோயிலில் வில்வாரணியேசுரர், பாபஹரேசுரர், புண்ணியவர்த்தனேசுரர் என்னும் இலிங்கங்கள் உள்ளன.

திருக்கடவூருக்குக் கிழக்கு 1-மைலில் திருக்கடவூர் மயானமும் [64], மேற்கு 3-மைலில் ஆக்கூரும் [18], வடமேற்கு 3-மைலில் திருத்தலைச்சங்காடும் (145) இருக்கின்றன.

எரிதரு வார்சடை யானும் வெள்ளையெரு தேறியும்
புரிதரு மாமலர்க் கொன்றை மாலை புனைந் தேத்தவே
கரிதரு காலனைச் சாடினானுங் கடவூர்தனுள்
விரிதரு தொல்புகழ் வீரட்டானத்தர னல்லனே. (ச)

சேவினை ரனைய கண்ணார் திறம் விட்டுச் சிவனுக் கன்பாய்ப்
பாலுநற் றயிர்நெய் யோடு பலபல ஆட்டி யென்று
மாலினைத் தவிர நின்ற மார்க்கண்டர்க் காக வன்று
காலனை யுதைப்பர் போலுங் கடவூர் வீரட்ட னாரே. (அ)

அன்று லின்னிழற்கீ ழற நால்வர்க் கருள்புரிந்து
கொன்றாய் காலனுயிர் கொடுத்தாய் மறையோனுக்கு மான்
கன்றா ருங்கரவா கடவூர்த்திரு வீரட்டத்துள்
என்தா தைபெருமா னெனக் கார்துணை நீயலதே. (சு)

**64.** திருக்கடவூர் மயானம். [சோ ; மூ ; பிரமபுரீசுரர் - மலர்க்குழல் மின்னம்மை ; காசி தீர்த்தம்.]

இது 'திருமெய்ஞ்ஞானம்' என வழங்குகின்றது. திருக்கடவூருக்குக் [63] கிழக்கு 1-மைல். மணல்வழி. இந்தத் தலத்துக்குத் தெற்கு ½-மைலில் ஒரு கிணறு இருக்கின்றது. அது மிகவும் விசேஷமானது. அதிலிருந்துதான் திருக்கடவூர் அமிர்தகடேசுரருக்குத் தினந்தோறுந் திருமஞ்சனம் கொண்டுவரப்படுகின்றது. பங்குனிமீ சுக்கிலபக்ஷம் அசுவினி நக்ஷத்திரத்தில் இவ்விடத்தில் ஸ்நாநஞ் செய்வது பிரபலமாயிருக்கின்றது. மற்றைக் காலத்தில், திருமஞ்சனந் தவிர, வேறெதற்கும் இந்த ஜலத்தை உபயோகிக்கிறதில்லை. சிவ

பெருமான் பிரமதேவரை நீறாக்கி அவரை மறுபடி உயிர்ப்பித்து, அவருக்குச் சிருஷ்டித் தொழிலைக் கொடுத்தருளிய ஸ்தலம்.

வரிய மறையார் பிறையார் மலையோர் சிலையா வணக்கி
எரிய மதில்க ளெய்தார் எறியு முசல முடையார்
கரிய மிடறு முடையார் கடவூர் மயான மமர்ந்தார்
பெரிய விடைமேல் வருவார் அவரெம் பெருமா னடிகளே. (ச)

நூல மேந்துவர் தோலுடை யாடையர்
ஆல முண்டமு தேமிகத் தேக்குவர்
கால காலர்க டவூர்ம யானத்தார்
மால மார்பர்பெ ருமான டிகளே. (அ)

மருவார் கொன்றை மதிசூடி மாணிக் கத்தின் மலைபோல
வருவார் விடைமேல் மாதோடு மகிழ்ந்து பூதப் படைசூழத்
திருமால் பிரம னிந்திரற்குந் தேவர் நாகர் தானவர்க்கும்
பெருமான் கடவூர் மயானத்துப் பெரிய பெருமா னடிகளே. (கு)

**65.** கடிக்குளம் என்பது கற்பகனூர் கோயில். [சோ ; ச ; கற்பகேசுரர் - சௌந்தரநாயகி ; விநாயக தீர்த்தம்.]

திருத்தருப்பூண்டி ரெயில்வே ஸ்டேஷனுக்குத் தென்மேற்கு $10\frac{1}{2}$-மைல். இதற்கு மேற்கு 1-மைலில் இடும்பாவனம் [32] இருக்கின்றது. அதற்குச் சொல்லியிருக்கும் வழியைப் பார்க்க.

கற்பகப்பிள்ளையார் சிவபெருமானைப் பூசித்து மாம்பழம் பெற்ற ஸ்தலம். கோயிலுக்கு வெளியில் தென் பக்கத்தில் மேலண்டை கோடியிற் கற்பகப் பிள்ளையார் இருக்கின்றார். கோயிலுக்கு வடகீழ்ப் பக்கத்தில் விநாயக தீர்த்தம் இருக்கின்றது.

பொடிகொண் மேனிவெண் ணூலினர் தோலினர் புலியுரி யதளாடை
கொடிகொ ளேற்றினர் மணிகிணி னெனவரு குரைகழல் சிலம்பார்க்கக்
கடிகொள் பூம்பொழில் சூழ்தரு கடிக்குளத் துறையுங்கற் பகத்தைத்தம்
முடிகள் சாய்த்தடி வீழ்தரு மடியரை முன்வினை மூடாவே. (ச)

**66.** திருக்கடுவாய்க்கரைப்புத்தூர்: [சோ ; அ ; சொர்ணபுரீசுரர் - சிவாம்பிகை.] 'இதனை ஆண்டான்கோயில்' என்பர்.

நீடாமங்கலம் ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து தென் கிழக்காக வலங்கைமான் வழியாய் 11-மைல் சென்றால் இந்தத் தலத்தை யடையலாம். கடுவாய் என்ற ஆறு இப்போது குடமுருட்டி என வழங்குகின்றது. திருக்குடவாசலுக்கு [98] மேற்கு $3\frac{1}{2}$-மைல்.

காசிப ருஷி முதலியோர் பூசித்த ஸ்தலம்.

மாசார் பாசம யக்கறு வித்தெனுள்
நேச மாகிய நித்தம ளானைப்
பூச நீர்க்கடு வாய்க்கரைத் தென்புத்தூர்
ஈச னேயென வின்பம தாயிற்றே. (அ)

**67. திருக்கடைமுடி :** [சோ; ச; கடைமுடிநாதேசுரர்-அபிராமியம்மை.]

இது கீழையூர் என வழங்குகின்றது. ஆநந்ததாண்டவபுரம் ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடகிழக்கு 2-மைலிலுள்ள திருநின்றியூருக்குத் [170] தென் கிழக்கு 4-மைல். நனிபள்ளிக்கு [162] வடமேற்கு 1-மைல்.

பிரமன் பூசித்த ஸ்தலம். மேற்குப் பார்த்த சந்நிதி.

மறையவ னுலகவன் மாயவன்
பிறையவன் புனலவ னனலுமவ
னிறையவ னெனவுல கேத்துங்கண்டங்
கறையவன் வளநகர் கடைமுடியே. (ச)

**68. திருக்கண்டியூர் :** [சோ ; ச-அ ; வீரட்டேசர் - மங்களநாயகி ; காவிரிநதி.]

தஞ்சாவூருக்கு வடக்கு 6-மைலில், திருவையாறு [50] போகும் வழியி லிருக்கின்றது. திருவையாற்றுக்குத் தெற்கு 1½-மைல்.

மாசிமீ 13–15 தேதிகளிற் சூரியபூஜை ; மேற்குப் பார்த்த சந்நிதி.

அஷ்டவீரத் தலங்களில் ஒன்று. பிரமாவின் சிரஸைக் கொய்த ஸ்தலம்.*

"பங்கயக் கடவு ளீந்த பரிகலம் வாங்கிக்கொண்ட, அங்கணனிட மீது"
—திருவிளை - அருச்சனை- உ.ரு.

ஸப்த ஸ்தான க்ஷேத்திரங்களில் ஐந்தாவது ஸ்தலம்.

சதாநந்தர் பூசித்த தலம். அவருடைய திருவுருவமும், பிரமா, சரசுவதி இவர்கள் திருவுருவங்களும் கோயிலு ளிருக்கின்றன.

* இயலுமா றெனக் கியம்பு மின்னிறை வன்னுமாய் நிறை செய்கையைக்
கயனெடுங் கண்ணி னார்க டாம்பொலி கண்டியூருறை வீரட்டன்
புயல் பொழிந்திழி வானுளோர்களுக் காகவன்றயன் பொய்ச்சிர
மயனகவ தரிந்து மற்றதி லூணுகந்த அருத்தியே. (ச)

அண்டங் கறுத்ததோர் கையுடை யான்படைத் தான்றலையை
உண்டங் கறுத்தது மூவொடு நாடவை தானறியம்
கண்டங் கறுத்த மிடறுடை யான்கண்ணுடி யூரிருந்த
தொண்டர் பிரானைக்கண் டீரண்ட வாணர் தொழுகின்றதே. (அ)

**69.** திருக்கண்ணார்கோயில்: என்பது குறுமாணக்குடி. [சோ; கண்ணாயிரேசுரர் – முருகுவளர் கோதையம்மை; இந்திர தீர்த்தம்.]

வைத்தீசுரன்கோயிலுக்குத் [207] தென்கிழக்கு 1½-மைல். தேவேந்திரன் சாபம் நீங்கி ஆயிரங் கண் பெற்ற ஸ்தலம்.*

"குறுமா ணுருவன் தற்குறி யாகக் கொண்டாடும்
கறுமா கண்டன் மேயது கண்ணார் கோயிலே"

*முன்னொரு காலத் திந்திர னுற்ற முனிசாபம்
பின்னொரு நாளவ் விண்ணவ ரேத்தப் பெயர்வெய்தித்
தன்னரு ளாற்கண் ணாயிர மீந்தோன் சார்பென்பர்
கன்னியர் நாளுந் துன்னமர் கண்ணார் கோயிலே (சு)

**70.** ஸ்ரீகயிலாயம்: [வட; மூ; பரமசிவன்–பார்வதியம்மை.]

"விண்ணுல கத்தவர்கள் விரும்ப வெள்ளை யானையின்மேல்
என்னுடல் காட்டுவித்தான் நொடித் தான்மலை உத்தமனே"

எனச் சுந்தரமூர்த்திஸ்வாமிகள் சொல்லியுள்ள நொடித்தான்மலை யிதுவே. இது நம்போலிகள் பார்க்கக்கூடிய ஸ்தலமன்று. அப்பர் ஸ்வாமிகளுக்கும் இந்த ஸ்தல தரிசநம் திருவையாற்றில் [50] தான் கிடைத்தது.

பொடிகொ ளுருவர் புலியி னதளர் புரிநூ றிகழ்மார்பில்
கடிகொள் கொன்றை கலந்த நீற்றர் கறைசேர் கண்டத்தர்
இடிய குரலா லிரியு மடங்கல் தொடங்கு முனைச்சாரல்
கடிய விடைமேற் கொடியொன் றுடையார் கயிலை மலையாரே. (சு)

செய்யாய் கரியாய் வெளியாய் போற்றி
செல்லாத செல்வ முடையாய் போற்றி
ஐயாய் பெரியாய் சிறியாய் போற்றி
யாகாய வண்ண முடையாய் போற்றி
வெய்யாய் தணியா யணியாய் போற்றி
வேளாத வேள்வி யுடையாய் போற்றி
கையார் தழலாய் விடங்கா போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. (அ)

தானெனை முன்படைத்தா னதறிந்துதன் பொன்னடிக்கே
நானெனை பாடலந்தோ நாயி னேனைப் பொருட்படுத்து
வானெனை வந்தெதிர்கொள்ள மத்தயானை யருள்புரிந்து
ஊனுயிர் வேறுசெய்தா னொடித் தான்மலை யுத்தமனே. (க)

**71.** கரவீரம் என்பது கரையபுரம். [சோ; ச; கரவீரேசுரர் - பிரத்யக்ஷமின்னம்மை; ஸ்தல விருக்ஷம்- அலரி.]

திருவாரூருக்கு [23] மேற்கு 7-மைல். இதற்கு வடமேற்கு 1½-மைலிற் பெருவேளூர் [217] இருக்கின்றது. பெருவேளூருக்கு மேற்கு 2-மைலில் திருத்தலையாலங்காடு [146] இருக்கின்றது.

கௌதமருஷி பூசித்த ஸ்தலம்.

தங்கு மோவினை தாழ்சடை மேலவன், திங்க ளோடுடன் சூடிய
கங்கை யான்றிக ழுங்கர வீரத்தெஞ், சங்க ரன்கழல் சாரவே. (ச)

**72.** திருக்கருகாவூர் என்பது திருக்களாவூர். [சோ; ச-அ; முல்லைவனேசுரர் - கரும்பனையாளம்மை.]

ஐயம்பேட்டை ரெயில்வே ஸ்டேஷனுக்குத் தென்கிழக்கு 4–மைல். பாவநாசம் ரெயில்வே ஸ்டேஷனுக்குத் தெற்கு 4–மைல். ஆவூருக்குத் [30] தென்மேற்கு 5-மைல். வெட்டாற்றின் தென் கரையி லிருக்கின்றது.

விநாயகர் - கற்பக விநாயகர். ஆறுமுக ஸ்வாமி உருவம் மிகவும் அழகா யிருக்கின்றது. ஆதரவற்ற ஒருத்திக்குத் தேவியார் மருத்துவம் பார்த்துக் கருவைக் காத்தபடியால் இத்தலத்துக்குத் திருக் கரு காவூர் என்னும் பெயரும், தேவியாருக்குக் 'கர்ப்ப ரக்ஷகி' என்னும் பெயரும் வந்தன.

பிருதிவி லிங்கம். சந்திரன் பூசித்தது.

முத்திலங்கு முறுவல்லுமை யஞ்சவே
மத்தயானை மறுகவ்வுரி வாங்கியக்
கத்தை போர்த்த கடவுள் கருகாவூரெம்
அத்தர் வண்ணம் மழலும் மழல் வண்ணமே. (ச)

குருகாம் வயிரமாங் கூறு நாளாங் கொள்ளுங் கிழமையாங் கோளே தானும்
பருகா வமிர்தமாம் பாலி னெய்யாம் பழத்தி னிரதமாம் பாட்டிற் பண்ணும்
ஒருகா லுமையாளோர் பாகனுமா முண்ணின்ற நாவிற் குரையாடியாம்
கருவா யுலகுக்கு முன்னே தோன்றுங் கண்ணுங் கருகாவூ ரெந்தைதானே.
(அ)

**73.** திருக்கருக்குடி என்பது மருதாந்தநல்லூர்.

[சோ; ௬; சற்குணலிங்கேசுரர்-சர்வாலங்க்ருத மின்னம்மை.]

கும்பகோணத்துக்குத் [97] தென்கிழக்கு $2\frac{3}{4}$-மைலிலுள்ள கலைய நல்லூருக்குத் [77] தென் கிழக்கு 1-மைல்.

பிரமனும் சற்குணன் என்னும் அரசனும் பூசித்த ஸ்தலம். இராமர் பூசித்ததாகவுஞ் சொல்லுகிறார்கள். மணல் இலிங்கம். ஸ்வாமி உருவமும் அம்மன் உருவமும் சிறியன. ஒரு செட்டி தன் தாயுடன் அறியாது புணர்ந்த தோஷம் இந்தத் தலத்தில் நீங்கிற்றும். அவன் உருவம் தேவிசந்நிதிக் கெதிரில் இருக்கின்றது.

சாக்கியர் சமண்படு கையர் பொய்ம் மொழி
யாக்கிய வுரைகொளே லருந்தி ருந்நமக்
காக்கிய வரனுறை யணிக நுக்குடிப்
பூக்கமழ் கோயிலே புடைபட் டெய்ம்மினே. (௬)

**74.** கருப்பறியலூர் [சோ; ௪-௬; குற்றம்பொறுத்த நாதேசுரர்-கோல்வளையம்மை; இந்திர தீர்த்தம்.]

வைத்தீசுரன் கோயில் ரெயில்வே ஸ்டேஷனில் [297] இறங்கி மேற்கே 2-மைல் சென்று திருப்புன்கூரை [211] அடைந்து, அப்பாலும் 2-மைல் மேற்கே சென்று மண்ணிப்பள்ளம் என்ற ஊரை அடைந்து, அங்கிருந்து வடக்கே 1-மைல் சென்றால் இத்தலத்தை அடையலாம்.

ஆலயத்துக்குக் 'கொகுடிக் கோயில்' என்று பெயர். இத்தலத்து அந்தணர்களைத் தேவாரத்தில்

" முட்டாமே நாடோறும் நீர்மூழ்கிப் பூப்பறித்து மூன்று போதும்,
கட்டார்ந்த இண்டைகொண் டடிசேர்த்து மந்தணர்தங் கருப்பறியலூர்,"

" பொய்யாத வாய்மையாற் பொடிப்பூசிப் போற்றிசைத்துப் பூசைசெய்து,
கையினு லெரியோம்பி மறைவளர்க்கு மந்தணர்தங் கருப்பறியலூர்"

என விசேஷித்துச் சொல்லியிருக்கின்றது.

ஒருகால் தேவேந்திரன் இறுமாப்பாய்க் கயிலைக்குப் போக, சிவபெருமான் பூதவடிவமாய் அவனுக்கு முன்தோன்ற, அதை உணராது, தேவேந்திரன் குலிசத்தை அவர்மேல் எறிந்தபொழுது, அவர் கோபங்கொள்ள, தேவேந்திரன் தன் குற்றத்தைப் பொறுக்க வேண்டுமென்று வணங்கிப் பூசித்த ஸ்தலம். இக்காரணத்தாற் சுவாமிக்குக் 'குற்றம் பொறுத்த நாதர்' என்ற பெயர் வந்தது.

திருக்கருப்பறியலூருக்கு வடக்கு 1—மைலிற் குரக்குக்கா [99] இருக்கின்றது.

சுற்றமொடு பற்றவை துயக்கற வறுத்துக்
குற்றமில் குணங்களொடு கூடுமடி யார்கள்
மற்றவரை வானவர்தம் வானுலக மேற்றக்
கற்றவ னிருப்பது கருப்பறிய லூரே. (ச)

நீற்றுரு மேனியராய் நினைவார்தம் முள்ளத்தே நிறைந்து தோன்றுங்
காற்றானைத் தீயானைக் கதிரானை மதியானைக் கருப்பறியலூர்க்
கூற்றானைக் கூற்றுதைத்துக் கோல்வளை யாளவளோடுங்
கோதுடிக்கோயில்
ஏற்றானை மனத்தினால் நினைந்தபோ தவர்நமக் கினிய வாறே. [சு]

**75. கருவிலி:** [சோ; அ; சற்குணநாதேசுரர்—சர்வாங்க நாயகி.]

கும்பகோணத்திலிருந்து [97] தென்கிழக்கு $5\frac{1}{2}$-மைல் சென்று, நறையூர்ச்சித்தீச்சுரத்தை [161] அடைந்து, அப்பால் $\frac{1}{2}$-மைலிலுள்ள நாச்சியார் கோயிலுக்கு வந்து, அங்கிருந்து கிழக்கே 6-மைல் சென்றாற் கருவிலியை அடையலாம்.

இதற்கு வடகிழக்கு $2\frac{1}{2}$-மைலில், கோனேரி ராஜபுரம் என்னும் திருநல்லம் [157] இருக்கின்றது.

இந்திரனும் தேவர்களும் பூசித்த ஸ்தலம். சற்குணன் என்னும் அரசன் பூசித்துப் பிறவிக்கடலைக் கடந்த ஸ்தலம். தேவாரத்தில் உருத்திர கணங்கள் பூசித்ததாகச் சொல்லப்பட்டிருக்கின்றது*.

ஆலயத்துக்குக் ‘கொட்டிட்டை’ என்று பெயர்.

*பிணித்த நோய்ப்பிற விப்பிறி வெய்துமா
றுணர்த்த லாமிது கேண்மி னுருத்திர
கணத்தி னார்தொழு தேத்துங் கருவிலிக்
குணத்தி னுறை கொட்டிட்டை சேர்மினே. (அ)

**76. கருவூர்:** [கொ; ச; பசுபதீசுரர்—கிருபாநாயகி; ஆம்பிராவதிநதி.]

ரெயில்வே ஸ்டேஷன். திரிசிராப்பள்ளிக்கு [132] மேற்கு 45-மைல்.

காமதேநு பூஜைசெய்து, சிருட்டித்தொழில் செய்ய வரம்பெற்று, அகிலமும் அளித்த காரணத்தால், ஊருக்குக் ‘கருவூர்’ என்றும், ஸ்வாமிக்குப் ‘பசுபதி’ என்றும், கோயிலுக்கு ‘ஆநிலை’ என்றும் பெயர் போந்தன.

"ஆனடுத் துயர் பூசனையாற்றி யகிலமும்
தானளித் தலினுற் கரு வூரெனத் தக்கது
வானடுத் தெழும் வஞ்சி பசுபதி யாயினுர்
பான நஞ்சினர் பாழியு மானிலை யாயிற்றே."
—பேரூர்ப் புராணம்—குழகன் குளப்புச் சுவடுற்ற படலம்-கஉ௦.

இலிங்கமூர்த்தி வடபுறஞ் சாய்ந்திருக்கின்றூர். கோயில் பெரிது. கோபுரம் பெரிது. தேவியார் சந்நிதி இரண்டுள்ளன. எறிபத்த நாயனுருடைய ஸ்தலம். கொங்குதேசத் தரசராகிய புகழ்ச்சோழ நாயனுருடைய இராசதானி. சிவபெருமானுக்குப் பூமாலை கட்டிக் கொடுக்குந் திருத்தொண்டு செய்துவந்த சிவகாமியாண்டார் என்னும் பெரியவர் இருந்த இடம். திருவிசைப்பா பாடிய கருவூர்த்தேவர் அவதரித்து முத்தியடைந்த க்ஷேத்திரம். அவருடைய சந்நிதி தெற்குப் பிராகாரத்தி லிருக்கின்றது.

ஸ்தலபுராணம் அச்சிடப்பட்டுள்ளது.

விண்ணு லாமதி சூடி வேதமே, பண்ணு ளார்பர மாய பண்பினர்
கண்ணு ளார்கரு வூரு ளானிலை, யண்ண லாரடி யார்க்கு நல்லரே. (௪)

**77.** திருக்கலயநல்லூர் என்பது சாக்கோட்டை.

[சோ ; ௬ ; அமிர்தகலேசுரர்—அமிர்தவல்லி.]

கும்பகோணத்துக்குத் [97] தென்கிழக்கு நீடாமங்கலம் போகும் வழியில் 2¾-மைலில் அரிசில் நதியின் தென்கரையில் உள்ளது. அரி சொல்லி வந்தபடியால் "அரி சொல் நதி" என்று பெயர்; 'அரிசொல்' என்பது 'அரிசில்' என மருவியது. கோயில் சிறிது. அதைச் சுற்றி ஒரு தாமரைப் பொய்கை இருக்கின்றது. இதற்குத் தென்கிழக்கு 1-மைலில் திருக்கருக்குடி [73] யிருக்கின்றது.

மாலயனுங் காண்பரிய மாலெரியாய் நிமிர்ந்தோன்
வன்னிமதி சென்னிமிசை வைத்தவன்மொய்த் தெழுந்த
வேலைவிட முண்டமணி கண்டன்விடை யூரும்
விமலனுமை யவளோடு மேவியவூர் வினவிற்
சோலைமலி குயில்கூவக் கோலமயி லாலச்
சுரும்பொடுவண் டிசைமுரலப் பசுங்கிளிசொற் றுதிக்கக்
காலையிலு மாலையிலுங் கடவுளடி பணிந்து
கசிந்தமனத் தவர்பயிலுங் கலயநல்லூர் காணே. (௧)

**78.** கலிக்காமூர் : என்பது அன்னப்பன் பேட்டை

[சோ ; ச; சுந்தரேசுரர்—அழகம்மை.]

தென் திருமுல்லைவாயிலுக்குத் [240] தென்மேற்கு 3-மைல்; சாயாவனத்துக்கு [130] வடக்கு 4-மைல். அத்தலங்களுக்குச் சொல்லி யிருக்கும் வழியைப் பார்க்க.

பாராசாருஷி பூசித்த ஸ்தலம்.

துறைவளர்கே தகைமீது வாசஞ் சூழ்வான் மலிதென்றல்
கறைவளருங் கடலோத மென்றுங் கலிக்கும் கலிக்காமூர்
மறைவளரும் பொருளாயி னானை மனத்தா னினைந்தேத்த
நிறைவளரும் புகழெய்தும் வாதை நினையா வினைபோமே. (ச)

**79.** திருக்கழிப்பாலை : [சோ ; மூ; பால்வண்ணநாதேசுரர்—வேதநாயகி.]

சிதம்பரத்துக்குத் [122] தென்கிழக்கு 7-மைல் தூரத்தி லிருந்த இந்த ஸ்தலத்துக் கோயில் கொள்ளிட நதியாற் கொண்டு போய்விடப்பட்டபடியால், அங்கிருந்த மூர்த்தியை இப்பொழுது சிதம்பரத்துக்குத் தென்கிழக்கு 2½-மைலிலுள்ள சிவபுரி (நெல் வாயில்-176) என்னும் ஸ்தலத்தில் ஒரு தனி ஆலயத்தில் வைத் திருக்கிறார்கள். இவ்வாலயம் சிறிது. லிங்கமூர்த்தி சிறிதாயும் வெண்ணிறமாயு மிருக்கின்றார்.

வன்மீகருஷி பூசித்த ஸ்தலம்.

புனலாடிய புன் சடையா யரணம்
அனலாக விழித்தவனே யழகார்
கனலாட லினாய் கழிப்பாலை யுளாய்
உனவார் கழல்கை தொழுதுள் குதுமே. (ச)

ஐயனே யழகே யன லேந்திய
கையனே கறை சேர்தரு கண்டனே
மையுலாம் பொழில் சூழ்கழிப் பாலையெம்
ஐயனே விதியே யரு ளென்னுமே. (அ)

சுரும்பார் விண்டமல ரவை தூவித் தூங்கு கண்ணீ
ரரும்பா நிற்குமனத் தடி யாரொடு மன்பு செய்வன்
விரும்பே னுன்னை யல்லா தொரு தெய்வ மென் மனத்தாற்
கரும்பா ருங்கழனிக் கழிப் பாலையே யானே. (சு)

**80.** திருக்கழுக்குன்றம் :

[தொ; மூ ; வேதகிரீசுரர்—பெண்ணினல்லாளம்மை ; சங்கு பிறந்த குளம்.]

செங்கற்பட்டு ரெயில்வே ஸ்டேஷனுக்குத் தென்கிழக்கு 9-மைல்.

தினந்தோறும் உச்சிக் காலத்தில் இரண்டு கழுகுகள் வந்து தங்களுக்குக் கொடுக்கப்படும் சர்க்கரை அன்னத்தையும் நெய்யையும் புசித்து மலையை வலமாகச் சுற்றிக்கொண்டுபோகும் அற்புதமான ஸ்தலம்.

"முள்வாய்க் கங்க வடிவெடுத் திருவர் சோறருந்து மலையிது"
—திருவிளை—அருச்சனை-கரு.

"கழுகு தொழு வேதகிரி"—திருப்புகழ் - 325.

12-வருஷத்துக் கொருவிசை சங்கு பிறக்குங் காரணத்தாற் 'சங்கு பிறந்த குளம்' என்று சொல்லப்படும் மகிமையான திருக்குளத்தை யுடையது. தன்னிடத்தில் வசித்து, சங்கு பிறந்தகுளத்தில் ஸ்நானஞ்செய்து, கிரி பிரதக்ஷிணம் நியமமாகச் செய்யும் அடியார்களுடைய எவ்வித பிணியையும் போக்கி யருளும் புண்ணிய ஸ்தலம். இங்கு மாணிக்கவாசக ஸ்வாமிகளுக்குச் சிவபெருமான் குரு வடிவமா யெழுந்தருளித் தரிசநங் கொடுத்தருளினார்.

'எனையாண்டு கொண்டு, நின்றாய் மலர்க்கழல் தந்து...காட்டினாய்
கழுக்குன்றிலே' —திருவாசகம்—திருக்கழுக்குன்றப் பதிகம்-எ.

மலையினின்றும் பிரதக்ஷிணமாய் இறங்குவதற்கு வழி வேறாயிருக்கின்றது. மலைமேற் சொக்கநாயகி யம்மை சந்நிதானம் குகை போன்ற இடத்தில் இருக்கின்றது.

கீழே ஊரில் உள்ள கோயிலுக்குள் நந்தி தீர்த்தம் இருக்கின்றது. தேவியார் 'திரிபுரசுந்தரி'. கோயிலுக்குக் கிழக்கு ½-மைல் தூரத்தில் சங்கு பிறந்த குளம் இருக்கின்றது.

சங்கு தீர்த்தத்துக்குத் தென்கிழக்கில் "ருத்ரகோடி" என்னுந் தேவார வைப்பு ஸ்தலம் இருக்கின்றது. ஸ்வாமி - ருத்ர கோடீசுரர்; தேவியார் - அபிராம சுந்தரி.

மலை வலம் வரலாம். 2½-மைல் தூரம்.

அந்தகக் கவி - வீரராகவ முதலியார் இயற்றிய ஸ்தல புராணம் அச்சிடப்பட்டுள்ளது.

இறக்க வுத்தர காசியிற் கமலை யெல்லையிற் போய்ப்
பிறக்க அம்பலந் தரிசிக்க முத்தியைப் பெறுவார்
சிறக்க வெத்துணைத் தூரத்துக் கழுக்குன்றச் சிகர
முறக்கை யாற்றொழ வக்கணத் தெய்துவ ருரவோய்.
—கழுக்குன்றப் புராணம் – தலவிசிட்டச்சருக்கம் - கஎ.

பையுடைய பாம்பொடு நீறு பயில்கின்ற
மெய்யுடையான் வெண்பிறை சூடி விரிகொன்றை
மையுடைய மாமிடற் றண்ணன் மறிசேர்ந்த
கையுடையான் காதல்செய் கோயில் கழுக்குன்றே. (ச)

பூவிலேவேற் கையானை மூர்த்தி தன்னை
முதுபிணக்கா டுடையானை முதலா னானை
ஆவினிலேஞ் சுகந்தானை யமரர் கோனை
ஆலால முண்டுகந்த வம்மான் றன்னைப்
பூவினின்மே னான்முகனும் மாலும் போற்றப்
புணர்வரிய பெருமானைப் புநிதன் தன்னைக்
காவலனைக் கழுக்குன்ற மமர்ந்தான் தன்னைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டே னானே. (அ)

கோன்று செய்த கொடுமை யாற்பல சொல்லவே
நின்ற பாவ வினைக டாம்பல நீங்கவே
சென்று சென்று தொழுமின் தேவர் பிரானிடங்
கன்றி னோடுபிடி சூழ்தண் கழுக்குன்றமே. (கு)

## 81. திருக்களர்:

[சோ; ச; களர்முளைநாதேசுரர் - அழகேசுரியம்மை; துருவாச தீர்த்தம்.]

திருத்தருப்பூண்டி ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து மேற்கே மன்னார்குடிக்குப் போகும் வழியில் 6½-மைல் சென்று, அங்கு தெற்கே திரும்பித் நீவட்டிக் கரைக்குப்போகும் வழியில் 2½-மைல் செல்லவேண்டும். நல்ல வழி. திருத்தருப்பூண்டியிலிருந்து மன்னார் குடிக்குப்போகும் வழியில் 2¼-மைல் சென்று பள்ளன்கோயில் என்னும் ஊரைச்சேர்ந்து, அங்கு தெற்கே திரும்பி 2¾-மைல் கொடிவழியே சென்றாலும் இந்தத் தலத்தைச் சேரலாம்.

பராசர முநிவரும் காளவ முநிவரும் பூசித்த ஸ்தலம். துருவாச முநிவருக்கு நடநதரிசநங் கொடுத்தவர் இத்தலத்துள்ள நடராஜமூர்த்தி. துருவாசருடைய விக்கிரகம் நடேசமூர்த்திக் கெதிரி லிருக்கின்றது. வலம்புரி விநாயகர். ஸ்தலத்துக்குப் பாரிஜாத வனம் என்று பெயர்.

இக் கோயிலிலுள்ள சிலா சாசனங்களில்,

அடைந்தார்க் கருள் செய்யாநின்ற நாயனார் '—என்றும்,

'அடைந்தார்க் கருள் செய்த நாயனார்'—என்றும்,

சிவபெருமான் திருநாமம் வரையப்பட்டுள்ளது.

ஸ்தலபுராணம் அச்சிடப்பட்டுள்ளது.

பாடவல்லநன் மைந்தரோடு பனிமலர்பல கொண்டுபோற்றிசெய்
சேடர்வாழ் பொழில்சூழ் செழுமாடத் திருக்கள ந
ணீடவல்ல நிமலனேயடி நிரைகழல்சிலம் பார்க்கமாநட
மாட வல்லவனே யடைந்தார்க் கருளாயே. (சு)

**82. திருக்கள்ளில் :** [தொ ; சு ; சிவாநந்தேசுரர்—ஆநந்தவல்லியம்மை.]

இது 'திருக்கள்ளம்' என வழங்குகின்றது.

சென்னையிலிருந்து நெல்லூருக்குப் போகும் வழியிற் கன்னிபுத்தூர் 21-மைல். அதற்குத் தெற்கு 2 மைலில் இந்தத் தலம் இருக்கின்றது. வழியில் 11-ஆவது மைலில் தாமரைக்கன்சத்திரம் என்னும் ஊரும், 15-ஆவது மைலில் சோழவரம் என்னும் ஊரும் இருக்கின்றன. 16-ஆவது மைலுக்கும் 17-ஆவது மைலுக்கும் இடையிற் பெரியபாளையம் போகும் வழியில் திரும்பி 4-மைல் சென்றாற் கன்னிபுத்தூர் இருக்கின்றது. கன்னிபுத்தூருக்கும் திருக்கள்ளிலுக்கும் இடையில் நெய்வேலி என்ற ஒரு கிராமம் இருக்கின்றது. திருக்கள்ளில் பெரியபாளையத்துக்குக் கிழக்கு 6-மைல்.

சென்னைக்கு மேற்கு 26-மைலிலுள்ள திருவெவ்வுளூர் ரெயில்வே ஸ்டேஷனி லிறங்கி, வடகிழக்காய் வெள்ளியூருக்குப் போகும் வழியில் 14-மைல் சென்று, பூச்சத்திப்பட்டு என்னும் கிராமத்தைச் சேர்ந்து, அங்கு வடக்கே திரும்பி 2 - மைல் சென்று, குசஸ்தலை ஆற்றைக் கடந்து சென்றாலும், அல்லது கீழ்க்கரை ரெயில்வேயிற் சென்னைக்கு வடக்கே பொன்னேரி (22-மைல்) சென்று, அங்கிருந்து தென்மேற்கு 12-மைல் சென்றாலும் இந்த ஸ்தலத்தை அடையலாம். தின்னனூரிலிருந்தும் போகலாம்.

பிருகு முனிவர் பூசித்த ஸ்தலம். கோயில் சிறிது ; சந்நிதிக்கெதிரிற் சிவாநந்த தீர்த்தம் என்னும் நல்ல தண்ணீர்த் திருக்குளம் இருக்கின்றது.

முள்ளின்மேன் முதுகூகை முரலுஞ்சோலை
வெள்ளின் மேல்விடு கூரைக் கொடிவிளைந்த
கள்ளில்மேய வண்ணல் கழல்களுளு
முள்ளுமே லுயர்வெய்த லொருதலையே. (ரு)

**83.** திருக்கற்குடி என்பது உய்யக்கொண்டான்.
[சோ; மூ; உஜ்ஜீவனேஸ்வரர் – அஞ்சநாக்ஷியம்மை.]

திரிசிராப்பள்ளிக்குத் [132] தென்மேற்கு 2½-மைல். கோயில் ஒரு சிறிய மலைமே லிருக்கின்றது. மேற்குப் பார்த்த சந்நிதி.

ஈழநாட்டரசன் உச்சிக்காலத்தில் வந்து பூசித்து முத்திபெற்ற ஸ்தலம். இத்தலத்திற் பிரார்த்தனைக்காக பானக பூஜை நடப்பதுண்டாம். இது கரன் பூஜித்த தலம். திரிசிரன் பூஜித்தது திரிசிராப்பள்ளி; தூஷணன் பூஜித்தது திருவெறும்பியூர் [48].

இந்தத் தலத்திலிருந்து பின்னும் 3½-மைல் சென்றால் "வயலூர்" என்னும் சுப்ரமண்ய க்ஷேத்திரம் இருக்கின்றது.

வடந்திகழ்மென் முலையாளைப் பாகம தாக மதித்துத்
தடந்திரை சேர்புனன் மாதைத் தாழ்சடை வைத்த சதுரர்
இடந்திகழ் முப்புரி நூலர் துன்ப மொடின்பம தெல்லாங்
கடந்தவர் காதலில் வாழுங் கற்குடி மாமலை யாரே. (ரு)

மண்ணதனி லைந்தை மாநீரி னான்கை
வயங்கெரியின் மூன்றை மாருதத் திரண்டை
விண்ணதனி லொன்றை விரிகதிரைத்
தண்மதியைத் தாரகைக டம்மின்மிக்க
எண்ணதனி லெழுத்தை யேழிசையைக்
காமனெழிலழிய எரியுமிழ்ந்த விமையாநெற்றிக்
கண்ணவனைக் கற்குடியில் விழுமியானைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேனே. (அ)

செய்யார் மேனி யனே திரு நீலமி டற்றி னனே
மையார் கண்ணி பங்கா மத யானை யுரித்தவனே
கையார் சூலத் தினாய் திருக் கற்குடி மன்னி நின்ற
ஐயா வெம்பெருமா னடி யேனையு மஞ்ச லென்னே. (க)

**84.** கன்றாப்பூர்: [சோ; அ; நடுதறி யப்பர் – மாதுமை யம்மை.]

திருவாரூருக்குத் [23] தெற்கிலுள்ள நாட்டியத்தான்குடி [166] ரெயில்வே ஸ்டேஷனுக்குக் கிழக்கு 5–மைலுக்கப்பால் வடக்கு 1-மைல்.

ஊர் சிறிது. கோயில் நாட்டியத்தான்குடி கோயிலைப்போ லிருக்கின்றது. ஸ்வாமி, கன்றுக்குட்டி கட்டும் ஆப்பு அல்லது குச்சிலிருந்து உற்பத்தியானவர். சைவப் பெண் ஒருத்தி வைஷ்ணவ னுக்கு வாழ்க்கைப்பட்டு, மாமியார் வீட்டார் காணாதபடி கன்றுக் குட்டி கட்டியிருந்த ஆப்பையே சிவமாகப் பாவித்துப் பூஜை செய்து வர, ஒரு நாள் புருஷன் அதைக் கண்டு அந்த ஆப்பைக் கோடரியால் வெட்ட, சிவபிரான் அவ் வாப்பிலிருந்து வெளிப்பட்டார். அக் காரணத்தால் ஊருக்குக் கன்றாப்பூர் என்றும், ஸ்வாமிக்கு நடுதறி நாதர் என்றும் பெயர் வந்தன. கோடரியால் வெட்டினது போன்ற குறி ஸ்வாமிமே லிருக்கின்றது.

இடும்பன் என்னும் அசுரன் பூசித்த ஸ்தலம்.

ஐயினன் மிட றடைப்புண் டாக்கை விட்டு
 ஆவியார் போவதுமே யகத்தார் கூடி
மையினற் கண்ணெழுதி மாலை சூட்டி
 மயானத்தி லிடுவதன்முன் மதியஞ் சூடும்
ஐயனார்க் காளாகி யன்பு மிக்கு
 அகங்குழைந்து மெய்யரும்பி யடிகள் பாதங்
கையினற் றொழுமடியார் நெஞ்சி னுள்ளே
 கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே. (அ)

**85.** கீழைத்திருக்காட்டுப்பள்ளி:

[சோ; ச; ஆரணியசுந்தரேசுரர் - அகிலாண்டநாயகி.]

சீகாழியிலிருந்து [88] தென்கிழக்காய்க் காவிரிப்பூம்பட்டினம் வழியில் 7–மைல் சென்று, திருவெண்காட்டைச் [263] சேர்ந்து, அந்தக் கோயில் மேலைக் கோபுரத்துக்கு மேற்கு 1-மைல் சென்றால் இந்தத் தலத்தை அடையலாம்.

விருத்திராசுரனைக் கொன்ற பழி பற்றித் திரிந்த தேவேந்திரன் அப்பழி நீங்கிவந்து தேவலோகத்தை ஆளவேண்டும் என் றிரந்து தேவர்கள் பூசித்த ஸ்தலம்.

இஃது ஆரணியேசுரர் கோயில் என வழங்குகின்றது.. மேற்குப் பார்த்த சந்நிதி. கோயில் சிறிது.

பிறையுடை யான்பெரி யோர்கள் பெம்மான்
    பெய்கழல் நாடொறும் பேணி யேத்த
மறையுடை யான்மழு வாளுடையான்
    வார்தரு மால்கடல் நஞ்ச முண்ட
கறையுடை யான்கன லாடு கண்ணாற்
    காமனைக் காய்ந்தவன் காட்டுப்பள்ளி
குறையுடை யான்குறட் பூதச் செல்வன்
    குரைகழ லேகைகள் கூப்பினோமே. (ச)

**86.** மேலைத்திருக்காட்டுப்பள்ளி: [சோ; ச – அ; தீயாடியப்பர் – வார்கொண்ட முலையம்மை; காவிரிநதி.]

தஞ்சாவூருக்கு மேற்கு 11-மைலிலுள்ள பூதலூர் ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடக்கு 5-மைல். குடமுருட்டி யாற்றின் தென்கரையி லிருக்கின்றது. திருப்பூந்துருத்திக்கு [212] மேற்கு 7-மைல். இந்தத் தலத்தில்தான் காவேரியினின்றுங் குடமுருட்டியாறு பிரிகின்றது.

உறையூர் நந்தவனத்தில் திருடிய செவ்வந்திமலரை அரசன் தன் பத்தினிகளுக்குக் கொடுப்ப, அவர்களில் மூத்தாள் மாத்திரம் அதை யரண்மனையிலிருந்த சிவபெருமானுக்கு அணிந்துவந்தாள். உறையூரில் மண்மாரிபெய்ய, மூத்தாள்மாத்திரம் அதற்குத் தப்பி, மேலைத் திருக்காட்டுப்பள்ளிக்கு வர, அவளுக்காக இரங்கி ஸ்வாமி கானல்வெப்பம் தணித்தருளினார்.

பணங்கொளு கம்மரைக் கார்ப்பது பல்பலி
யுணங்கலோ டுண்கல னுறைவது காட்டிடை
கணங்கள்கூ டித்தொழு தேத்துகாட் டுப்பள்ளி
நிணங்கொள்சூ லப்படை நிமலர்தந் நீர்மையே. (ரு)

மாட்டுப் பள்ளி மகிழ்ந்துறை வீர்க்கெலாங்
கேட்டுப் பள்ளி கண்டீர் கெடு வீரிது
ஓட்டுப் பள்ளிவிட் டோட லுறுமுனங்
காட்டுப் பள்ளி யுளான்கழல் சேர்மினே. (அ)

**87.** காவேரிப்பூம்பட்டினத்துப் பல்லவனீச்சுரம்:

[சோ; ச; பல்லவனேசுரர் - சௌந்தர நாயகி; காவிரிநதி.]

சீகாழிக்குத் [88] தென்கிழக்கு 10-மைல். 7-ஆவது மைலில் திருவெண்காடும் [263], 9-ஆவது மைலில் திருச்சாய்க்காடும் [130] இருக்கின்றன.

பல்லவராஜன் பூசித்த ஸ்தலம். இயற்பகை நாயனாரும், பட்டினத்துப் பிள்ளையாரும் திருவவதாரஞ் செய்தருளிய ஸ்தலம்.

திருச்சாய்க்காட்டுக் கோயிலுக்கும் பல்லவனீச்சுரத்துக் கோயிலுக்கும் ¼-மைல் தூரந்தா னிருக்கும். பல்லவனீச்சுரத்துக் கோயிலும் எதிரிலுள்ள திருக்குளமும் புதிதாகக் கட்டப்பட் டிருக்கின்றன.

பரசு பாணியர் பாடல் வீணையர் பட்டினத்துறை பல்லவ னீச்சுரத்
தரசு பேணி நின்றார் இவர்தன்மை யறிவா ரார். (ரு)

## 88. ஸ்ரீகாழி:

[சோ; மூ; பிரமபுரீசுரர் - திருநிலைநாயகி; பிரம தீர்த்தம்.]

ரெயில்வே ஸ்டேஷன். சிதம்பரத்துக்குத் [122] தெற்கு 11-மைல்.

திருஞானசம்பந்தர் திருவவதாரஞ்செய்தருளிய திருப்பதி. அவர் இத்தலத்து ஸ்வாமியும் அம்மையும் தம்மை ஆட்கொண்டதை—
"வேறெமை யாள விரும்பிய விகிர்தர் வெங்குரு மேவியுள் வீற்றிருந்தாரே"
"ஆதி யெமை யாளுடைய அரிவையொடு பிரிவிலி யமர்ந்தபதி"
எனவும்,

" போதையார் பொற்கிண்ணத் தடிசில் பொல் லாதெனத்
தாதையார் முனிவுறத் தானெனை யாண்டவன்
காதையார் குழையினன் கழுமல வளநகர்ப்
பேதையா ளவளொடும் பெருந்தகை யிருந்ததே"

எனவும் அருளியுள்ளார்.

அவரொடு திருநீலகண்டப் பெரும்பாண நாயனார் சேர்ந்து அவர் அருளிச்செய்யும் தேவாரத் திருப்பதிகங்களை யாழில் வாசிக்கும்படியான பாக்கியத்தைப் பெற்றிருந்த ஸ்தலம். கணநாதநாயனார் வசித்திருந்த ஸ்தலம்.

ஸ்ரீகாழி, பிரமபுரம், தோணிபுரம், வேணுபுரம், சிரபுரம், புகலி, வெங்குரு, பூந்தராய், புறவம், சண்பை, கொச்சைவயம், கழுமலம் என்னும் 12–திருநாமங்களையுடைய ஸ்தலம்.

பிரமன் மான் முதலாந் தேவர் பிரளயத் திறவாவண்ணம்
பரமனார் தோணி யேற்றும் பன்னிரு நாமம் பெற்ற புரமிது.
—திருவிளை - அருச்சனை—கஅ.

'பத்துட னிரண்டு நாமம் படைத்த தொல்காழி—'
—கந்தபுராணம் - இந்திரன் கரந்துறை படலம் - உக.

பிரமன் பூசித்ததாற் பிரமபுரம் எனவும், அமரர்கள் புகலிடமாகப் புகுந்த காரணத்தாற் **புகலி** எனவும், பிரளய காலத்தில் தோணிபோல மிதந்த காரணத்தால் **தோணிபுரம்** எனவும் இத்தலத்துக்குப் பெயர்கள் வந்தன என்பது,

"தாமரை நான் முகத்தன் பெரியான்
பிரமன் பேணியாண்ட பிரமபுரத்தானே,"

"அமரர் புகலால் மலிந்த பூம் புகலி,"

"ஒருவரிவ் வுலகில் வாழ்கிலா வண்ண
மொலிபுனல் வெள்ளமுன் பரப்பக்
கருவரை சூழ்ந்த கடலிடை மிதக்குங்
கழுமல நகரென லாமே"

எனவரூந் தேவாரத்தினின்றும் உணரக்கிடக்கின்றது.

'பொன்று விருந்தாம்'—என்பர் கச்சியப்ப சிவாசாரியர்.

திருஞான சம்பந்தருக்குத் தனி ஆலயம் இருக்கின்றது. அவர் ஞானப்பாலுண்ட தடாகம் கோயிலுக்குள் இருக்கின்றது. கோயிலுக்குள் மலைக்கோயில் உச்சியில் சட்டைநாதர் * ஆலயமும் அதற்கு அடுத்த கீழ்நிலையில் தோணியப்பர் சந்நிதியு மிருக்கின்றன.

அருணாசலக் கவிராயர் பாடிய தலபுராணம் அச்சிடப்பட்டுள்ளது.

தோடுடைய செவி யன்விடை யேறியோர் தூவெண் மதி சூடிக்
காடுடைய சுட லைப்பொடி பூசியென் னுள்ளங் கவர் கள்வன்
ஏடுடைய மல ரான்முன நாட்பணிந் தேத்த வருள் செய்த
பீடுடைய பிர மாபுர மேவிய பெம்மா னிவ னன்றே. (க)

ஒன்று தானறியா ருல கத்தவர்
நின்று சொல்லி நிகழ்ந்த நினைப்பிலர்
துன்று வார்பொழில் தோணி புரவர்தம்
கொன்றை சூடுங் குறிப்பது வாகுமே. (அ)

சாதலும் பிறத்தலுந் தவிர்த்தென்னை வகுத்துத்
தன்னருள் தந்தவென் தலைவனை மலையின்
மாதினை மதித்தங்கொர் பால்கொண்ட மணியை
வருபுனல் சடையிடை வைத்த வெம்மானை

ஏதிலென் மனத்துக்கோ ரிரும்புண்ட நீரை
யெண்வகை யொருவனை யெங்கள் பிரானைக்
காதில் வெண் குழையனைக் கடல்கொள மிதந்த
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே. (அ)

**89.** திருக்காளத்தி (ஸ்ரீகாளஹஸ்தி): [தொ; மூ; காளத்தீஸ்வரர் - ஞானப்பூங்கோதை யம்மை; பொன்முகரி யாறு.]

ரெயில்வே ஸ்டேஷன். ரேணுகுண்டா ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடகிழக்கு 15-மைல். வடக்கு நோக்கி ஓடும் ஸ்வர்ணமுகி யாற்றைக் கடந்து ஊருக்குச் செல்லவேண்டும்.

இது பஞ்சபூதங்களில் வாயு ஸ்தலம். ஸ்வாமி சந்நிதானத்தில் எரியும் தீபங்களில் ஒன்று காற்றினால் மோதப்பட்டாற்போல் எக்காலமும் அசைந்து கொண்டே இருக்கின்றது.

மேற்கு நோக்கிய சந்நிதி.

ஸ்ரீகாளஹஸ்தி என்பது (ஸ்ரீ =)சிலந்தி, (காளம் =)பாம்பு, (ஹஸ்தி =)யானை இம்மூன்றும் பூசித்து முத்திபெற்ற ஸ்தலம். இது தக்ஷிண கைலாசமென்று சொல்லப்படும். திருக்காளத்தி மலையி லுள்ள சிவலிங்கப் பெருமானை அன்புடன் வழிபட்டுக் கண்ணிடந்தப்ப லாகிய அருமையான தொண்டைச்செய்து கண்ணப்பநாயனார் ஆறுநாளிலே முத்தி யடைந்தார்*. அவருடன் அப்பெருமானைப் பூசித்து வந்த சிவகோசரியார் என்னும் பிராமணோத்தமரும் மோக்ஷமடைந்தார். நக்கீர தேவரும், இந்திரன், இராமன், முசுகுந்தர் இவர்களும் வழிபட்டுப் பேறுபெற்றார்கள்.

கோயிலுக்கு வடக்கில் துர்க்காம்பிகை மலையும், தெற்கில் கண்ணப்பர் மலையும், கிழக்கில் குமாரஸ்வாமி மலையும் இருக்கின்றன. பிரஸந்ந வரதபெருமாள் கோயில் ஊர்மத்தியில் இருக்கின்றது.

சிலந்தி மாசுண மும்மதக் கரிசிவ கோசன்
மலைந்தி டுஞ்சிலை வேட்டுவன் கீரனே மடவார்
பலந்தரும் வழி பாட்டினாற் பாட்டினாற் பரனைக்
கலந்து முத்திசேர் தென்பெருங் கயிலையுங் கண்டான்.

—கந்தபுராணம் - வழிநடைப்படலம் - எ.

கருணைப் பிரகாசர், சிவப்பிரகாச ஸ்வாமிகள், வேலப்ப தேசிகர் ஆகிய சகோதரர்கள் பாடிய ஸ்ரீகாளத்திப் புராணமும், வீரை நகர்

ஆநந்தக்கூத்தர் பாடிய திருக்காளத்திப் புராணமும், சேறைக் கவிராஜர் பாடிய திருக்காளத்தி யுலாவும் அச்சிடப்பட்டுள்ளன.

தலத்தின் பெருமையைக் காட்டும் பாடல்கள் :—

பிறந்தவர்க் காரூர் காணப் பெற்றவர் தமக்குத் தில்லை
இறந்தவர் தமக்குக் காசி யெவ்விடத் தேனு நின்று
மறந்திலர் நினைத்த வர்க்கு வான்றொடு மருணை யாகுஞ்
சிறந்திறை வீற்றிருக்குந் தெனுது பொற் கயிலைக் குன்றே.

—ஸ்ரீகாளத்திப் புராணம் - தென்கயிலாயச் சருக்கம் -

விற்பயில் தடக்கை வேடன் மென்றவூன்
பாகம் பார்த்தோன் பொற்புறு கிரி.

—திருவிளை - அருச்சனை—கங.

வேயனைய தோளுமையோர் பாகமது வாகவிடை யேறி சடைமேற்
றூயமதி சூடிசுடு காடிடை மாடிமலை தன்னை வினவில்
வாய்கலச மாகவழி பாடுசெயும் வேடன்மல ராகு நயனங்
காய் கணையி னலிடந் தீசனடி கூடுகா ளத்தி மலையே. (ச)

விற்றூணென் றில்லாத நல்கூர்ந்தான் காண்
வியன்கச்சிக் கம்பன்காண் பிச்சை யல்லால்
மற்றூணென் றில்லாத மாசதுரன் காண்
மயானத்து மைந்தன்காண் மாசொன் றில்லாப்
பொற்றூண்காண் மாமணிநற் குன்றொப்பான் காண்
பொய்யாது பொழிலேழுந் தாங்கி நின்ற
கற்றூண் காண் காளத்தி காணப் பட்ட
கணநாதன் காணவனென் கண்ணுளானே. (அ)

சேண்டாடும் விடையாய் சிவனேயென் செழுஞ்சுடரே
வண்டாருங் குழலா ளுமை பாக மகிழ்ந்தவனே
கண்டார் காதலிக்குங் கண நாதனெங் காளத்தியாய்
அண்டா வுன்னையல்லால் அறிந்தேத்த மாட்டேனே. (சு)

**90.** திருக்காறுயில் (திருக்காறைவாசல்).

[சோ; ச; கண்ணுயிர நாதேசுரர்-கைலாய நாயகி ; இந்திர தீர்த்தம்.]

திருவாரூருக்குத் [23] தெற்கு $8\frac{1}{4}$-மைல். நல்ல வழி. திருநாட்டியத்தான்குடி [166] ரெயில்வே ஸ்டேஷனுக்குத் தென்கிழக்கு 3—மைல்.

இது சப்தவிடங்க ஸ்தலங்களில் ஒன்று. தேவேந்திரன் முசுகுந்த சக்கிரவர்த்தி முதலியோர் பூசித்த ஸ்தலம். புரட்டாசி

பௌர்ணமையில் தேவேந்திரன் பூசித்ததாக ஐதிஹ்யம். கோயிலுக்கு வடபுறத்தில் இந்திர தீர்த்தம் இருக்கின்றது. குளத்தின் வடகரையிற் கடுக்காய்ப் பிள்ளையார் வீற்றிருக்கின்றார். ஒரு வர்த்தகன் ஜாதிக்காய் மூட்டைகளைக் கடுக்காய் மூட்டைகள் என்று சொல்ல, இவ்விநாயகருடைய திருவிளையாடலால் அவை அவ்வாறே ஆகப் பின்பு வர்த்தகன் பணிந்து கேட்டுக்கொள்ள, அவை முன் போல ஜாதிக்காய்களான காரணத்தால் விநாயகருக்கு இப்பெயர் போந்ததாம்.

சேர்த்தானே தீவினை தேய்ந்தறத் தேவர்க
ளேத்தானே யேத்துநன் மாமுனி வர்க்கிடர்
காத்தானே கார்வயல் சூழ்திருக் காறயில்
ஆர்த்தானே யென்பவர் மேல்வினை யாடாவே. (ச)

**91.** திருக்கானப்பேர் என்பது காளையார்கோயில்.

[பா ; ச-சு ; காளை யீசுரர் – சொர்ணவல்லி ; யானைமடு.]

மதுரைக்குக் [28] கிழக்கு 39-மைல். சிவகங்கை வழியாகப் போகவேண்டும். மதுரையிலிருந்து சிவகங்கை 28-மைல். நல்ல வழி.

ஸ்வாமி, காளை வடிவங்கொண்டு, திருக்கரத்திற் பொற்செண்டும், திருமுடிமேற் சுழியமும் உடையவராய்ச் சுந்தரமூர்த்தி நாயனாருக்குத் தோன்றி "நம்முடைய வாசஸ்தானம் கானப்பேர்" என்று சொல்லி, அவரையும் அவருடனிருந்த சேரமான் பெருமாணாயனாரையும் திருச்சுழியல் [136] என்னும் ஸ்தலத்திலிருந்து அழைத்துக் கொண்டுபோய்த் தரிசநங் கொடுத்தருளிய ஸ்தலம்.

சாபத்தினாற் காட்டானையாய்ச் சமைந்த ஐராவதம் பூசித்த ஸ்தலம். ※

"மானமா மடப்பிடி வன்கையா லலகிடக்
கானமார் கடகரி வழிபடுங் கானப்பேர்"

என்பது தேவாரம்.

கோயில் பெரிது. மூன்று சந்நிதிகள் இருக்கின்றன:—சோமேசர்-சௌந்தர நாயகி ; காளீசர்—சொர்ணவல்லி ; சுந்தரேசுரர்—மீநாக்ஷி. மருது பாண்டியன் கட்டிய கோபுரம் சோமேசர் சந்நிதிக்கு நேரே இருக்கின்றது.

ஸ்தலமான்மியம் அச்சிடப்பட்டுள்ளது.

பிடியெலாம் பின்செலப் பெருங்கைமா மலர்தழீஇ
விடியலே தடமூழ்கி விதியினால் வழிபடுங்
கடியுலாம் பூம்பொழிற் கானப்பே ரண்ணலின்
அடியலால் அடைசரண் உடையரோ அடியரே. (ச)

தோண்ட ரடித் தொழலுஞ் சோதி யிளம் பிறையுஞ்
சூதன மென் முலையாள் பாகமு மாகிவரும்
புண்ட ரிகப் பரிசா மேனியும் வானவர்கள்
பூச லிடக்கடனஞ் சுண்ட கருத்தமரும்
கொண்ட லெனத் திகழுங் கண்டமு மெண்டோளும்
கோலநறுஞ் சடைமேல் வண்ணமுங் கண்குளிரக்
கண்டு தொழப் பெறுவ தென்று கொலோ அடியேன்
கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே. (சு)

## 92. திருக்கானாட்டு முள்ளூர்:

[சோ; சு; பதஞ்சலிநாதேசுரர் - கோல் வளைக்கை யம்மை.]

இது 'கானாட்டாம் புலியூர்' என வழங்குகின்றது.

சிதம்பரத்துக்குத் [122] தென்மேற்கு 15-மைலிலுள்ள மன்னார்குடியைச் சேர்ந்து, அங்கிருந்து தெற்கே ஓமாம்புலியூருக்குச் [54] செல்லும் வழியில் 2-மைல் சென்று, கிழக்கே திரும்பி 1-மைல் போனால் இந்தத் தலத்தை அடையலாம். இதற்குத் தென்மேற்கு 2-மைலில் ஓமாம்புலியூ ரிருக்கின்றது.

பதஞ்சலி முனிவர் பூசித்த ஸ்தலம்.

அருமணியை முத்தினை ஆனைஞ்சும் ஆடும்
அமரர்கடம் பெருமானை யருமறையின் பொருளைத்
திருமணியைத் தீங்கரும்பின் ஊறலிருந் தேனைத்
தெரிவரிய மாமணியைத் திகழ்தருசெம் பொன்னைக்
குருமணிகள் கொழித்திழிந்து சுழித்திழியுந் திரைவாய்க்
கோல்வளையார் குடைந்தாடுங் கொள்ளிடத்தின் கரைமேற்
கருமணிகள் போல் நீல மலர்கின்ற கழனிக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே. (க)

## 93. திருக்கானூர்: [சோ; ச - அ; செம்மேனிநாதேசுரர் - சிவயோக நாயகி; கொள்ளிடநதி.]

பூதலூர் ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடக்கு 5-மைலிலுள்ள திருக்காட்டுப்பள்ளிக்கு [86] வடக்கு 2 - மைல். இப்பொழுது

இங்கே கோயில் மாத்திர மிருக்கின்றது. வீடுகள் ஒன்றுமில்லை. ஊர் மணல் மூடிப் போய்விட்டது. நூறு வருஷங்களுக்கு முன் கோயில் மாத்திரம் கண்டுபிடிக்கப்பட்டது. கோயில் பூமி மட்டத்துக்குத் தாழ்ந்திருக்கின்றது.

உமாதேவியார் சிவயோகஞ் செய்துகொண்டிருக்கும்பொழுது, சிவபெருமான் அக்கினி ரூபமாய்த் தரிசனங் கொடுத்தருளிய ஸ்தலம்.

தமிழி னீர்மை பேசித் தாளம் வீணை பண்ணி நல்ல
முழவ மொந்தை மல்கு பாடல் செய்கை யிடமோவார்
குமிழின் மேனி தந்து கோல நீர்மை யதுகொண்டார்
கமழுஞ் சோலைக் காறூர் மேய பவளவண்ணரே. (௯)

திருவி னாதனுஞ் செம்மலர் மேலுறை
உருவ னாயுலகத்தி னுயிர்க் கெலாங்
கருவனாகி முளைத்தவன் காறூரிற்
பரமனாய பரஞ்சுடர் காண்மினே. (அ)

**94.** கீழ்வேளூர்: [சோ; ச-அ; கேடிலியப்பர்-வனமுலைநாயகி யம்மை.]

ரெயில்வே ஸ்டேஷன். திருவாரூருக்குக் [23] கிழக்கு 7-மைல். வடக்கில் ஓடம்போக்கியாறு ஓடுகின்றது. சந்நிதி கட்டுமலைமே லிருக்கின்றது. எல்லாம் கருங்கல் வேலை. ஸ்தூபி முழுமையும் சுருங்கற் கட்டிடம். கோயில் பெரிது. சுப்பிரமணிய ஸ்வாமி பூசித்த ஸ்தலம். அவர் சந்நிதி விசேஷமா யிருக்கின்றது. அவருடைய பூஜைக்கும் தவத்துக்கும் தீங்கு நேரிடாவண்ணம் அஞ்சு திக்கிலும் காவல் பூண்டிருந்த அம்மைக்கு அஞ்சுவட்ட அம்மை என்று பெயர். இந்த அம்மை சந்நிதி முதற் பிராகாரத்தில் வடபக்கத்தில் இருக்கின்றது. இது விசேஷ சந்நிதியா யிருக்கின்றது.

மண்டுபே ரொளியாள கேடிலியை யர்ச்சித்த
வள்ளி நாயகன் வருகவே
மாகாளி காத்தகீழ் வேளூரில் மாதவம்
வளர்த்த வேலவன் வருகவே.

—க்ஷேத்திரக்கோவைப் பிள்ளைத் தமிழ்—வாராணை-உ.

தீர்த்தம்-சரவணப்பொய்கை. குளக்கரையின் மேற்பக்கத்தில் ஒரு சிவாலயம் இருக்கின்றது. இரண்டாம் பிராகாரத்தில் இலந்தை விருக்ஷம் இருக்கின்றது. இதற்கு வடக்கில் அகஸ்தியர் பூசித்த இலிங்கம் இருக்கின்றது. இந்த ஸ்தல நடராஜமூர்த்தி, அகஸ்தியருக்கு

வலது பாத தரிசநங் கொடுத்தவர். கோயிலிற் குபேரனுடைய சந்நிதியும், சுந்தர கணபதியின் சந்நிதியும், தேவேந்திரன், குபேரன் இவர்கள் விக்கிரகங்களும் இருக்கின்றன.

பிறைநி லாவிய சடையிடைப் பின்னலும் வன்னியுந் துன் னருங்
கறைநி லாவிய கண்டரெண் டோளினர் காதல்செய் கீழ் வேளூர்
மறைநி லாவிய வந்தணர் மலிதரு பெருந்திருக் கோயின்மன்னு
நிறைநி லாவிய வீசனை நேசத்தா னினைபவர் வினைபோமே. (ச)

ஆளான அடியவர்கட் கன்பன் றன்னை
ஆனஞ்சு மாடியைநா னபயம் புக்க
தாளானைத் தன்னொப்பா ரில்லா தானைச்
சந்தனமுங் குங்குமமுஞ் சாந்துந் தோய்ந்த
தோளானைத் தோளாத முத்தொப் பானைத்
தூவெளுத்த கோவணத்தை யரையி லார்த்த
கீளானைக் கீழ்வேளூ ராளுங் கோவைக்
கேடிலியை நாடுமவர் கேடிலாரே. (அ)

**95.** திருக்குடந்தைக்காரோணம் என்பது கும்பகோணத்திலுள்ள காசி விசுவநாதர் கோயில்.

[சோ; ச; காசிவிசுவநாதர்—காசி விசாலாக்ஷி.]

இவ்வாலயம் மகாமககுளத்தின் வடகரையி லிருக்கின்றது. நவ நதிகளும் நவ கன்னிகைகளாய்ப் பூசித்த ஸ்தலம். அவர்கள் உருவங்கள் கோயிலுள் இருக்கின்றன. உமையவள், மாந்தாதா முதலியோர் பூசித்த ஸ்தலம்.

முடியார் மன்னர் மடமான் விழியார் மூவுல கும்மேத்தும்
படியார் பவள வாயார் பலரும் பரவிப் பணிந்தேத்தக்
கொடியார் விடையார் மாட வீதிக் குடந்தைக் குழகாருங்
கடியார் சோலைக் கலவ மயிலார் காரோ ணத்தாரே. (ச)

**96.** திருக்குடந்தைக்கீழ்க்கோட்டம் என்பது கும்பகோணத்திலுள்ள நாகேசுரஸ்வாமி கோயில், ஊர்மத்தியி லிருக்கின்றது.

[சோ; அ; நாகேஸ்வரஸ்வாமி—பெரியநாயகியம்மை.]

கோயில் பெரிது. சூரியன் பூசித்த ஸ்தலம். இங்கே வருஷந் தோறும் சித்திரை மாதம் 11, 12, 13 ஆகிய தேதிகளிற் காலையிற் சூரியகிரணம் ஸ்வாமிமேற் படுகின்றது. கங்கைக் கணபதியார் விக்கிரஹம் மிக நன்று யிருக்கின்றது. அர்த்த நாரீசுரர் விக்கிரஹமும் பிரளயகால ருத்திரர் விக்கிரஹமும் இவ்வாலயத்தில் இருக்கின்றன.

ஏவியிடர்க் கடலிடைப்பட் டிளைக்கின் றேனை
யிப்பிறவி யறுத்தேற வாங்கி யாங்கே
கூவியம ருலகனைத்து முருவிப் போகக்
குறியிலறு குணத்தாண்டு கொண்டார் போலுந்
தாவிமுதற் காவிரிநல் யமுனை கங்கை
சரச்சுதிபொற் றாமரைபுட் கரணி தெண்ணீர்க்
கோவியொடு குமரிவரு தீர்த்தஞ் சூழ்ந்த
குடந்தைக்கீழ்க் கோட்டத்தெங் கூத்த னாரே. (அ)

**97**. திருக்குடமூக்கு என்பது கும்பகோணம்.

[சோ; ச-அ; கும்பேசுரர்-மங்களநாயகி-காவிரிநதி-மஹாமகதீர்த்தம்.]

ரெயில்வே ஸ்டேஷன். ஏமருஷி முதலியோர் பூசித்த ஸ்தலம். பன்னிரண்டு வருஷத்துக் கொருமுறை மாசிமகத்தின்பொழுது காசி கங்கை வரும் ஐதிஹ்யத்தால் அதிக சிறப்படைந்திருக்கும் மாமக தீர்த்தத்தையுடைய ஸ்தலம்.

"கங்கை, மாமகந் தோறும் வந்து வந்துதற் படிந்தோர் விட்டுப்
போமகம் போக மூழ்கும் புநிதநீர்ப் பதியைக் காண்மின்."
—திருவிளை - அருச்சனை - உ௫.

கோயில் மிகவும் பெரிது. காலையில் முதலிற் சூரியனுக்கும், மாலையில் முதலிற் சந்திரனுக்கும், தீபாராதனை ஆகின்றது. ஸ்வாமி கும்பம் போன்றவர். ஸ்ரீ மங்களேஸ்வரி சந்நிதி மிக விசேடமானது. கும்பேஸ்வருடைய சப்தஸ்தான உற்சவ ஸ்தலங்களாவன:

1. கும்பகோணம்
2. கலயநல்லூர்
3. வலஞ்சுழி
4. தாராசுரம்
5. சுவாமிமலை
6. கொட்டையூர்
7. மேலைக்காவிரி

மீநாக்ஷி சுந்தரம் பிள்ளை இயற்றிய திருக்குடந்தைப் புராணம் அச்சிடப்பட்டுள்ளது.

அரவிரி கோட னீட லணி காவிரி யாற்றயலே
மரவிரி போது மௌவல் மண மல்லிகை கள்ளவிழும்
குரவிரி சோலை சூழ்ந்த குழ கன்குட மூக்கிடமா
இரவிரி திங்கள் சூடி யிருந் தானவ னெம்மிறையே. (ரு)

காமி யஞ்செய்து காலங் கழியாதே
ஓமி யஞ்செய்தங் குள்ளத் துணர்மினோ
சாமி யோடுசு ரச்சுவ தியவள்
கோமி யும்முறை யுங்குட மூக்கிலே. (அ)

**98.** திருக்குடவாயில் : [சோ ; ச ; கோணேசுரர்-பெரியநாயகியம்மை.]

தஞ்சாவூருக்குக் கிழக்கு 24-மைலிலுள்ள குறடாச்சேரி ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடக்கு 8-மைல்.

திருணபிந்து முனிவர் பூஜிக்க ஸ்வாமி திருக்குடத்திலிருந்து வெளிப்பட்டு அவருடைய குட்டநோயைத் தீர்த்தருளிய ஸ்தலம்.

திருக்குடவாசலுக்கு வடக்கு 2-மைலில் திருநாலூரும், அதற்கு வடகிழக்கு ஒரு மைலில் திருநாலூர் மயானமும் [168] இருக்கின்றன. திருநாலூருக்கு வடமேற்கு 1-மைலில் திருச்சேறை [140] யிருக்கின்றது.

நிகழுந்திரு மாலொடு நான்முகனும்
புகழும்பெரு மானடி யார்புகல
மகிழும்பெரு மான்குட வாயின்மன்னி
நிகழும்பெருங் கோயினி லாயவனே. (ச)

**99.** குரக்குக்கா : [சோ ; அ ; கொந்தளேசுரர்-கொந்தளநாயகி.]

திருக்கருப்பறியலூருக்கு வடக்கு 1-மைல். கருப்பறியலூருக்குச் [74] சொல்லியிருக்கும் வழியைப் பார்க்க.

ஹநுமார் பூசித்த ஸ்தலம்.

மேலை வானவ ரோடு விரிகடல்
மாலு நான்முக னுலு மளப்பொணுக்
கோல மாளிகைக் கோயில் குரக்குக்காப்
பால ராய்த்திரி வார்க்கில்லை பாவமே. (அ)

**100.** குரங்கணின் முட்டம் :

[தொ ; ச ; வாலீசுரர் - இறையார்வளையம்மை.]

இது காஞ்சீபுரம் ஸ்ரீ ஏகாம்பரேசுரர் ஆலயத்துக்குத் தெற்கு 6-மைலிற் பாலாற்றின் தென்கரைக் கப்பால் இருக்கின்றது. தூசிக்குத் தென்கிழக்கு 1-மைல். குரங்கு (வாலி,) அணில், முட்டம் (காக்கை) இவைகள் பூசித்த ஸ்தலம்.

திருவாயிலிற் குரங்கு பூஜித்தது வடபாலும், அணிலுங் காக்கையும் பூஜித்தது தென்பாலுமாகக் காட்டப்பட் டிருக்கின்றன.

இறையார்வளை யாளையோர் பாகத்த டக்கிக்
கறையார்மிடற் றன்கரி கீறிய கையான்
குறையார்மதி சூடிகு ரங்கணின் முட்டத்
துறைவா னெமை யாளுடை யொண்சுட ரானே. (ச)

**101.** வடகுரங்காடுதுறை :

[சோ ; ச; அழகுசடைமுடிநாதர்-அழகுசடைமுடியம்மை; காவிரிநதி.]

கும்பகோணத்துக்குத் தெற்கு 13½-மைலிலுள்ள ஐயம்பேட்டை ஸ்டேஷனில் இறங்கி, அங்கிருந்து ¾-மைலிலுள்ள திருச்சக்கிரப் பள்ளியைச் [127] சேர்ந்து, அங்கிருந்து வடக்கே 3-மைல் சென்றால், இந்த ஸ்தலத்தை அடையலாம். இதற்கு மேற்கு 3-மைலில் திருப்பழனம் [187] இருக்கின்றது.

வாலி பூசித்த ஸ்தலம். *

* நீலமா மணிநிறத் தரக்கனை யிருபது கரத்தொடொல்க
வாலினாற் கட்டிய வாலியார் வழிபட மன்னுகோயி
லேலமோ டிலையில வங்கமே யிஞ்சியே மஞ்சளுந்தி
யாலியா வருபுனல் வடகரை யடைகுரங் காடுதுறையே. (ச)

**102.** திருத்தென்குரங்காடுதுறை என்பது ஆடுதுறை.

[சோ ; ச – அ ; ஆபத்சகாயேசுரர்-பவளக்கொடியம்மை; காவிரிநதி.]

ரெயில்வே ஸ்டேஷன். திருவிடைமருதூருக்குக் [34] கிழக்கு 2½-மைல். சுக்கிரீவன் பூசித்த ஸ்தலம். இவ்வூரில் வாழை விசேஷம்.

பரவக் கெடும் வல்வினை பாரிடஞ் சூழ
இரவிற் புறங் காட்டிடை நின்றெரி யாடி
அரவச் சடை யந்தணன் மேய அழகார்
குரவப் பொழில் சூழ்குரங் காடு துறையே. (ச)

துளிர்பு னற்குரங் காடுது றையனைத்
தளிர்நி றத்தையல் பங்கனைத் தண்மதி
ஒளிய னைநினைந் தேனுக்க னுள்ளமும்
தெளிவி னைத்தெளி யத்தெளிந் திட்டதே. (அ)

**103.** திருக்குருகாவூர் : வெள்ளடை.

[சோ ; ச - சு ; வெள்ளடையீசுரர் – காவியங்கண்ணியம்மை.]

இது 'திருக்கடாவூர்' என வழங்குகின்றது. சீகாழிக்குக் [88] கிழக்கு 4-மைல்.

சீகாழியிலிருந்து வந்த சுந்தரமூர்த்தி நாயனாருக்கும் அவருடன் வந்த பரிசனங்களுக்கும் சிவபெருமான் கட்டமுதுந் தண்ணீருங் கொடுத்தருளிய ஸ்தலம். *

சுண்ணவெண் ணீறணி மார்பிற் றோல்புனைந்
தெண்ணரும் பல்கண மேத்தநின் றாடுவர்
விண்ணமர் பைம்பொழில் வெள்ளடை மேவிய
பெண்ணமர் மேனியெம் பிஞ்ஞக னாரே. (ரு)

*பாடுவார் பசிதீர்ப்பாய் பரவுவார் பிணிகளைவா
யோடுநன் கலனாக வுண்பலிக் குழல்வானே
காடுநல் லிடமாகக் கடுவிருள் நடமாடும்
வேடனே குருகாவூர் வெள்ளடை நீயன்றே. (சு)

## 104. திருக்குறுக்கை : [சோ ; அ ; வீரட்டேசுரர் – ஞானாம்பிகை.]

மாயூரத்துக்கு வடக்கு 3-மைலிலுள்ள திருநீடூர் [171] என்ற ரெயில்வே ஸ்டேஷன் ஸ்தலத்தையும், அங்கிருந்து மேற்கே 3-மைலிலுள்ள திருஅன்னியூர் [17] என்ற பொன்னூரையுங் கடந்து, அப்பால் வடமேற்கு 4-மைல் சென்றால் இத்தலத்தை யடையலாம். இதற்குத் தெற்கு 3-மைலில் திருமணஞ்சேரி [222] இருக்கின்றது.

அஷ்ட வீரத்தலங்களில் இது காமனை யெரித்த ஸ்தலம். வேதாரணிய புராணம் சபைச்சருக்கத்திற் சொல்லப்பட்ட சபைகளுள் இத்தலத்துச் சபை 'காமாங்கநாசனிசபை' அல்லது 'சம்பு விநோதசபை' என்று கூறப்பட்டுள்ளது.

'ஆடலரங்களை யமுது செய்த செங்கணன் இருக்கை யீது'
—திருவிளை - அருச்சனை - உ௩.

திருக்குறுக்கைப் புராணம் மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை யியற்றி யுள்ளார்.

ஆத்தமா மயனு மாலு மன்றிமற் றொழிந்த தேவர்
சோத்தமெம் பெருமா னென்று தொழுதுதோத் திரங்கள்சொல்லத்
தீர்த்தமா மட்ட மிழுன் சீருடை யேழு நாளுங்
கூத்தராய் வீதி போந்தார் குறுக்கைவீ ரட்ட னாரே. (அ)

## 105. திருக்குற்றாலம் : [பா ; ச ; குறும்பலா ஈசுரர் - குழல்வாய்மொழி யம்மை ; சித்ராநதி ; குறும்பலா விருக்ஷம்.]

திருநெல்வேலி ஜில்லா தென்காசி ரெயில்வே ஸ்டேஷனுக்கு மேற்கு $3\frac{1}{2}$-மைல். இத்தலத்திற் குறும்பலா விருக்ஷம் இருத்தலால் இதற்குக் 'குறும்பலா' என்ற பெயருமுண்டு. 'திரிகூடாசலம்' என்றும் இத்தலத்துக்குப் பெயர்.

விஷ்ணு ரூபமாயிருந்த மூர்த்தி அகஸ்திய முநிவராற் சிவலிங்க ரூபமான ஸ்தலம்.

'துளபக் குன்றைக் கொன்றைமுடிக் குன்றமாக்குந் தொன்னகர்'

—திருவிளை - அருச்சனை - ௩௪.

பஞ்ச சபைகளில் ஒன்றாகிய சித்திர சபையை யுடையது. இத்தலத்துத் தேவியார் திருநாமம் 'குழல்வாய்மொழி மங்கை'. இதனை மாணிக்கவாசக ஸ்வாமிகள் திருக்கோவையார் 94-ஆவது செய்யுளிற் கூறலானு முணர்க.

மலையடிவாரத்திற் கோயிலும் பிரபலமான மலைவீழருவியு மிருக்கின்றன. பிராகாரத்தின் ஓரிடத்திற் "பஞ்ச தரிசநம்" (விநாயகர், இலிங்கம், கோபுரம், மலை, மலைவீழருவி) கிடைக்கின்றது.

கோயிலுக்கு வடக்கு சற்று தூரத்திற் சித்திரசபை இருக்கின்றது. இதனை வலம் வரலாம். இங்கு நடராஜமூர்த்தி சுவரிற் சித்திர ரூபமாக இருக்கின்றார். இதற்குச் சமீபத்திற் "கூத்தர் கோயில்" இருக்கின்றது.

மேலகரம், திரிகூடராசப்ப கவிராயர் இயற்றிய திருக்குற்றாலத் தலபுராணம் அச்சிடப்பட்டுள்ளது. அப்புராணத்தினின்றும் தலப் பெருமையைக் காட்டும் பாடல்களிற் சில:

"பற்று யிருந்து பிறதலத்துப் பல்லா யிரம் யாண் டியற்றுபலன்
குற்றா லத்தி லோராண்டிற் கொடுக்கு மெனுமா மறை மொழியால்"

—வாசுகி தவம் - ௧௧.

"புந்தியுற நினைந்தார்க்கே அருணகிரி தரிசனைக்கே புலியூர் பேறு
நந்துதவழ் திருவாரூர் பிறந்தார்க்கே யிறந்தார்க்கு நல்குங் காசி
எந்தையார் திருவருளாற் பிறந்தார்க்கு மிறந்தார்க்கு மெதிர்கண் டார்க்குஞ்
சிந்தையுற நினைந்தார்க்கு மழியாத கதிகொடுக்குந் திருக்குற் றாலம்.

—தலமகிமை - ௧௮.

நரி கூட வேடனுக்கு நந்தாத பதமளித்தாய்
பரிகூட நரிநடத்தும் பரமகா ரண மூர்த்தி
அரிகூட அயனறியா அண்ணலே இரங்காயுன்
திரிகூடங் கண்டவர்க்குத் தீராத வினையுண்டோ?

—தேவர்கள் சிவத்துரோகந் தீர்ந்தது - ௩௭.

ஏண்டவ ரிருவர் சிவ சிவ சிவவென் றேத்திட விருவரி லொருவன்
காண்டக அரிய சரண நூபுரங்கள் கலின் கலின் கலினெனக் கலிப்ப
ஆண்டகை யமரர் ஜய ஜய ஜயவென் றார்த்திடச் சித்திர சபைக்கே
தாண்டவம் பணிவார் தமக்கெலா முத்தி தகுந் தகுந் தகுமென நடித்தான்.

—திருநடச் சருக்கம் - ௧௮.

குற்றாலத்துக்கு 1½-மைலில் திருப்புகழ்ப் பெற்ற இலஞ்சி என்னும் சுப்ரமண்ய ஸ்தலத்திற் பார்வதி பரமேசுரர் சந்நிதிகளும் உள்ளன.

தென்காசிக்கு 8-மைலில் திருமலை என்னும் சுப்ரமண்ய க்ஷேத்திரம் இருக்கின்றது. மலை உயரமானது. ஸ்தல விருக்ஷம்—புளியமரம். மலை மேற் சுனைக்கரையில் கன்னியர்கள் சந்நிதானமும், உயர்நிலையில் உச்சிப் பிள்ளையார் கோயிலும் இருக்கின்றன.

"திருமலை முருகன் பிள்ளைத் தமிழ்" அச்சிடப்பட்டுள்ளது.

பக்கம் வாழைப் பாய்கனி யோடு பலவின்றேன்
கொக்கின் கோட்டுப் பைங்கனி தூங்கும் குற்றாலம்
அக்கும் பாம்பு மாமையும் பூண்டோ ரனலேந்தி
நக்கன் மேய நன்னகர் போலு நமரங்காள். (ச)

**106. கூடலையாற்றூர்:** [நடு; சு; நெறிகாட்டு நாயகர் - புரிகுழலாம்பிகை; மணிமுத்தநதி – வெள்ளாறு சங்கமம்.]

இது திருமணிமுத்த நதியும் வெள்ளாறும் (நிவாநதி) கூடுமிடத்தில் இருக்கின்றது. விருத்தாசலத்தி [237] லிருந்து கிழக்கே புவனகிரிக்குப் போகும் வழியில் 12-மைல் சென்று வளையமாதேவி யென்னும் ஊரைச் சேர்ந்து, அங்கிருந்து தெற்கே 2-மைல் சென்று மேற் சொன்ன இரண்டு ஆறுகளும் ஒன்றாய்ச் சேர்ந்து செல்லுமிடத்து அவற்றைக் கடந்தால் இந்த க்ஷேத்திரத்தை அடையலாம்.

சிதம்பரம் ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து குமாரகுடி வழியாகவும் போகலாம். குமாரகுடி 12-மைல். அதற்கப்பாற் கூடலை யாற்றூர் 4-மைல்.

தெற்கேயிருந்து சுந்தரமூர்த்தி நாயனார் விருத்தாசலத்துக்குப் போகும்போழுது, ஸ்வாமி பிராமணவடிவமாய் அவர்முன் தோன்றி, 'இந்தக் கூடலையாற்றூர் வழியாகத்தான் விருத்தாசலத்துக்குப் போகவேண்டியது' என்றுசொல்லி, அவரை அழைத்துவந்து, பதிகம் பெற்ற ஸ்தலம்.

இதற்குத் தென்மேற்கு 4-மைலில் ஸ்ரீமுஷ்ணம் என்னும் விஷ்ணுஸ்தலம் இருக்கின்றது.

வடிவுடை மழு வேந்தி மதகரி யுரி போர்த்துப்
பொடியணி திரு மேனிப் புரிகுழ லுமை யோடுங்
கொடியணி நெடு மாடக் கூடலை யாற்றூரி
லடிகளிவ் வழி போந்த வதிசய மறியேனே. (க)

## 107. திருக்கேதாரம்:

[வட; ச-சு; கேதாரேசுரர் - கேதார கௌரியம்மை.]

இஃது இமயமலைச்சாரலி லுள்ளது. இதற்கு வழி தெளிவாகத் தெரியவில்லை-

ஆறு மாதம் தேவர்களாலும், ஆறு மாதம் மானுடர்களாலும் பூஜிக்கப்படும் ஸ்தலம். பிருங்கி ருஷிக்காகப் பார்வதி தேவியார் பரமசிவனைப் பூஜித்து வாமபாகம் பெற்ற ஸ்தலம்.

"தன்னை நீக்கியே சூழ்வுறுந் தவமுடைப் பிருங்கி
யுன்னி நாடிய மறைகளின் முடிவினை யுணரா
என்னை யாளுடை யானிடஞ் சேர்வனென் றிமயக்
கன்னி பூசனை செய்தகே தாரமுன் கண்டான்"

—கந்தபுராணம் - வழிநடைப் படலம்-ங.

தொண்டாஞ்சு களிறு மடக்கிச் சுரும்பார் மலர்
இண்டை கட்டி வழிபாடு செய்யுமிட மென்பரால்
வண்டுபாட மயிலால மான் கன்று துள்ளவரிக்
கெண்டை பாயச் சுனைநீல மொட்டலருங் கேதாரமே. (ச)

கொம்பைப்பிடித் தொருக்காலர்க ளிருக்கான்மலர் தூவி
நம்பன்னமை யாள்வானென்று நடுநாளையும் பகலுங்
கம்பக்களிற் றினமாய்நின்று சுனைநீர்களைத் தூவிச்
செம்பொற்பொடிச் சிந்துந்திருக் கேதாரமெ னீரே. (சு)

## 108. திருக்கேதீச்சரம்:

[ஈழ; ச-சு; கேதீசுரர்-கௌரியம்பிகை; பாலாவி.]

இஃது இலங்கைத்தீவில் உள்ளது. சிலோன் கவர்ன்மெண்டு ரெயில்வே தலைமன்னருக்குக் கிழக்கு 5-மைலிற் பாலாவி என்ற நதியின் கரையில் மாதோட்டம் இருக்கின்றது. அதில் திருக் கேதீச்சுரர் கோயில் இருக்கின்றது.

பிருகு முனிவர் முதலியோர் பூசித்த ஸ்தலம். மாலியவான் என்னும் அசுரன் பூசித்துப் பேறுபெற்ற ஸ்தலம்.

போடிகொள் மேனியர் புலியத ளுரையினர் விரிதரு கரத்தேந்தும்
வடிகொள் மூவிலை வேலினர் நூலினர் மறிகடன் மாதோட்டத்
தடிக ளாதரித் திருந்த கேதீச்சரம் பரிந்த சிந்தையராகி
முடிகள் சாய்த்தடி பேண வல்லார் தம்மேல் மொய்த்தெழும்
வினைபோமே. (ச)

மூவரென விருவரென முக்கண்ணுடை மூர்த்தி
மாவின்கனி தூங்கும்பொழின் மாதோட்டநன் னகரிற்
பாவம்வினை யறுப்பார்பயில் பாலாவியின் கரைமேற்
தேவன் எனை யாள்வான் திருக் கேதீச்சரத் தானே. (௬)

## 109. கைச்சினம்:

[சோ; ச; கைச்சினநாதேசுரர்-வெள்வளையம்மை; இந்திரதீர்த்தம்.]

திருவாரூருக்குத் [23] தெற்கிலுள்ள திருநெல்லிக்கா [175] என்னும் ரெயில்வே ஸ்டேஷனுக்குக் கிழக்கு 2-மைல். திருத்தருப் பூண்டிக்கு வடக்கு 6½-மைல். இதற்கு வடக்கு 3-மைலில் திருக்கா ரூயில் [90] இருக்கின்றது.

திருணபிந்து முனிவர் பூசித்த ஸ்தலம். தேவேந்திரன் பூஜை செய்த திருநகர். மணலினால் இலிங்கம் ஸ்தாபித்துப் பூஜை செய்து பின்பு அதைக் கையினாலெடுத்து அப்புறம் வைக்கும்பொழுது இந்திரனுடைய கைச் சின்னம், அஃதாவது கைக் குறி, அதிற் பொருந்தியது; அக்காரணத்தால் ஸ்வாமிக்குக் கைச் சின்ன நாத ரென்றும், ஸ்தலத்துக்குக் கைச் சின்னம் என்றும் பெயர்வந்தன. கைச்சின்னம் என்பது கைச்சினம் என் றாயிற்று. விரல்கள் பட்ட குறி ஸ்வாமி மேல் இருக்கின்றது. தக்ஷிணாமூர்த்தி விக்கிரகம் நன்று யிருக்கின்றது. இந்திர தீர்த்தம் என்றும் வஜ்ர தீர்த்தம் என்றும் 2-குளங்கள் கோயிலுக்கு வடக்கிலும் தெற்கிலும் இருக்கின்றன. ஸ்தல விருக்ஷம்-கோங்கிலவமரம். சில மரங்கள் கோயிலி லிருக்கின்றன. அவற்றின் பக்கத்தில் கர்ணிகாவனேசுரர் (கோங்கிலவு வன நாதே சுரர்) இருக்கின்றார். தியாகராஜஸ்வாமி உற்சவ மூர்த்தி மூர்த்த மாகத்தான் இந்திரனுக்குக் காக்ஷி கொடுத்தனராம்.

ஸ்தல மான்மியம் அச்சிடப்பட்டுள்ளது.

விடமல்கு கண்டத்தான் வெள்வளையோர் கூறுடையான்
படமல்கு பாம்பரையான் பற்றார் புரமெரித்தா
னடமல்கு மாடலின னான்மறையோர் பாடலினன்
கடமல்கு மாவுரியா னுறைகோயில் கைச்சினமே. [௧]

## 110. கொடிமாடச்செங்குன்றூர் என்பது திருச்செங்கோடு.

[கொ; ச; அர்த்தநாரீசுரர் — பாகம்பிரியாளம்மை.]

சேலம் ஜில்லா சங்கரிதுர்க்கம் ரெயில்வே ஸ்டேஷனுக்குத் தென் கிழக்கு 6-மைல். ஆலயம் உயரிய மலைமே லிருக்கின்றது. வழியிற் பல மண்டபங்களும் சுனைகளு முள்ளன. மலையடிவாரத்தில் ஆறுமுக

ஸ்வாமி தேவிமாருடன் கோயில்கொண்டிருக்கிறார். மலைமேற் சுப்பிரமணிய ஸ்வாமி சந்நிதி தனியாகவும் பெரிதாகவு மிருக்கின்றது. வெண்ணிற மூர்த்தி. ஆதிகேசவப் பெருமாள் சந்நிதி ஒன்று ஆலயத்தில் இருக்கின்றது.

மலைமேலிருந்து பார்த்தாற் காவிரியாறு தெரிகின்றது. மலை சிவந்த நிறமாயிருப்பதால் திருச்செங்கோடு என்னும் பெயர் வந்தது. இம்மலைக்கு நாககிரி என்றும் பெயர். மேலை வீதியிலிருந்து பார்த்தால் மலை நாகம்போல இருக்கின்றது. அர்த்தநாரீசுரர் சந்நிதி மேற்குப் பார்த்தது. அவர் பாதத்தில் ஓ ரூற்று இருக்கின்றது.

இது முருகக்கடவுளுக்கு உகந்த ஸ்தலம். திருஞானசம்பந்த மூர்த்திநாயனார் இங்கெழுந்தருளியிருந்தபொழுது பனிக்காலம் வர, அந்தக்காலத்தில் உண்டாகும் நளிர்ச்சுரத்தினால் அடியார்களும் அவ்வூரார்களும் வருத்தமுறுவதைக் கண்டு, நாயனார் "அவ் வினைக்கிவ்வினை" என்னுந் திருநீலகண்டப்பதிகம் ஓதி, அந் நளிர்ச் சுரம் அந் நாட்டையே விட் டகலும்படிச் செய்தருளிய ஸ்தலம்.

வெந்தவெண் ணீற ணிந்து விரி நூ றிகழ் மார்பி னல்ல
பந்தண வும்விரலா ளொரு பாக மமர்ந்தருளிக்
கொந்தண வும்பொ ழில்சூழ் கொடி மாடச்செங் குன் றூர்நின்ற
அந்தண னைத்தொழுவா ரவல மறுப் பாரே. (சு)

வீரகவிராஜபண்டிதர் இயற்றிய ஸ்தல புராணமும் ஸ்தல மான்மிய வசனமும் அச்சிடப்பட்டிருக்கின்றன.

**111.** திருக்கோடுங்குன்றம் என்பது பிரான்மலை.

[பா; ச; கொடுங்குன்றீசுரர் — குயிலமிர்த நாயகி.]

மதுரைக்கு வடகிழக்கு 42-மைல். இதற்குத் தென்கிழக்கு 15-மைலில் திருப்புத்தூர் [205] இருக்கின்றது. அதற்குச் சொல்லி யிருக்கும் வழியைப் பார்க்க.

மகோதரருஷி, நாகராஜன் முதலியோர் பூசித்த ஸ்தலம். பாடல் பெற்ற ஸ்தலம் அடிவாரத்தி லிருக்கின்றது. மலைமேல் ஏறிச்சென்றால் வைரவர் சந்நிதி ஒன்றும், அப்பாலும் ஏறிச்சென்றாற் சிவ சந்நிதி ஒன்றும் இருக்கின்றன. சிவ சந்நிதியில் ஸ்வாமி கலியாணகோலமாய் இருக்கின்றார். தேவசபை என்றொரு மண்டபம் இருக்கின்றது. இத்தலத்துச் சுப்பிரமணியஸ்வாமி சந்நிதியும் விசேஷம்; அது திருப்புகழ்ப் பெற்றது.

வாணிற்பொலி வெய்தும்மழை மேகங்கிழித் தோடிக்
கூனற்பிறை சேருங்குளிர் சாரற்கொடுங் குன்றம்
ஆனிற்பொலி யைந்தும்மமர்ந் தாடி யுலகேத்தத்
தேனிற்பொலி மொழியாளொடு மேயான்திரு நகரே. [௪]

**112.** கோட்டையூர்: [சோ ; அ ; கோடீசுரர் - பந்தாடு நாயகி.]

கும்பகோணத்துக்கு மேற்கு 2-மைல். கும்பகோணத்துக்கும் ஸ்வாமிமலைக்கு மிடையி லிருக்கின்றது.

மார்க்கண்டேயர் முதலியோர் பூசித்த ஸ்தலம். கோயில் கீழைக் கொட்டையூரி லிருக்கின்றது. விநாயகர்-கோடி விநாயகர். கோடி தீர்த்தம் என்ற கிணறு ஒன் றிருக்கின்றது. திருவலஞ்சுழியிற் [244] காவிரியி லிறங்கின ஏரண்டமுநிவர் இங்கு வெளியே வந்ததாகச் சொல்லுகிறார்கள். அவருடைய திருவுருவமும் கோயிலிலிருக்கின்றது. அப்பர் ஸ்வாமிகள் இத்தலத்துடன் வலஞ்சுழியையுஞ் சேர்த்துப் பாடியிருக்கின்றார். ஊரே முன்பு ஆமணக்கங் காடாக இருந்ததாம். ஸ்வாமி ஆமணக்குக் கொட்டைச் செடியின் கீ ழிருந்து தோன்றினமையின், ஊருக்குக் கோட்டையூர் என்ற பெயரும், சோழமகா ராஜனுக்கு ஒ ருருவிற் கோடிலிங்கமாகத் தரிசநங் கொடுத்தமையால் ஆலயத்துக்குக் கோடீச்சுரம் என்ற பெயரும் போந்தன. இலிங்கத்தில் அநேக சிறிய இலிங்கங்கள் இருக்கின்றன.

[கொட்டையூருக்கு மேற்கு 2-மைலிற் சுவாமிமலை இருக்கின்றது.

சுவாமிமலை; ரெயில்வே ஸ்டேஷன். மலை கட்டுமலை; காவிரிக்கு வடகரையில் இருக்கின்றது. இது திருப்புகழ்ப்பெற்ற சுப்பிரமணிய ஸ்வாமி ஸ்தலம்.]

நளங்கிளருந் தாமரையா னனத்தான் கண்டாய்
தசரதன்றன் மகனசைவு தவிர்த்தான் கண்டாய்
இளம்பிறையு முதிர்சடைமேல் வைத்தான் கண்டாய்
எட்டெட் டிருங்கலையும் ஆனான் கண்டாய்
வளங்கிளர்நீர்ப் பொன்னிவலஞ் சுழியான் கண்டாய்
மாமுநிக டொழுதெழுபொற் கழலான் கண்டாய்
குளங்கிளர்செங் குவளைகிளர் கோட்டை யூரிற்
கோடீச் சுரத்துறையுங் கோமான் றானே. (அ)

**113.** திருக்கொண்டீச்சுரம் : [சோ ; அ ; பசுபதீசுரர் - சாந்தநாயகி.]

நன்னிலம் ரெயில்வே ஸ்டேஷனுக்கு மேற்கு 1½-மைல். நன்னிலத்துக்கு [163] கிழக்கு 1½-மைல். இது வில்வாரணிய க்ஷேத்திரம். காமதேநு பூசித்த ஸ்தலம். முடிகொண்டான் ஆற்றுக்குத் தெற்கு.

கோயிலைச் சுற்றிலும் மாலை போட்டாற்போல அகழி யொன்றிருக்கின்றது. அதற்கு க்ஷீர புஷ்கரணி தீர்த்தம் என்று பெயர். ஒரு காரணத்தால் அம்மை பசுவாகி ஸ்வாமியைத் தேடி, இவ் வில்வ வனத்தில் வந்து, கொம்பினால் உழுது வருகையில், ஸ்வாமியின் சிரசிற் கொம்புபட்டு இரத்தம் வரத் தன் பாலையே விட்டுக் காயத்தை ஆற்றி வழிபட்டதாகச் சொல்லுகிறார்கள். இலிங்கத்தின் உச்சியில் வடு இருக்கின்றது.

நாறு சாந்தணி நன்முலை மென்மொழி
மாறி லாமலை மங்கையோர் பாகமாக்
கூற ருறை கொண்டீச் சரவனைத்
தூறு வார்தமக் கூனமொன் றில்லையே. (அ)

**114.** திருக்கொள்ளம்பூதூர் :

[சோ ; ச ; வில்வவனேசுரர் - சௌந்தராம்பிகை.]

நீடாமங்கலம் ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடகிழக்கு 6-மைல். வெட்டாற்றின் வடகரை. குறடாச்சேரிக்கு வடமேற்கு 5-மைல்.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் இங்கே வரும்பொழுது, ஆறு மிகப் பெருகினதால், ஓடக்காரர்கள் ஓடத்தைக் கரையிலே நிறுத்திவிட்டுப் போயிருந்ததைக் கண்டு, தாமும் தம்முடன் வந்த அடியார்களுமாக ஓடத்தில் ஏறி, ஆற்றுக் கெதிரிலே தோன்றிய இந்தத் திருப்பதியின் மேலே, "கொட்டமே கமழுங் கொள்ளம் பூதூர்" என்னுந் திருப்பதிகம் பாடவும், பரமசிவனுடைய திருவருளால் ஓடஞ் சென்று அக்கரையை யடைய, நாயனார் அடியார்களுடன் இறங்கிச் சென்று தரிசனஞ் செய்த ஸ்தலம்*. இந்த ஐதிஹ்யம் ஐப்பசி மாதம அமாவாசையில் நடத்தப்படுகின்றது.

ஓடம்வந் தணையுங் கொள்ளம் பூதூர்
ஆடல் பேணிய அடிகளை யுள்கச்
செல்ல வுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறரு ணம்பனே. (ச)

## 115. திருக்கோள்ளிக்காடு :

[சோ ; ச ; அக்கினீசுரர் - பஞ்சினுமெல்லடியம்மை.]

திருவாரூருக்குத் [23] தெற்கிலுள்ள திருநெல்லிக்காவுக்கு [175] தென்மேற்கு 2½-மைல். வழியில் ¾-மைலில் திருத்தேங்கூர் [152] இருக்கின்றது. அக்கினி பூசித்த ஸ்தலம். திருநள்ளாற்றி [170] லிருப்பது போலச் சநிபகவான் சந்நிதி பிரபலமா யிருக்கின்றது. மேற்குப் பார்த்த சந்நிதி.

பஞ்சுதோய் மெல்லடிப் பாவை யாளொடு
மஞ்சுதோய் கயிலையுண் மகிழ்வர் நாடொறும்
வெஞ்சின மருப்பொடு விரைய வந்தடை
குஞ்சர முரித்தனர் கோள்ளிக் காடரே. (ச)

## 116. கோகர்ணம் :

[துளுவ ; ச - அ ; மகாபலநாதர்-கோகர்ணநாயகி ; கோடி தீர்த்தம்.]

பொம்பாய் ராஜதானியில் வடகன்னடம் ஜில்லாவில் உள்ளது. மேற்கடற்கரையில் மார்மகோவாவில் கப்பலேறிக் கார்வார் வழியாகத் தெற்கே சென்றால் இந்தத் தலத்தை அடையலாம். மங்களூரி லிருந்தும் கடல்வழியாகவும், நிலவழியாகவும் செல்லலாம்.

மங்களூரிலிருந்து உடுப்பிக்குப் போய் அங்கிருந்து 60-மைல் ரோட் வழியாகப் போகவேண்டும். மங்களூரிற் கப்பலேறிக் குண்டாபூர், ஹனோவர், கும்டா, மார்க்கமாய்ச் சென்று தாட்ரி என்னும் ஊரில் இறங்கி 4-மைல் சென்றால் திருக்கோயிலை அடையலாம். கப்பலில் இரவு 10½-மணிக்கு மங்களூரிற் புறப்பட்டால் மறுநாள் மாலை 7-மணிக்குத் தாட்ரி போய்ச் சேரலாம். பொம்பாய் மார்க்கம் செல்லும் ரெயிலேறி ஹுப்ளி சென்று, அங்கிருந்து 55-மைல் தூரமுள்ள சிர்சி சேர்ந்து, அங்கிருந்து 30-மைல் தூரமுள்ள உப்பின் பட்டணத்தை யடைந்து, அங்கிருந்து 16-மைல் சென்றாலும் இத் தலத்தை அடையலாம். பங்களூர், தும்கூர், ஹரிஹர, ஹாவேரி மார்க்கமாகவும் சிர்சி சேரலாம்.

இராவணன் இலங்கையில் ஸ்தாபிக்கும்படிச் சிவபெருமானிடம் பெற்றுக்கொண்டுவந்த சிவலிங்கத்தை, தேவர்கள் வேண்டுகோளின் பேரில், விநாயகமூர்த்தி ஓ ருபாயத்தாற் பெற்றுப் பிரதிஷ்டை செய்து விட்ட ஸ்தலம். அச்சிவலிங்கத்தை இராவணன் தன் பலங்கொண்ட மட்டும் எடுக்கமுயன்றும் முடியாமையால், "இது மஹாபல லிங்கம்"

என்று சொன்னான். அக்காரணத்தாற் சிவலிங்கப்பெருமானுக்கு "மஹாபல லிங்கேஸ்வரர்" என்னும் பெயர் எய்தியது. சிவலிங்கம் பசுவின் காதுபோற் குழைந்து நீண்டபடியால், இந்த ஸ்தலத்துக்குக் **கோ கர்ணம்** (பசுவின் காது) என்னும் பெயர் உண்டாயிற்று.

சிவராத்திரி தினத்தில் இத்தலத்திற் கோடிதீர்த்த ஸ்நாநமும் தரிசநமும் மஹா விசேடம் என்பது சிவராத்திரி புராணத்தால் அறியக்கிடக்கின்றது.

பேதைமட மங்கையொரு பங்கிட மிகுத்திடப மேறியமரர்
வாதைபட வண்கட லெழுந்தவிட முண்டசிவன் வாழுமிடமாம்
மாதரொடு மாடவர்கள் வந்தடி யிறைஞ்சிநிறை மாமலர்க டூய்க்
கோதைவரி வண்டிசைகொள் கீதமுரல் கின்றவளர் கோகரணமே. (ச)

கையாற் கயிலை யெடுத்தான் றன்னைக்
கால்விரலாற் றேரணிய வூன்றி னான்காண்
மெய்யி னரம்பிசையாற் கேட்பித் தார்க்கு
மீண்டே யவற்கருள்கள் நல்கி னான்காண்
பொய்யர் மனத்துப் புறம் பாவான் காண்
போர்ப்படையான் காண்பொருவா ரில்லா தான்காண்
மைசேர் மணிமிடற்று வார்சடை யான்காண்
மாகடல்சூழ் கோகரண மன்னி னானே. (அ)

## 117. கோடி என்பது குழகர் கோயில்.

[சோ; ச; அமிர்தகடேசுரர் - மையார் தடங்கண்ணி யம்மை.]

வேதாரணியத்துக்குத் [229] தெற்கு 6-மைல். வழியில் அகத்தியான்பள்ளி [1] யிருக்கின்றது. குழகர் கோயிலுக்குத் தெற்கு 1-மைலிற் கோடிக்கரை என்னும் கடற்றுறை யிருக்கின்றது. அமுத தீர்த்தம் என்கிற கிணறு பிராகாரத்தி லிருக்கின்றது. சுப்பிரமணிய ஸ்வாமிக்கு ஒரு முகமும் ஆறு திருக்கரங்களும் இருக்கின்றன.

மையார் தடங் கண்ணிபங்கா கங்கை யாளு
மெய் யாகத்தி ருந்தனள் வேறிடமில்லை
கையார் வளைக் காடுகா ளோடு முடனாய்க்
கொய்யார் பொழிற் கோடியே கோயில்கொண் டாயே. (க)

## 118. திருக்கோடிகா:

[சோ; ச - அ; திரிகோடீசுரர் - வடிவாம்பிகையம்மை; காவிரி.]

திருவிடைமருதூருக்குக் [34] கிழக்கு $1\frac{1}{2}$-மைல். இடையிற் காவிரியாற்றைக் கடக்க வேண்டும்.

மூன்றுகோடி முநிவர்கள் பூசித்த ஸ்தலம். சிருங்க தீர்த்தம் என்னுந் திருக்குளம் கோயிலுக்கு வடக்கி லிருக்கின்றது.

ஏண ழிந்த வாழ்க்கையை யின்ப மென்றி ருந்துநீர்
மாண ழிந்த மூப்பினால் வருந்தல் முன்னம் வம்மினோ
பூணல் வெள் ளெலும்பினான் பொன்றிகழ் சடைமுடிக்
கோணல் வெண் பிறையினான் கோடி காவு சேர்மினே. (௪)

கடிகமழ் கொன்றை யானே கபாலங்கை யேந்தி னானே
வடிவுடை மங்கை தன்னை மார்பிலோர் பாகத் தானே
அடியிணை பரவ நாளும் அடியவர்க் கருள்செய் வானே
கொடியணி விழவ தோவாக் கோடிகா வுடைய கோவே. (௮)

## 119. திருக்கோட்டாறு:

[சோ ; ; ஐராவதேசுரர் - வண்டமர் பூங்குழலம்மை.]

இது திருக்கொட்டாரம் என வழங்குகின்றது. திருநள்ளாறு [160] ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடமேற்கு 3-மைல். அம்பகரத்தூர் ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடகிழக்கு $1\frac{1}{2}$-மைல்.

வெள்ளையானை பூசித்த ஸ்தலம்.

நின்று மேய்ந்து நினைந்து மாகரி நீரொ டும்மலர் வேண்டி வான்மழை
குன்றி னேர்ந்து குத்திப் பணிசெய்யுங் கோட்டாற்றுள்
என்று மன்னிய எம்பிரான் கழ லேத்தி வானர சாள வல்லவர்
பொன்று மாறறியார் புகழார்ந்த புண்ணியரே. (௪)

## 120. கோட்டூர்:

[சோ ; ச ; கொழுந்தீசுரர் - மதுரவசனாம்பிகை ; வன்னிவிருக்ஷம்.]

மன்னார்குடி ரெயில்வேஸ்டேஷனுக்குத் தென்கிழக்கு 10-மைல். திருத்தருப்பூண்டி ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடமேற்கு 9-மைல்.

தேவர்களும் குச்சாருஷியும் பூசித்த ஸ்தலம். மேற்குப் பார்த்த சந்நிதி. சமீபத்தில் திருக்குள மிருக்கின்றது. தேவியார் சந்நிதி கிழக்குப் பார்த்தது.

நீலமார்தரு கண்டனே நெற்றியோர் கண்ணனே யொற்றைவிடைச்
சூலமார்தரு கையனே துன்றுபைம்பொழில்கள் சூழ்ந் தழகாய
கோலமாமலர் மணங்கமழ் கோட்டூர் நற்கொழுந்தே யென்றெழுவார்கள்
சாலநீ ளகலத்திடைப் புகழ்மிகத் தாங்குவர் பாங்காலே. (௪)

**121.** திருக்கோணமலை: [ஈழ; ச; கோணேசுரர்-மாதுமையாளம்மை.]

ரெயில்வே ஸ்டேஷன். இஃது இலங்கைத் தீவில் உள்ளது. தேவேந்திரன் முதலியோர் பூசித்த ஸ்தலம். இந்த ஸ்தலத்துக்கும் தக்ஷிண கைலாசம் என்னும் பெயர் உண்டு. ஈழநாட்டரசர் சிங்கை-ஜகராஜசேகர ரியற்றிய 'தக்ஷிண கைலாச புராணம்' அச்சிடப் பட்டுள்ளது.

நிரைகழ லரவஞ் சிலம்பொலி யலம்பு நிமலர்நீ றணிதிரு மேனி
வரைகெழு மகளோர் பாகமாப் புணர்ந்த வடிவினர் கொடியணி விடையர்
கரைகெழு சந்துங் காரகிற் பிளவு மளப்பருங் கனமணி வரன்றிக்
குரைகட லோத நித்திலங் கொழிக்குங் கோணமா மலையமர்ந் தாரே. (ச)

**122.** கோயில் என்பது சிதம்பரம்.

[சோ; மூ; திருமூலநாதர்-உமையம்மை; சிவகங்கை தீர்த்தம்.]

ரெயில்வே ஸ்டேஷன். இது பூலோக கயிலாயம் எனப்படும் புண்ணிய பூமி. தரிசிக்க முத்தியளிக்கும் ஸ்தலம். பதஞ்சலி வியாக்கிர பாதர் என்னும் இருடிகளுக்காகச் சபாநாயகர் பஞ்சசபைகளில் ஒன்றாகிய கநகசபையிலே எக்காலமும் ஆநந்த தாண்டவஞ் செய்தருளும் பதி. பஞ்ச பூதஸ்தலங்களில் ஆகாய ஸ்தலம். "தில்லைவா ழந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்" என்று சபாநாயகராலேயே புகழப்பெற்ற பெருமையாளர்க ளாகிய தில்லை மூவாயிரவர் பூசிக்குந் திவ்ய க்ஷேத்திரம்.

மாணிக்கவாசக ஸ்வாமிகள், திருநீலகண்ட நாயனார், திருநாளைப் போவார் நாயனார், கூற்றுவ நாயனார், கோச்செங்கட்சோழ நாயனார், கணம்புல்ல நாயனார், மறைஞானசம்பந்த சிவசாரியார், உமாபதி சிவாசாரியார் முதலிய எண்ணிறந்த அடியார்கள் முத்திபெற்ற தெய்வீக ஸ்தலம். மாணிக்கவாசக ஸ்வாமிகள் 'திருச்சிற்றம்பலக் கோவையார்' பாடி யருளின பழம்பதி. சேரமான் பெருமாணயனார் 'பொன் வண்ணத்தந்தாதி' பாடின திருப்பதி. 'சபாநாதருடைய திருவடிகளே நமக்குப் பெருந்துணை' என்று நம்பிப் பூசித்து வந்த அச் சேரமான் பெருமா ணயனாருக்கு, அவர் பூஜை முடிவிலே சபா நாயகர் தம்முடைய திருச்சிலம்பொலி கேட்பித் தருளினர். திருக் கோவலூரி லிருந்த மெய்ப்பொருணயனார் தாம் உயிர்விடுங் காலத்திற் சபாநாயகரைத் தியானித்து அவரால் முத்தியளிக்கப் பெற்றனர்.

அபயகுலசேகர சோழ மகாராஜாவின் காலத்திலே நம்பி யாண்டார் நம்பியால் தேவாரப்பதிகங்கள் கண்டெடுக்கப்பட்ட ஸ்தானம். அநபாய சோழ மகாராஜாவின் காலத்திலே சேக்கிழார் நாயனார் பெரியபுராணம் பாடி யரங்கேற்றிய அரும்பதி.

மற்ற எல்லா க்ஷேத்திரங்களிலுமுள்ள சிவகலைகள் அனைத்தும் அர்த்தஜாமத்தில் தன்னிடத்தில் வந்து சேரப் பெற்ற ஒப்புயர் வில்லாத க்ஷேத்திரம். இன்னும் சொல்லுதற்கரிய அநேக மகிமைகள் பொருந்திய இணையில்லாத மஹாக்ஷேத்திரம்.

கோயில் மிகப் பெரிது. நாற்புறங்களிலும் கோபுரங்கள் உள்ளன. சிவகங்கை தீர்த்தம் கோயிலுக்குள் வடகிழக்கில் இருக்கின்றது. நடராஜப்பெருமான் சந்நிதியில் ரத்நசபாபதி அபிஷேகம், ரஹஸ்ய தரிசநம் முதலியன தரிசிக்கற்பாலன. அம்மன் சந்நிதி தனியாக இருக்கின்றது. கநகசபைக்குத் தென்மேல்பாற் கோவிந்தராஜ பெருமாள் பள்ளிகொண் டிருக்கின்றார்.

ஸ்தல விசேடம் :—

பதஞ்சலி புலிக்கா லண்ணல்
இருவரு முணர்வாற் காண எல்லையி லருளா லீசன்
திருநட வியற்கை காட்டுந் தில்லை மூதூர்.

—கந்தபுராணம் - வழிநடைப் படலம் - கச.

"சத்திய ஞாநா நந்த தத்துவ மசைவற் ற௫
நித்திய பரமா நந்த நிறையருண் மன்ற மீது"

—திருவிளை - அருச்சனை - கஎ.

"விண்டலமே போற்றும் விராட்புருட னாிதய
புண்டரிக மான புலியூரே"—புலியூர் வெண்பா.

உமாபதி சிவாசாரியார் பாடியருளிய கோயிற் புராணம், சிதம்பர புராணம், சிதம்பர சபாநாதர் புராணம் இவை அச்சிடப் பட்டுள்ளன.

நீலத்தார் கரியமிடற்றார் நல்ல நெற்றிமே லுற்ற கண்ணினார் பற்று
சூலத்தார் சுடலைப்பொடி நீறணிவார் சடையார்
சீலத்தார் தொழுதேத்து சிற்றம்பலஞ் சேர்தலாற் கழற்சேவடி கைதொழக்
கோலத்தா யருளாயுன காரணங் கூறுதுமே. (ச)

அன்னம் பாலிக்குந் தில்லைச்சிற் றம்பலம்
பொன்னம் பாலிக்கு மேலுமிப் பூமிசை
என்னம் பாலிக்கு மாறுகண் டின்புற
இன்னம் பாலிக்கு மோவிப் பிறவியே. (அ)

மடித்தாடு மடிமைக்க ணன்றியே மனனேநீ வாழுநாளுந்
தடுத்தாட்டித் தருமனார் தமர்செக்கி லிடும்போது தடுத்தாட் கொள்வான்
கடுத்தாடு கரதலத்திற் றமருகமு மெரியகலுங் கரிய பாம்பும்
பிடித்தாடிப் புலியூர்ச்சிற் றம்பலத்தெம் பெருமானைப் பெற்றாமன்றே. (சு)

**123.** திருக்கோலக்கா என்பது திருத்தாளமுடையார்கோயில்.

[சோ ; ச - சு ; சத்தபுரீசுரர் – ஓசைகொடுத்த நாயகி.]

சீகாழி [88] ரெயில்வே ஸ்டேஷனுக்குத் தெற்கு ½-மைல்; சீகாழி கோயிலுக்கு மேற்கு ¼-மைல். சீகாழிக்கும் கோலக்காவுக்கும் இடையிற் 'கழுமல வாய்க்கால்' ஓடுகின்றது.

திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் பொற்றாளம் பெற்ற ஸ்தலம். *

மடையில் வாளை பாய மாதரார்
குடையும் பொய்கைக் கோலக் காவுளான்
சடையும் பிறையுஞ் சாம்பற் பூச்சுங் கீழ்
உடையுங் கொண்ட உருவ மென்கொலோ. (ச)

*நாளு மின்னிசை யாற்றமிழ் பரப்பு ஞான சம்பந்த னுக்குல கவர்முன்
தாள மீந்தவன் பாடலுக் கிரங்குந் தன்மை யாளனை யென்மனக் கருத்தை
ஆளும் பூதங்கள் பாடநின் றாடு மங்க ணன்றனை யெண்கண மிறைஞ்சுங்
கோளிலிப் பெருங்கோயி லுள்ளானைக் கோலக் காவினிற்
கண்டு கொண்டேனே. (சு)

**124.** திருக்கோவலூர் :

[நடு ; ச–அ ; வீரட்டேசுரர் – சிவானந்தவல்லி ; பெண்ணை நதி.]

இது பெண்ணையாற்றின் தென்கரையி லிருக்கின்றது. ரெயில்வே ஸ்டேஷன் வடகரையில் அறையணிநல்லூரி [14] லிருக்கின்றது. அஷ்டவீரத் தலங்களில் ஒன்று. அந்தகாசுரனைச் சங்கரித்தருளிய ஸ்தலம்.

" அவுணரிற் கள்வ னான அந்தகற் காய்ந்து மூன்று
புவனமுங் கவலை தீர்த்த புண்ணியன் புரமீ தாகும்.

—திருவிளை - அருச்சனை - கக.

மெய்ப்பொருள் நாயனாருடைய திருப்பதி.

திருக்கோவலூர் 'மேலூர்' என்றும், 'கீழூர்' என்றும் இரண்டுபாகமாக இருக்கின்றது. மேலூரே திருக்கோவலூர் என இப்பொழுது வழங்குகின்றது. சிவாலயம் கீழூரி லுள்ளது. சந்நிதி

மேற்குப் பார்த்தது. அம்மன் கோயில் தனியாக விருக்கின்றது. மேலூரில் திரிவிக்ரம பெருமாள் கோயில் இருக்கின்றது.

திருக்கோவலூர்ப் புராணம் அச்சிடப்பட்டுள்ளது.

படைகொள் கூற்றம் வந்துமெய்ப் பாசம் விட்ட போதின்க
ணிடைகொள் வாரெ மக்கிலை யெழுக போது நெஞ்சமே
குடைகொள் வேந்தன் மூதாதை குழகன் கோவ லூர்தனுள்
விடைய தேறுங் கொடியினன் வீரட் டானஞ் சேர்துமே. (ச)

தலைசுமந் திருகைந் நாற்றித் தரணிக்கே பொறைய தாகி
நிலையிலா நெஞ்சந் தன்னுள் நித்தலு மைவர் வேண்டும்
விலைகொடுத் தறுக்க மாட்டேன் வேண்டிற்றே வேண்டி யெய்த்தேன்
குலைகொண் மாங் கனிகள் சிந்துங் கோவல்வீ ரட்ட னீரே. (அ)

## 125. திருக்கோழம்பம்: [சோ; ௬-அ; கோகிலேசுரர் - சௌந்தரநாயகி.]

மாயூரத்துக்கு மேற்கு 10-மைலிலுள்ள நரசிங்கன் பேட்டை ரெயில்வே ஸ்டேஷனுக்குத் தென் கிழக்கு 2-மைல்.

சுந்தன் என்னும் வித்தியாதரன் தேவேந்திரனாற் குயிலாய்ப் போம்படிச் சாபம் பெற்று, அநேக நாள் கழித்து, இங்கு வந்து பூஜித்து அவ்வுருமாறிப் பழைய ரூபம் பெற்ற ஸ்தலம்.

நீற்றானை நீள்சடை மேனிறை வுள்ளதோர்
ஆற்றானை யழகமர் மென்முலை யாளையோர்
கூற்றானைக் குளிர் பொழிற் கோழம்ப மேவிய
ஏற்றானை யேத்துமி னும்மிடர் ஏகவே. (ச)

கயிலை நன்மலை யாளுங் கபாலியை
மயிலி யன்மலை மாதின் மணாளனைக்
குயில்ப யில்பொழிற் கோழம்ப மேயவென்
உயிரி னைநினைந் துள்ள முருகுமே. (அ)

## 126. திருக்கோளிலி:

[சோ; ௱; கோளிலிநாதேசுரர்-வண்டமர் பூங்குழலம்மை; பிரமதீர்த்தம்.]

இது 'திருக்குவளை' யென வழங்குகின்றது.

கீழ் வேளூர் [94] ரெயில்வே ஸ்டேஷனுக்குத் தெற்கு 7-மைல். திருவாரூருக்குத் [23] தென்கிழக்கு 12-மைல். கைச்சினத்துக்குக் [109] கிழக்கு 4-மைல்.

இது சப்தவிடங்க ஸ்தலங்களில் ஒன்று. சுந்தரமூர்த்தி நாயனார் "நீளநினைந்தடியேன்" என்னும் திருப்பதிகம்பாடி, இதற்குச் சமீபத்தி

னுள்ள குண்டையூரி லிருந்த நெல்மலையைத் திருவாரூருக்குப் பூத கணங்களா லெடுப்பித்துக்கொண்டுபோன ஊர்*. பிரமன் பூசித்த தலம். பிரம தீர்த்தம் கோயிலுக் கெதிரிலிருக்கின்றது. அகஸ்தியர் பூஜித்த லிங்கம் பிராகாரத்தி லிருக்கின்றது. பீமன் பகாசூரனைச் சம்ஹரித்ததனு லுண்டான ஹத்தியை இந்தத் தலத்திற் போக்கிக் கொண்டான். பகாசூரனுடைய உருவமும் ஹத்தியின் உருவமும் முன் கோபுரத்தில் இருக்கின்றன.

குண்டையூருக்குங் கோளிலிக்கும் $\frac{3}{4}$-மைல். மத்தியிற் சந்திர நதி ஓடுகின்றது. குண்டையூரில் ஸ்வாமி பெயர் - சுந்தரேசுரர்; தேவியார் - மீநாக்ஷியம்மை. மதுரைமாநகரைத் தரிசிக்க விரும்பின குண்டையூர்க் கிழவருக்கு மீநாக்ஷி சுந்தரேசுரர் இத்தலத்தில் தமது தரிசநந் தந்தருளினர்.

திருக்கோளிலிக்கு $1\frac{1}{2}$-மைலில் எட்டிகுடி யென்னும் திருப்புகழ்ப் பெற்ற சுப்பிரமணிய க்ஷேத்திர மிருக்கின்றது. இங்கு சித்திரா பௌர்ணமியன்று எண்ணிறந்த காவடிகள் வருகின்றன.

நாளாய போகாமே நஞ்சணியுங் கண்டனுக்கே
ஆளாய அன்பு செய்வோம் மடநெஞ்சே அரனுமம்
கேளாய்நங் கிளைகிளைக்குங் கேடுபடாத் திறமருளிக்
கோளாய நீக்குமவன் கோளிலியெம் பெருமானே. (ச)

முன்ன மேநினை யாதொழிந் தேனுனை
இன்ன நானுன சேவடி யேத்திலேன்
செந்நெ லார்வயல் சூழ்திருக் கோளிலி
மன்ன னேயடி யேனை மறவலே. (அ)

நீள நினைந்தடியே னுமை நித்தலுங் கைதொழுவேன்
வாளன கண்மடவா ளவள் வாடி வருந்தாமே
கோளிலி யெம்பெருமான் குண்டை யூர்ச்சில நெல்லுப் பெற்றேன்
ஆளிலை யெம்பெருமா னவை யட்டித் தரப்பணியே. (க)

## 127. திருச்சக்கிரப்பள்ளி:

[சோ; ச; ஆலந்துறையீசுரர்—அல்லியங்கோதை; காவிரி]

ஐயம்பேட்டை ரெயில்வே ஸ்டேஷனுக்கு மேற்கு $\frac{1}{2}$-மைல்.

இந்திர குமாரனை சயந்தனும் தேவர்களும் பூசித்த ஸ்தலம். விஷ்ணு பூஜித்துச் சக்கிரம் பெற்றபடியாற் சக்கிரப்பள்ளி எனப்

பெயர் வந்தது. "வண் சக்கிர மாலுறைப்பா லடிபோற்றக் கொடுத்த பள்ளி",—என்பது தேவாரம்.

நலமலி கொள்கையார் நான்மறைப் பாடலார்
வலமலி மழுவினர் மகிழுமூர் வண்டறை
மலர்மலி சலமொடு வந்திழி காவிரி
சலசல மணிகொழி சக்கிரப் பள்ளியே. (௪)

## 128. திருச்சத்திமுத்தம்:

[சோ ; அ ; சிவக்கொழுந்தீசுரர் - பெரியநாயகியம்மை ; சூலதீர்த்தம்.]

கும்பகோணத்துக்குத் தென்மேற்கு 4-மைல். தாரேசுரம் ஸ்டேஷனுக்குத் தென்மேற்கு 2—மைல். பட்டீச்சுரம் [180] இத னுடன் சேர்ந்து இதற்குத் தெற்கி லிருக்கின்றது.

பராசக்தி ஸ்வாமியைத் தழுவி முத்தங் கொடுத்த ஸ்தலம். அந்த வுருவமுங் கோயிலி லிருக்கின்றது.

" மட்டார் குழலி மலைமகள் பூசை மகிழ்ந்தருளும்
சிட்டா திருச்சத்தி முத்தத் துறையுஞ் சிவக்கொழுந்தே "—,

என்பது தேவாரம். "பூவா ரடிச்சுவ டென்மேற் பொறித்துவை"—, "இம்மையுன் றாளென்றன் நெஞ்சத் தெழுதிவை"—, என அப்பர் ஸ்வாமிகள் வேண்டித் துதித்த ஸ்தலம்.

கோவாய் முடுகி யடுதிறற் கூற்றங் குமைப்பதன்முன்
பூவா ரடிச்சுவ டென்மேற் பொறித்துவை போகவிடின்
மூவா முழுப்பழி மூடுங்கண் டாய்முழங் குந்தழற்கைத்
தேவா திருச்சத்தி முத்தத் துறையுஞ் சிவக்கொழுந்தே. (அ)

## 129. சாத்தமங்கை: [சோ ; ச ; அயவந்தீசுரர்-மலர்க்கண்ணம்மை.]

திருநள்ளாற்றுக்குத் [160] தென்மேற்கு 5—மைல்.

அப்பால் 1—மைலில் திருமருகல் [227] இருக்கின்றது.

சாத்தமங்கையிலுள்ள ஆலயத்துக்கு அயவந்தியென்று பெயர். திருநீலநக்கநாயனருடைய ஸ்தலம்†. இந்நாயனர் ஸ்வாமி தரிசனத்துக் காக மனைவியுடன் ஆலயத்துக்குச் சென்றபொழுது, ஒரு சிலந்திப்பூச்சி சிவலிங்கத்தின் மேல்விழ, மனைவியார் அன்பு மிகுதியினால் அதை வாயால் ஊதி அகற்ற, நாயனர் அப்படிச்செய்தது அநுசிதமென் றெண்ணி மனைவியாரை நிக்கிரகித்துவிட, சிவபெருமான் அவருடைய கனவிற் றோன்றி அவர் மனைவியார் ஊதின இடந்தவிர மற்றையிடம் சிலந்தியின் கொப்புளமாயிருப்பதைக் காட்டி, மனைவியாருடைய

அன்பை வெளிப்படுத்தி, அவரை மறுபடி நாயனருடன் சேர்த்தருளிய ஸ்தலம். 'அடிகள் நக்கன் பரவ அயவந்தி அமர்ந்தவனே'; 'நிறையினார் நீலநக்க னெடு மாநகரென்று தொண்ட ரறையுமூர் சாத்தமங்கை'—, என்பன தேவாரம்.

†பொடிதனைப் பூசு மார்பிற் புரி நூலொரு பாற் பொருந்தக்
கொடியன சாய லாளோ டுடனாவதுங் கூடுவதே
கடிமண மல்கி நாளுங் கம ழும்பொழிற் சாத்த மங்கை
யடிகணக் கன்ப ரவ அய வந்திய மர்ந்த வனே. (௩)

**130.** திருச்சாய்க்காடு என்பது சாயாவனம்.

[சோ; ச - அ; சாயாவனேசுரர் - குயிலினுநன்மொழியம்மை; காவிரி.]

சீகாழிக்குத் தென்கிழக்கு 9—மைல். வழியில் 7—ஆவது மைலில் திருவெண்காடு [263] இருக்கின்றது.

உபமந்யுருஷி பூசித்த ஸ்தலம். காசிக்குச் சமானமாகச் சொல்லும் 6—க்ஷேத்திரங்களில் ஒன்று. அம்மன் பெயர் கோஷாம்பாள் என்றும் சொல்லுகிறார்கள். கோயிலுக்கெதிரில் ஐராவத தீர்த்தம் இருக்கின்றது. கோயிலை ஒட்டித் தேர்போன்ற விமானமொன்று சக்கிரத்துடன் இருக்கின்றது. இந்திரன் இக்கோயிலை விண்ணுலகுக்கு எடுத்துச் செல்ல முயன்றனனென்பர். இயற்பகை நாயனார், அவர் மனைவி இவர்களின் உற்சவ விக்கிரகங்கள் இருக்கின்றன.

நீநாளு நன்னெஞ்சே நினைகண்டா யாரறிவார்
சாநாளும் வாழ்நாளுஞ் சாய்க்காட்டெம் பெருமாற்கே
பூநாளுந் தலைசுமப்பப் புகழ்நாமஞ் செவிகேட்ப
நாநாளு நவின்றேத்தப் பெறலாமே நல்வினையே. (௪)

தோடுலா மலர்கள் தூவித் தொழுதெழு மார்க்கண் டேயன்
வீடுநா ளணுகிற் றென்று மெய்கொள்வான் வந்த காலன்
பாடுதான் செலலு மஞ்சிப் பாதமே சரண மென்னச்
சாடினார் காலன் மாளச் சாய்க்காடு மேவி னாரே. (அ)

**131.** சிக்கல்:

[சோ; ச; வெண்ணெயிலிங்கேசுரர் - வேனெடுங் கண்ணி யம்மை.]

ரெயில்வே ஸ்டேஷன். நாகபட்டினத்துக்கு [165] மேற்கு 3—மைல். ஸ்வாமி சந்நிதி கட்டுமலைமேலிருக்கின்றது. தீர்த்தம் க்ஷீர புஷ்கரணி. மல்லிகை விசேஷம். வசிஷ்டர் தம்முடைய காமதேநுவைப்

பெறும்பொருட்டுப் பூசித்த ஸ்தலம். இங்கே சிங்காரவேலவராகிய சுப்பிரமணிய ஸ்வாமி சந்நிதியுங் கட்டுமலைமேற்றான் இருக்கின்றது. அவருக்கு ஆட்டுக்கடா வாகனம் ஒன் றிருக்கின்றது. அது வெகு நன்று யிருக்கின்றது. காமதேநு இங்கிருந்தபடியால் அதன் பால் பெருகி யெங்கும் வெண்ணெயா யுறைந்திருந்தது. வசிஷ்டர் அவ் வெண்ணெயை எடுத்துச் சிவலிங்கமாக்கிப் பூஜித்தார். அதனால் ஸ்வாமிக்கு 'வெண்ணெ யிலிங்கேசுரர்' என்று பெய ருண்டாயிற்று. அந்த இலிங்கத்தை வேறிடத்தில் வைக்க எடுக்கும்பொழுது, அது வராமற் சிக்கிக்கொண்டபடியால் ஊருக்குச் சிக்கல் என்னும் பெயர் உண்டாயிற்று. இந்த ஸ்தலத்திற் சூரசம்ஹார உற்சவம் விசேஷம்.

கோயிலுக்குள் வடபக்கத்திற் கோலவாமனப் பெருமாளுடைய சந்நிதி யிருக்கின்றது.

நீலநெய் தன்னில விம்மல ருஞ்சுனை நீடிய
சேலுமா லுங்கழ னிவ்வள மல்கிய சிக்கலுள்
வேலவொண் கண்ணியி னாளையோர் பாகன்வெண் ணெய்ப்பிரான்
பாலவண் ணன்கழ லேத்தநம் பாவம்ப றையுமே. [௬]

## 132. திரிசிராப்பள்ளி:

[சோ; ச-அ; தாயுமானேசுரர்-மட்டுவார்குழலம்மை; காவிரி.]

ரெயில்வே ஸ்டேஷன். மூன்று சிரங்க ளிருந்த 'திரி சிரன்' என்னும் அரக்கன் பூஜித்தமையின், இந்த ஸ்தலத்துக்குத் 'திரி சிராப் பள்ளி' என்னும் பெய ரெய்தியது.

"மூச்சென்னி மடங்க லேறனையா ளுமை வரையிது."

—திருவிளை - அருச்சனை – ௨௭.

திருக்காளத்தி, திருக்கோணமலை இவைகளைப்போல, இதுவும் 'தக்ஷிண கைலாசம்' எனப்படும்.

கோயில் மலைமே லிருக்கின்றது. ஸ்வாமியிடத்தில் அன்பு மிகுந் திருந்த ஒருமாது, கருப்பமாயிருந்து, பிரசவகாலத்திற் காவிரி பெருகினதால், தன் தாய் வந்து உதவப் பெறாமற் சங்கடப்படும் பொழுது, ஸ்வாமியே அவள் தாயைப்போல வந்து மருத்துவம் பார்த்து ஆதரித்த அருமையான ஸ்தலம். இதனால் ஸ்வாமிக்குத் தாயும் ஆனவர் என்னும் பெயர் வந்தது. மேற்கு நோக்கிய சந்நிதி.

அதிமதுரமான தமிழ்ப் பாடல்களாற் கடவுளைப் பாடித்துதித்த தாயுமான ஸ்வாமிகள் எழுந்தருளியிருந்த ஸ்தலம்.

மலை உச்சியில் உச்சிப்பிள்ளையார் கோயில் இருக்கின்றது. அங்கிருந்து பார்த்தால் திருவானைக்கா, ஸ்ரீரங்கம், ஆகிய தலங்களின் கோபுரங்களும், காவிரியாறும், கொள்ளிடநதியும், திரிசிராப்பள்ளி நகரும் தெரிகின்றன.

சைவ-எல்லப்பநாவலர் இயற்றிய 'செவ்வந்திப் புராணம்' எனப்படும் இவ்வூர்த் தலபுராணம் அச்சிடப்பட்டுள்ளது.

நன்றுடை யானைத் தீயதி லானை நரைவெள்ளே
றொன்றுடை யானை யுமையொரு பாக முடையானைச்
சென்றடை யாத திருவுடை யானைச் சிராப்பள்ளிக்
குன்றுடை யானைக் கூறவென் னுள்ளங் குளிருமே. (ச)

தாயு மாயெனக் கேதலை கண்ணுமாய்ப்
பேய னேனையு மாண்ட பெருந்தகை
தேய நாதன் சிராப்பள்ளி மேவிய
நாய னாரென நம்வினை நாசமே. [அ]

## 133. சிவபுரம்:

[சோ; ச-அ; சிவபுரநாதர்–சிங்காரவல்லி; *சண்பகவிருக்ஷம்.]

கும்பகோணத்துக்குத் [97] தென்கிழக்கு 3-மைல். விஷ்ணு வராகமாய்ப் பூசித்த ஸ்தலம்†; இந்த ஐதிஹ்யம் கோயில் மதிற்சுவரிற் காட்டப்பட்டிருக்கின்றது.

"எயிறது னுதிமிசை, யிதமமர் புவியது நிறுவிய எழிலரி வழிபட
அருள்செய்த, பதமுடை யவனமர் சிவபுரம்",

"பிறை யெயிற்று வெள்ளைப்பன்றி பிரியாது பலநாளும்
வழிபட்டேத்துஞ் சீரவன்காண், சீருடைய தேவர்க்கெல்லாஞ்
சிவனவன்காண் சிவபுரத்தெஞ் செல்வன்தானே"

* "சேண்பக மலர்பொழிற் சிவபுரமே".

என்பன தேவாரம்.

†அன்றடற் காலனைப் பாலனுக்காப்
பொன்றிட வுதைசெய்த புநிதனகர்
வென்றிகொ ளெயிற்றுவெண் பன்றி முன்னாட்
சென்றடி வீழ்தரு சிவபுரமே. (ச)

வானவன்காண் வானவர்க்கு மேலா னான்காண்
வடமொழியுந் தென்தமிழும் மறைகள் நான்கும்
ஆனவன் காண் ஆனைந்தும் ஆடி னான்காண்
ஐயன்காண் கையிலனல் லேந்தி யாடும்

கானவன்காண் கானவனுக் கருள்செய் தான்காண்
கருதுவா ரிதயத்துக் கமலத் தூறுந்
தேனவன்காண் சென்றடையாச் செல்வன் றான்காண்
சிவனவன்காண் சிவபுரத்தெஞ் செல்வன்றானே. (அ)

**134**. சிறுகுடி: [சோ; மங்களேசுரர் - மங்களநாயகி.]

பேரளம் ரெயில்வே ஸ்டேஷனுக்கு மேற்கு 1-மைலிலுள்ள திருமீயச்சூருக்கு [234] மேற்கு $4\frac{1}{2}$-மைல். திருப்பாம்புரத்துக்கு [200] மேற்கு 1-மைல். அப்பால் திருவீழிமிழலை [261] சமீபித்திருக்கின்றது.

செவ்வாயும், கருடனும், கந்தருவர்களும் பூசித்த ஸ்தலம்.

செருவரை வயலமர் சிறுகுடி மேவிய
இருவரை யசைவுசெய் தீரே
இருவரை யசைவுசெய் தீருமை யேத்துவார்
அருவினை யொடுதுய ரிலரே. (க)

**135**. திருச்சிற்றேமம்: இது சிற்றும்பூர் அல்லது சிற்றுய்மூர் என வழங்குகின்றது.

[சோ; ச; பொன்வைத்தநாதேசுரர் - அகிலாண்ட நாயகி.]

திருத்தருப்பூண்டிக்கு வடக்கிலுள்ள ஆலத்தம்பாடி ரெயில்வே ஸ்டேஷனிலிறங்கிக் கிழக்கே $1\frac{3}{8}$-மைல் சென்று, ஆலத்தம்பாடி ஊரை யடைந்து, பின்னரும் கிழக்கே $2\frac{3}{8}$-மைல் சென்று, அப்பால் வடக்கே திரும்பி அரிச்சந்திர நதியைக் கடந்து $1\frac{1}{8}$-மைல் போகவேண்டும்.

ஆற்றுக்குப் பாலமில்லை. மழைக்காலத்திற் போவது கஷ்டம். விருக்ஷம்-ஆத்தி; மிகவும் பழமையா யிருக்கின்றது. வேத தீர்த்தம் கோயிலுக்கு மேற்கி லிருக்கின்றது. அகஸ்தியரும், தேவேந்திரனும், நாகராஜனும், பிரமனும், வேதங்களும் பூசித்த ஸ்தலம். ஸ்வாமிக்குப் பொன்வைத்தநாதர், பாலாட் டுகந்தவர், ஆத்திவனநாதர், இந்திரபுரீசுரர், சர்ப்பபுரீசுரர், மதுபுரீசுரர், சித்தபுரீசுரர், பிரமபுரீசுரர், வேதபுரீசுரர் எனத் திருநாமங்கள் உண்டு. வரும்படி உள்ள கோயில் இடிந்துகிடக்கின்றது. அந்தோ பரிதாபம்!

ஸ்வாமி சந்நிதியில் தென்பக்கத்தில் ஒரு தேன்கூடு இருக்கின்றது. சித்தர்கள் தேன் ஈக்கள்போல உருவெடுத்து வந்து பூசித்ததாகச் சொல்லுகிறார்கள். இந்தத் தேன்கூட்டுக்கும் தினம் பூஜைநடக்கின்றது. கோயிலுக்கு வடக்கே சொர்ண புஷ்கரணி யென்னும் திருக்குளம் இருக்கின்றது.

இவ்வூரிலிருந்த வணிகன் ஒருவன், கர்ப்பிணியாயிருந்த தன் மனைவியை யிங்குவிட்டு, வர்த்தகம் செய்யும்பொருட்டு வேறுதேசம் சென்றான். திரும்பிவர 4-5-வருஷமாயிற்று. அவன் மனைவி தினந் தோறும் கோயிலுக்குச் சென்று ஸ்வாமி தரிசனஞ்செய்து வருபவள் வயிற்றுக்கில்லாமற் கஷ்டப்படுவதை ஸ்வாமி யறிந்து, அவளுக்குச் சொப்பனத்தில் தோன்றி, 'உனக்குத் தினம் ஒரு பொன் கோயில் சந்நிதியில் வைப்போம். அதை நீ எடுத்து மாற்றிப் பணமாக்கி அதைக்கொண்டு ஜீவி' என்று சொல்லியருளினார். பொன்னிறை யென்னும் அடுத்த கிராமத்தில் வசித்த வணிகனுக்குங் கனவிற் றோன்றி, அம்மாது கொண்டுவரும் பொன்னை யெடுத்துக்கொண்டு அதற்குண்டான பணத்தைக் கொடுத்துவரும்படிச் சொல்லியருளினார். அவன் அப்படியே பொன்னை நிறுத்துப்பார்த்து, ஸ்வாமி சொன்ன நிறைப்படி யிருக்கக்கண்டு, பணம் கொடுத்துவந்தான். அக்காரணத்தால் அவனிருந்த ஊருக்குப் 'பொன்னிறை' என்னும் பெயர்வந்தது. திருச்சிற்றேமத்திலிருந்து போன வர்த்தகன் திரும்பிவந்தபொழுது, அவன் பிள்ளைக்கு 4-5-வயதாயிற்று. ஊரார் உண்மையை உணராமல் அவன் மனைவியின்மேற் சந்தேகப்பட்டு அவள் புருஷனிடஞ் சொன்னார்கள். அவனுடைய திருப்திக்காக அப்பதிவிரதையின் பிரார்த்தனைப்படி, கோயிலிற் சந்நிதிக்குப் பின் னிருந்த ஆத்திவிருக்ஷம் கோயிலுக்கு முன்னும், பலிபீடத்துக்கு முன்னிருந்த நந்தி அதற்குப் பின்னுமாக இடம் மாறியிருக்கும்படிச் சிவபெருமான் செய்தருளினார்.

குறிப்பு :-பட்டுக்கோட்டைத் தாலூக்காவில் 'திருச்சிற்றம்பலம்' என்னும் ரெயில்வே ஸ்டேஷன் இருக்கின்றது. திருச்சிற்றம்பலத்தி லுள்ள கல்வெட்டுக்களில் அவ்வூரைத் 'திருச்சிற்றேமம்' என்று கூறப்பட்டுள்ளதாம். சிற்றாய்மூரிலுள்ள கல்வெட்டுக்களில் அவ்வூரைச் சிற்றாமூர் என்றுதான் கூறப்பட்டுள்ளதாம். ஆதலாற் சிற்றேமம் என்பது இப்பொழுது திருச்சிற்றம்பலம் என வழங்கும் ஊராகத்தான் இருக்கவேண்டும் என ஆராய்ச்சி வல்லுநர் கூறுகின்றனர். இவையன்றித் திருத்தருப்பூண்டிக்கு மேற்கில் எழிலூர், நேமம் என இரண்டு ஊர்களில் உள்ள ஆலயங்களையும் திருச்சிற்றேமம் எனப் பாடல்பெற்றன என்பாருமுளர்.

கிளருந் திங்கள் வாண்முக மாதர் பாடக் கேடிலா
வளருந் திங்கள் சூடியோ ராடன் மேய மாதவன்
தளிருங் கொம்பு மதுவுமார் தாமஞ் சூழ்சிற் றேமத்தான்
ஒளிரும் வெண்ணூன் மார்பனென் னுள்ளத் துள்ளா னல்லனே. (௪)

**136.** திருச்சுழியல் : [பா; சு; திருமேனிநாதேசுரர்-துணைமாலையம்மை,]

மதுரையிலிருந்து 38-மைல். விருதுப்பட்டியாகிய விருத்த நகர் ரெயில்வேஸ்டேஷனுக்குக் கிழக்கு 19-மைல். வழியில் 11-ஆவது மைலில், மதுரைக்குத் தெற்கு 30-மைலிலுள்ள, அருப்புக்கோட்டை இருக்கின்றது.

பார்வதிதேவியார் தம்மைச் சிவபெருமான் மணம்புரியும்படிப் பூஜித்த ஸ்தலம்.

சதாநந்த முநிவர் முதலியோரும் பூசித்த ஸ்தலம்.

" மலைமகளை, விரதயோக நெறி நின்று மணந்தார் சுழியல் வியனகரும் "

—திருவிளை-அருச்சனை - ௩௨,

கோயிலுக் கெதிரில் உள்ள தீர்த்தத்துக்குக் "கௌவைக்கடல்" என்னும் பெயர் தேவாரத்திற் சொல்லப்பட்டிருக்கின்றது. ஸ்தலபுராணம் அச்சிடப்பட்டுள்ளது.

உற்றூனமக் குயரும்மதிச் சடையான்புல னைந்தும்
செற்றார்திரு மேனிப்பெரு மானூர்திருச் சுழியல்
பெற்றானினி துறையத்திறம் பாமைத்திரு நாமங்
கற்றாரவர் கதியுட்செல்வ ரேத்தும்மது கடனே. (சு)

**137.** திருச்சேங்காட்டங்குடி :

[சோ ; ச-அ ; கணபதீச்சுரர்-திருக்குழல்நாயகி யம்மை-ஆத்திவிருக்ஷம்.]

நன்னிலம் ரெயில்வே ஸ்டேஷனுக்குக் கிழக்கு $3\frac{3}{4}$-மைலிலுள்ள திருப்புகலூரை [203] யடைந்து, அங்கு தெற்கே திரும்பி முடிகொண்டான் ஆற்றைக்கடந்து, 1-மைல் சென்று, திருக்கண்ணபுரத்தை அடைந்து, அங்கிருந்து கிழக்கே 1-மைல் போகவேண்டும்.

கஜமுகாசுரனைக்கொன்ற பழிநீங்கும் பொருட்டு விநாயகமூர்த்தி பரமசிவனைப் பூசித்த ஸ்தலம்.

" கரிமுகத் தவுணற் காய்ந்து கரிமுகத் தண்ணல் பூஜை
புரிசிவ நகர மீது." —திருவிளை – அருச்சனை-உக.

அசுரனது இரத்தம் பெருகிச் செங் காடாய் இருந்தமைபற்றி இந்த ஸ்தலத்துக்குத் திருச்செங்காட்டங்குடி என்னும் பெயரும், கணபதி பூஜித்ததனால் ஆலயத்துக்குக் கணபதீச்சுரம் என்னும் பெயரும் உண்டாயின.

சிறுத்தொண்டநாயனார் தமது ஒரே குழந்தையாகிய சீராளன் என்னும் சிறுவனை வைரவவேடம் பூண்டுவந்த பரமசிவனுக்குக்

கறியாக்கி அளித்தபின்னர், அவருடைய திருவருளால் அக்குழந்தை உயிர்த்தெழுந் தோடிவந்த ஸ்தலம்.

'பொடிநுகருஞ் சிறுத்தொண்டற் கருள்செய்யும் பொருட்டாகக்
கடிநகராய் வீற்றிருந்தான் கணபதீச் சுரத்தானே.'—

என்னும் தேவாரமும்,

ஏடவி ழலங்கற் றிண்டோ ளிபமுகத் தவுணன் மார்பி
னீடிய குருதிச் செந்நீர் நீத்தமா யொழுகும் வேலைப்
பாடுற வருங்கா னென்றிற் பரத்தலி னதுவே செய்ய
காடெனப் பெயர்பெற் றின்னுங் காண்டக இருந்த தம்மா.

—கயமுக னூற்பத்திப் படலம் – உ௫௦.

மீண்டுசெங் காட்டி லோர்சார் மேவிமெய்ஞ் ஞானத் தும்பர்
தாண்டவம் புரியுந் தாதை தன்னுருத் தாபித் தேத்திப்
பூண்டபே ரன்பிற் பூசை புரிந்தனன் புவியு ளோர்க்குக்
காண்டகு மனைய தானங் கணபதீச் சுரம தென்பர்.

—உ௫௪.

என்னுங் கந்த புராணச் செய்யுள்களும் கவனிக்கற்பாலன.

பழைய திருவாத்தி விருக்ஷம் உற்சவர் சந்நிதிக் கெதிரிலும் சிறுத்தொண்டர், அவர் மனைவி, பிள்ளை, சந்தனநங்கை இவர்களுடைய சிலா விக்கிரகங்கள் பிராகாரத்திற் கீழ்ப்பக்கத்தில் உற்சவர் சந்நிதிக் கெதிரிலும், கோயிலுக்குத் தெற்கே சூரியதீர்த்தமும் இருக்கின்றன. ஊரின் தெற்கு வீதி மேலைக்கோடியிற் சிறுத்தொண்டர், அமுது கேட்க வந்த உத்தராபதீசுரர் முதலானவர்களுடைய விக்கிரகங்கள் உள்ள சிறுத்தொண்ட நாயனார் மடம் இருக்கின்றது.

கூரார விரைதேர்ந்து குளமுலவி வயல்வாழுந்
தாராவே மடநாராய் தமியேற்கொன் றுரையீரே
சீராளன் சிறுத்தொண்டன் செங்காட்டங் குடிமேய
பேராளன் பெருமான்றன் அருளொரு நாள் பெறலாமே. (௪)

பெருந்தகையைப் பெறற்கரிய மாணிக்கத்தைப்
பேணிநினைந் தெழுவார்தம் மனத்தே மன்னி
இருந்தமணி விளக்கதனை நின்ற பூமே
லெழுந்தருளி யிருந்தானை யண்டேள் வீசி
அருந்திறன்மா நடமாடு மம்மான் றன்னை
யங்கனகச் சுடர்க்குன்றை யன்றாலின் கீழ்த்
திருந்துமறைப் பொருணால்வர்க் கருள்செய் தானைச்
செங்காட்டங் குடியதனுட் கண்டே னானே. (அ)

## 138. திருச்செம்பொன்பள்ளி :

[சோ ; ச—அ ; சொர்ணபுரீசுரர்—மருவார்குழலியம்மை.]

இது மாயூரத்துக்குக் [224] கிழக்கு $6\frac{3}{4}$—மைலிலுள்ள செம்பொன்னார் கோயில் ரெயில்வே ஸ்டேஷன். வழியில் விளநகர் [257] இருக்கின்றது.

இந்திரனும் குபேரனும் பூசித்த ஸ்தலம். ஸ்தலபுராணமும் மான்மியமும் அச்சிடப்பட்டுள்ளன.

மருவார் குழலி மாதோர் பாகமாய்த்
திருவார் செம்பொன் பள்ளி மேவிய
கருவார் கண்டத் தீசன் கழல்களை
மருவா தவர்மேன் மன்னும் பாவமே. (க)

பூவுலாஞ் சடை மேற் புனல் சூடினன்
ஏவலா லெயில் மூன்று மெரித்தவன்
தேவர் சென்றிறைஞ் சுஞ்செம்பொன் பள்ளியான்
மூவராய் முதலாய் நின்ற மூர்த்தியே. (அ)

## 139. திருச்சேய்ஞலூர் :

[சோ ; ச ; சத்தியகிரீசுரர் — சகிதேவியம்மை ; மண்ணிநதி.]

கும்பகோணத்துக்கு வடகிழக்கு $9\frac{1}{2}$-மைல். அப்பால் வடகிழக்கு 1-மைலில திருவாப்பாடியும் [21], அதற்கப்பால் வடகிழக்கு 1-மைலில் திருப்பனந்தாளும் [193] இருக்கின்றன.

சேய் (குமாரக்கடவுள்) தாம் உறைதற்கு நல்ல ஊர் என்று உவந்தமை கண்டு, தேவர்கள் இதனைச் சேய்நலூர் என்றனர். குமாரக்கடவுள் சூரசம்ஹாரஞ்செய்ய எழுந்தருளிவந்தபொழுது சிவபெருமானைப் பூசித்துச் சர்வ சங்கார படைக்கலத்தைப் பெற்ற ஸ்தலம்.

[கந்தபுராணம் குமாரபுரிப் படலம் கஎ, கரு, எரு, எசு - எண்ணுள்ள பாடல்களைக் காண்க.]

"சேயடைந்த சேய்ஞலூர்" என்பது தேவாரம்.

சண்டேசுரநாயனார் அவதரித்து முத்தி பெற்ற ஸ்தலம்.

* பீரடைந்த பாலதாட்டப் பேணா தவன்றாதை
வேரடைந்து பாய்ந்ததாளை வேர்தடிந் தான்றனக்குத்
தாரடைந்த மாலை சூட்டித் தலைமை வகுத்த தென்னே
சீரடைந்த கோயில் மல்கு சேய்ஞலூர் மேயவனே. (ரு)

**140.** திருச்சேறை என்பது உடையார் கோயில்.

[சோ ; ச - அ ; செந்நெறியப்பர் - ஞானவல்லியம்மை.]

கும்பகோணத்துக்குத் தென்கிழக்கு 9-மைல். வழியில் 4½-மைலில் அரிசிற்கரைப்புத்தூரும் [10], அதற்கு 1-மைலில் திருநறையூரும் [161], அப்பால் 3½-மைலில் திருச்சேறையும் இருக்கின்றன.

தௌமியருஷி பூசித்த ஸ்தலம்.

முறியுறு நிறமல்கு முகிழ்முலை மலைமகள் வெருவமுன்
வெறியுறு மதகரி யதள்பட வுரிசெய்த விறலினர்
நறியுறு மிதழியின் மலரொடு நதிமதி நகுதலை
செறியுறு சடைமுடி யடிகடம் வளநகர் சேறையே. (ச)

பூரியா வரும் புண்ணியம் பொய்கெடும்
கூரி தாய அறிவுகை கூடிடும்
சீரியார் பயில் சேறையுட் செந்நெறி
நாரி பாகன்ற னாம நவிலவே. (அ)

**141.** திருச்சோபுரம் என்பது தியாகவல்லி.

[நடு ; ச ; சோபுரநாதர்-சோபுரநாயகி.]

கூடலூருக்குத் தெற்கு 7¼-மைலிலுள்ள ஆலப்பாக்கம் ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடகிழக்கு 2-மைல். தோணியேறி உப்பங்கழியைக் கடந்து, மணல் வழியே போகவேண்டும்.

அகஸ்தியர் பூசித்த ஸ்தலம்.

இத் தலம் மணலினால் மூடப்பட்டிருந்து, சுமார் நூறு வருஷங்களுக்குமுன் கண்டு பிடிக்கப்பட்டதாம். தரிசநஞ் செய்துவந்த இரண்டு தம்பிரான்கள் இத்தலத்தைக் கண்டுபிடித்துத் திருப்பணி செய்வித்தனராம். ஆதலால், தலத்துக்குத் "தம்பிரான் கண்டதலம்" என்றும் பெய ருண்டாம். சுற்றிலும் உயர்ந்த மணற் குன்றுகள் இருக்கின்றன. கடலும் சமீபத்தி லிருக்கின்றது.

புத்தரோடு புன்சமணர் பொய்யுரை யேயுரைத்துப்
பித்தராகக் கண்டுகந்த பெற்றிமை யென்னைகொலா
மத்தயானை யீருரிவை போர்த்து வளர்சடைமேற்
றுத்திநாகஞ் சூடினனே சோபுர மேயவனே. (ச)

**142.** திருச்சோற்றுத்துறை :

[சோ ; மூ ; தொலையாச் செல்வர் - ஒப்பிலாவம்மை ; காவிரிநதி.]

தஞ்சாவூரிலிருந்து வடக்கே திருவையாற்றுக்குப் [50] போகும் வழியில் 6-மைலிலுள்ள திருக்கண்டியூருக்குத் [68] தென்கிழக்கு 1½-மைல். இதற்கு வடக்கு குடமுருட்டியாற்றையுங் காவிரியாற்றையுங் கடந்து சென்றால் 2-மைலில் திருப்பழனம் [187] இருக்கின்றது.

திருச்சோற்றுத்துறை ஸப்த ஸ்தானங்களில் மூன்றாவது ஸ்தலம். இந்திரன், சூரியன் முதலியோர் பூசித்தது. சிவபக்தனை அருளாளன் என்னும் மறையவன் பசியால் வருந்தும்பொழுது ஸ்வாமி, அவனுக்கு எடுக்க எடுக்கக் குறையாத சோறு அளித்தருளிய ஸ்தலம். ஊருக்குத் தெற்கே 'சோறுடையான் வாய்க்கால்' என்று ஒரு வாய்க்கால் இருக்கின்றது.

செய்யர் செய்ய சடையர் விடையூர்வர்
கைகொள் வேலர் கழலர் கரிகாடர்
தைய லாளொர் பாக மாயவெம்
ஐயர் சோற்றுத் துறைசென் றடைவோமே. (ச)

அங்கதிரோனவனை யண்ணலாக் கருத வேண்டா
வெங்கதி ரோன்வழியே போவதற் கமைந்து கொண்மின்
அங்கதி ரோனவனை யுடன்வைத்த ஆதி மூர்த்தி
செங்கதி ரோன்வணங்குந் திருச்சோற்றுத் துறைய னாரே. (அ)

இறந்தா ரென்பு மெருக்குஞ் சூடிப்
புறங்காட் டாடும் புநிதன் கோயில்
சிறந்தார் சுற்றந் திருவென் றின்ன
துறந்தார் சேருஞ் சோற்றுத் துறையே. (சு)

**143.** தண்டலை நீணெறி என்பது தண்டலைச்சேரி.

[சோ ; ச ; நீணெறிநாதேசுரர் – ஞானாம்பிகை.]

இது மணலி ரெயில்வே ஸ்டேஷனுக்குச் சமீபம். திருத்தருப்பூண்டி ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடக்கு 2½-மைல்.

கூர்மாவதாரங் கொண்ட விஷ்ணு அகங்கரித்துக் கடலைக் கலக்கச் சிவபெருமான் அக்கூர்மத்தின் அகத்தை யடக்கி அதன் ஓட்டை யணிந்தருளிய ஸ்தலம். அரிவாட்டாய நாயனார் செந்நெலரிசி, மாவடு, செங்கீரை முதலிய நிவேதித்துவந்து முத்தியடைந்த ஸ்தலம். அவர் ஊராகிய கணமங்கலம் கிழக்கே ½-மைலி லிருக்கின்றது. விருக்ஷம் - குருந்தம்; இலைகளில் ஒரே இதழ் உள்ளது.

கருவ ருந்திய னன்முகன் கண்ணனென்
றிருவ ருந்தெரி யாவொரு வன்னிடஞ்
செருவ ருந்திய செம்பியன் கோச்செங்க
ணிருபர் தன்னடலை நீணெறி காண்மினே. (௫)

**144**. தருமபுரம் : [சோ ; ச ; யாழ்மூரிநாதேசுரர் - தேனமிர்தவல்லி].

காரைக்கால் ரெயில்வே ஸ்டேஷனுக்கு மேற்கு ½-மைல்.

திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் "மாதர் மடப்பிடி" என்னும் யாழ்மூரிப்பதிகம் பாடியருளிய ஸ்தலம். பிரமா, தரும ராஜா முதலியோர் பூஜித்த ஸ்தலம்.

"அறக் கடவுள் பூசை பண்ணிய தானங் காண்மின்"

—திருவிளை - அருச்சனை—௧௧.

வார்மலி மென்முலைமா தொரு பாகம தாகுவர்
வளங் கிளர் மதி யரவம் வைகிய சடையர்
கூர்மலி சூல மும்வெண் மழு வும்மவர் வெல்படை
குனி சிலை தனி மலைய தேந்திய குழகர்
ஆர்மலி யாழி கொள்செல் வனு மல்லிகொ டாம மரம்
மிசை யவ னடிம் முடி யளவு தாமறியார்
தார்மலி கொன்றையலங் கலு கந்தவர் தங்கிடங்
தடங் கடல் விடுந் திரைத் தரும புரம்பதியே. (௪)

**145**. திருத்தலைச்சங்காடு :

[சோ ; ச ; சங்கருணாதேசுரர் — சௌந்தரநாயகி ; காவிரிநதி.]

ஆக்கூர் [18] ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடகிழக்கு 1½-மைல்.

மகாவிஷ்ணு சிவபெருமானைப் பூசித்துப் பாஞ்சசன்யம் என்னுஞ் சங்கத்தைப் பெற்ற ஸ்தலம். கோயில் கட்டுமலைமேல் இருக்கின்றது.

தலைச்சங்காட்டுக்கு வடகிழக்கு 1-மைலில் திருவலம்புரம் [245] இருக்கின்றது. அது விஷ்ணு பூசித்து வலம்புரிச்சங்கு பெற்ற ஸ்தலம்.

வேடஞ்சூழ் கொள்கையீர் வேண்டி நீண்ட வெண்டிங்க
ளோடஞ்சூழ் கங்கையு முச்சி வைத்தீர் தலைச்சங்கைக்
கூடஞ்சூழ் மண்டபமுங் குலாய வாசற் கொடித்தோன்று
மாடஞ்சூழ் கோயிலே கோயி லாக மகிழ்ந்தீரே. (௩)

**146.** திருத்தலையாலங்காடு:

[சோ ; அ ; ஆடவல்லாசுரர் - திருமடந்தையம்மை.]

திருக்குடவாயிலுக்கு [98] கிழக்கு 5-மைல்.

இதற்குக் கிழக்கு 3-மைலில் 'திருப்பெருவேளூர்' [217] இருக்கின்றது.

கபிலருஷி பூசித்த ஸ்தலம். தாருகாவனருஷிகள் அனுப்பின முயலகன் முதுகின்மீது சிவபெருமான் நடித்தருளிய ஸ்தலம்.

விடந்திகழு மரவரைமேல் வீக்கி னானை
விண்ணவர்க்கு மெண்ணரிய வளவி லானை
அடைந்தவரை யமருலக மாள்விப் பானை
யம்பொன்னைக் கம்பமா களிறட்டானை
மடந்தையொரு பாகனை மகுடந் தன்மேல்
வார்புனலும் வாளரவும் மதியும் வைத்த
தடங்கடலைத் தலையாலங் காடன் றன்னைச்
சாராதே சாலநாள் போக்கினேனே. (அ)

**147.** திருந்துதேவன்குடி: [சோ ; ச ; கர்க்கடகேசுரர்-அருமருந்தம்மை.]

கும்பகோணத்துக்குக் கிழக்கு 4-மைலிலுள்ள திருவியலூருக்கு [256] வடக்கு 1-மைல். திருந்துதேவன்குடி என்னும் ஊர் இப்பொழுதில்லை. கோயில் மாத்திரம் நன்செய் நிலங்களுக்கு மத்தியில் இருக்கின்றது. கோயிலைச்சுற்றி ஒரு பொய்கை மாலை போட்டதுபோலிருக்கின்றது.

நண்டு பூசித்து முத்தியடைந்த ஸ்தலம். நண்டு பூஜை செய்த பாவனை ஒரு கற்றூணிற் காட்டப்பட்டிருக்கின்றது. ஸ்வாமியின் உருவம் முன் பக்கத்தில் வெட்டுண்டு பாதியாயிருக்கின்றது. ஓரரசன் வியாதியாற் பிடிக்கப்பட்டு எதனாலும் தீர்வடையாது சிவஸ்மரணை செய்துகொண்டிருக்கையில், ஸ்வாமி ஒரு விருத்தர்போல அவன் முன் தோன்றி நோயைத் தீர்த்துப் பின்னும் உள்ள நோய்க்கும் மருந்து கண்டுபிடித்துக் கொடுப்பதாகச் சொல்லி, அழைத்துக் கொண்டுவந்து, இப்பொழுது இலிங்கமூர்த்தி யமர்ந்துள்ள இடத்தில் வெட்டும்படிச் சொல்ல, அரசன் வெட்ட உதிரம் வெளிப்பட, விருத்தராய் வந்தவர் மறைந்தருளினராம். இக்காரணத்தால் தான் சிவலிங்கம் வெட்டுண்டமாதிரி யிருக்கின்றதாம். "மருந்து வேண்டில் விவை" என்னும் தேவாரம் கவனிக்கற்பாலது. அம்மன் சந்நிதி இரண்டு உள்ளன.

மானமாக் குவ்வன மாசுநீக் குவ்வன
வானையுள் கச்செலும் வழிகள்காட் டுவ்வன
தேனும்வண் டும்மிசை பாடுந்தே வர்தடி
ஆனஞ்சா டும்முடி யடிகள்வே டங்களே. (௩)

**148.** திலதைப்பதி என்பது திலதர்ப்பணபுரி.

[சோ ; ச ; முத்தீசுரர் — பொற்கொடியம்மை ; சந்திர தீர்த்தம் ]

பூந்தோட்டம் ஸ்டேஷனுக்கு மேற்கு 1-மைல். பேரளம் ஸ்டேஷனுக்குத் தென்மேற்கு $3\frac{1}{4}$-மைல் அரிசிலாற்றின் தென்கரை. சிதலைப் பதி எனவழங்கும் ஊருக்கு $\frac{3}{4}$-மைலில் திருக்கோயி லிருக்கின்றது. சந்திரன் பூஜித்த ஸ்தலம். தசரத சக்கிரவர்த்திக்கு ராம லக்ஷ்மணர்கள் திலதர்ப்பணம் செய்த ஸ்தலம்.

இங்குத் தர்ப்பணம், சிரார்த்தம் இவை செய்வது விசேஷம்.

புரவி யேழும்மணி பூண்டியங் குங்கொடித் தேரினன்
பரவி நின்றுவழி பாடுசெய் யும்பர மேட்டியூர்
விரவிஞா ழல்விரி கோங்குவேங் கைசுர புன்னைகண்
மரவமவ் வன்மல ருந்தில தைப்பதி முத்தமே. (௩)

**149.** திருத்தினைநகர் :

[நடு ; ச ; சிவக்கொழுந்தீசுரர் - ஒப்பிலாநாயகி ; கொன்றை விருக்ஷம்.]

இது 'தீர்த்தனகிரி'யென மருவி வழங்குகின்றது.

ஆலப்பாக்கம் ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து சிறிது தூரம் மேற்கே சென்று, கூடலூரி லிருந்து சிதம்பரம் போகும் பெரிய வழியைச் சேர்ந்து, அவ்வழியே தெற்கே 3-மைல் சென்று, ($13\frac{1}{2}$-மைல்கல் இருக்குமிடத்தில்) மேற்கே திரும்பி, $1\frac{1}{2}$-மைல் சென்று, தானூர் என்னும் கிராமத்தை அடைந்து, பின்னும் 1-மைல் மேற்கே சென்றால் இந்தத் தலத்தை அடையலாம்.

பரங்கிப்பேட்டை ரெயில்வேஸ்டேஷனுக்கு வடமேற்கு 7-மைல். புதுச்சத்திரம் ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடமேற்கு 3-மைல்.

பெரியான் என்னும் பள்ளன் ஒருவன் உழுதுகொண்டிருக்கை யிற் சிவபெருமான் ஜங்கமர்போல் அவனிடத்திற்கு வந்து அன்னம் கேட்க, அவன் தன்னூருக்குச்சென்று கொண்டுவருவதாய்ச் சொல் லிப்போனான். அவன் வருவதற்குள் ஸ்வாமி அவன் உழுதிருந்த புலத்தில் தினை விளைந்து பழுத்திருக்கும்படிச்செய்து மறைந்து

விட்டார். பள்ளனும் அவன் மனைவியும் வந்து தினை விளைந்திருக்கக் கண்டு ஆச்சரியமுற்று ஜங்கமரைக் காணாது திகைத்து நின்றார்கள். ஸ்வாமி இடபவாகனரூடராய் அவர்களுக்குத் தரிசனங்கொடுத்து அவர்களைத் தம்முடைய லோகத்திற் சேர்த்தருளினார். அதிசயமாகத் தினைவிளைந்த காரணத்தால் இந்தத் திருப்பதிக்குத் திருத்தினைநகர் என்னும் பெயர் செய்தியது. கோயிலுக்கு வடக்கில் 'ஜாம்புவ தடாகம்' இருக்கின்றது.

ஜாம்புவர் பூசித்த லிங்கம் அம்மன் கோயிலில் இருக்கின்றது. பெரியான், ஜங்கமர் இவர்கள் உருவங்கள் கோயில் சுவரில் இருக்கின்றன.

பச்சைக் கந்த தேசிக ராதீனத்து குமாரமலைமருந்தர் திருத்தினை நகர்ப்புராணம் இயற்றியுள்ளார்.

வடிகொள் கண்ணிணை மடந்தையர் தம்பால் மயல துற்றுவஞ்சனைக்கிடமாகி
முடியு மாகரு தேலெரு தேறு மூர்த்தியை முத லாயபி ரானை
அடிக ளென்றடி யார்தொழு தேத்து மப்ப னொப்பிலா முலையுமை கோனைச்
செடிகொள் கான்மலி திருத்தினை நகருட் சிவக்கொழுந்தினைச் சென்றடை
மனனே. (க)

## 150. திருத்துருத்தி என்பது குற்றாலம்.

[சோ; மூ; வேதேசுரர் - முகிழாம்பிகை; காவிரிநதி.]

ரெயில்வே ஸ்டேஷன். மாயூரத்துக்குத்[224] தென்மேற்கு $5\frac{1}{2}$-மைல்.

சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள், சங்கிலி நாச்சியார் பொருட்டுச்செய்த சத்தியம் தவறித் திருவொற்றியூரி னின்றும் திருவாரூருக்குச் செல்ல எத்தனித்தபொழுது, அவருடைய இரண்டு கண்களுக்கும் அபாவம் நேரிட்டதுமன்றி, தேகத்திலுங் கொடிய பிணி உண்டாயிற்று. ஒரு கண்ணின் பார்வையைக் காஞ்சிபுரத்திலும், மற்றொரு கண்ணின் பார்வையைத் திருவாரூரிலும் பெற்று, உடற்பிணி, திருத்துருத்தியாகிய இந்த க்ஷேத்திரத்திற் சந்நிதிக்கு வடபாலுள்ள தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்தலும் நீங்கப் பெற்று,

"என்னுடம்படும் பிணி யிடர் கெடுத்தானை",

என்று பாடினார். மேற்குப் பார்த்த சந்நிதி.

துறக்குமா சொலப்படாய் துருத்தியாய் திருந்தடி
மறக்குமா றிலாத வென்னை மையல்செய்திம் மண்ணின்மேற்
பிறக்குமாறு காட்டினாய் பிணிப்படு முடம்புவிட்
டிறக்குமாறு காட்டினாய்க் கிழுக்குகின்ற தென்னையே (க)

உன்னியெப் போது நெஞ்சு ளொருவனை யேத்து மின்றே
கன்னியை யொருபால் வைத்துக் கங்கையைச் சடையுள் வைத்துப்
பொன்னியி னடுவு தன்னுட் பூம்புனல் பொலிந்து தோன்றுந்
துன்னிய துருத்தி யானைத் தொண்டனேன் கண்ட வாறே. (அ)

மின்னுமா மேகங்கள் பொழிந்தி ழிந்தருவி
வெடிபடக் கரையொடுந் திரைகொணர்ந் தெற்றும்
அன்னமாங் காவிரி யகன்கரை யுறைவா
ரடியிணை தொழுதெழு மன்பரா மடியார்
சொன்ன வாறறிவார் துருத்தியார் வேள்விக்
குடியுளா ரடிகளைச் செடியனே னடேன்
என்னைநான் மறக்குமா றெம்பெரு மானை
என்னுடம் படும் பிணியிடர் கெடுத்தானை. (சு)

## 151. திருத்துறையூர் :

[நடு; சு; பசுபதீசுரர் - பூங்கோதைநாயகி; பெண்ணைநதி.]

ரெயில்வே ஸ்டேஷன். பண்ணுருட்டி ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடமேற்கு 5-மைல். ஊர் ஸ்டேஷனுக்கு மேற்கு $1\frac{1}{2}$-மைல்.

சிவஞான சித்தியார் என்னும் சைவ சித்தாந்த சாஸ்திரத்தைச் செய்தருளிய சகலாகமபண்டிதர் என்னுங் காரணப் பெயரையுடைய அருணந்தி சிவாசாரியராகிய சந்தாநாசாரியார் திருவவதாரஞ்செய்து முத்திபெற்ற ஸ்தலம். மேற்குப் பார்த்த சந்நிதி. சுந்தரமூர்த்தி ஸ்வாமிகளுக்குக் காக்ஷிகொடுத்த மூர்த்தி மூலஸ்தானத்துக்கு மேலே உள்ள விமான நிலையில் வீற்றிருக்கின்றார். அருணந்தி சிவாசாரியார் சந்நிதானமும், சுந்தரரைத் தடுத்தாட்கொண்டவர் சந்நிதானமும் கோயிலுக்கு வெளியே மேற்கே திருக்குளத்துக்கு அருகில் உள்ளன. கோயிலுக்குள் பீமன், சூரியன் இவர்கள் பூசித்த இலிங்கங்கள் உள்ளன.

விண்ணோர்ந்தன மேகங்கள் நின்று பொழிய
மண்ணாரக் கொணர்ந் தெற்றியோர் பெண்ணை வடபாற்
பண்ணார் மொழிப் பாவைய ராடுந் துறையூர்
அண்ணாவுனை வேண்டிக்கொள் வேன்றவ நெறியே. (சு)

## 152. திருத்தெங்கூர் : [சோ ; ச; வெள்ளிமலைநாதர்-பெரியநாயகி.]

திருவாரூருக்குத் [23] தெற்கு 10-மைல். திருநெல்லிக்காவுக்குத் [175] தென்மேற்கு $\frac{1}{2}$-மைல்.

"திருத் தேங்கூர்" என்பது சரியான பெயர். இதனைத் திருத்தேங்கூர்த் தல புராணத்தாலும், "தேங்கூருந் திருச்சிற்றம் பலஞ் சிராப்பள்ளி"—(திருநாட்டுத் தொகை.)—"நாங்கூ ருறைவாய் தேங்கூர் நகராய் நல்லூர் நம்பானே"—(ஊர்த் தொகை.)—ஆகிய சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் திருவாக்காலும் அறிக.

லக்ஷ்மியும் நவக்கிரகங்களும் பூஜித்த ஸ்தலம். பிராகாரத்தில் 9-இலிங்கங்கள் இருக்கின்றன. இலக்குமி பூசித்தலிங்கம் இலக்குமிக்கு எதிரி லிருக்கின்றது. கோயிலுக்கு வடக்கே திருக்குள மிருக்கின்றது. ஸ்தலபுராணம் அச்சிடப்பட்டுள்ளது.

திருத்தேங்கூருக்குத் தென்மேற்கு 1¾-மைலில் திருக்கொள்ளிக் காடு [115] இருக்கின்றது.

> தேடித் தானயன் மாலுந் திருமுடி யடியிணை காணார்
> பாடத்தான் பலபூதப் படையினர் சுடலையிற் பலகா
> லாடத்தான் மிகவல்ல ரருச்சுனற் கருள்செயக் கருதும்
> வேடத்தார் திருத்தேங்கூர் வெள்ளியங் குன்றமர்ந் தாரே. (ச)

**153.** திருத்தேளிச்சேரி என்பது கோயிற்பத்து.

[சோ; ச; பார்வதீசுரர்-சத்தியம்மை.]

காரைக்கால் ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடமேற்கு ¾-மைல்.

திருஞான சம்பந்த ஸ்வாமிகள் அடியார் திருக்கூட்டத்துடன் செல்லுகையிற், 'பரசமயகோளரிவந்தார்' என்று முத்துச் சின்னங்கள் ஊத, அதனைப் பொறாத பௌத்தர்கள் வந்து தடுக்க, தேவாரத் திருமுறை யெழுதும் அடியவர்,

> புத்தர் சமண்கழுக் கையர் பொய்கொளாச்
> சித்தத் தவர்க டெளிந்து தேறின
> வித்தக நீறணி வார்வி னைப்பகைக்
> கத்திர மாவன வஞ்செ ழுத்துமே

என்னும் பஞ்சாக்ஷரப் பதிகத் திருப்பாட்டை ஓதிப் பௌத்தர்களின் தலைவனாக வந்த புத்தநந்தியின் தலைமேல் இடியிடித்து விழும்படிச் செய்த ஸ்தலம். பௌத்தர்கள் மீண்டும் வேறொரு தலைவனுடன் வந்து, அவ்வடியவருடன் தருக்கஞ் செய்து தோல்வியுற்றுப் பிள்ளையாரின் அநுக்கிரகத்தாற் சைவர்களாகி உய்ந்த தலம். மேற்குப் பார்த்த சந்நிதி. எதிரிற் குள மிருக்கின்றது. பங்குனிமீ 13உ முதல் 10—நாளைக்குச் சூரிய கிரணங்கள் ஸ்வாமிமேல் விழுகின்றன.

பக்க நூந்தமைப் பார்ப்பதி யேத்திமுன் பாவிக்குஞ்
செக்கர் மாமதி சேர்மதிள் சூழ்நெறிச் சேரீயீர்
மைக்கொள் கண்ணியர் சைவளை மால்செய்து வெளவவே
நக்க ராயுல கெங்கும்ப லிக்குந டப்பதே. (௩)

**154.** தென்குடித்திட்டை என்பது திட்டை.

[சோ ; ச ; பசுபதீசுரர் - உலகநாயகியம்மை.]

ரெயில்வே ஸ்டேஷன். தஞ்சாவூருக்கு வடகிழக்கு 6-மைல். கௌதமர், ஆதிசேஷன், காமதேநு இவர்கள் பூசித்த ஸ்தலம்.

முன்னை நான் மறையவை முறைமுறை குறையொடுந்
தன்னதா டொழுதெழ நின்றவன் றன்னிடம்
மன்னுமா காவிரி வந்தடி வருடநற்
செந்நெலார் வளவயற் றென்குடித் திட்டையே. (௪)

**155.** தேவூர்.

[சோ ; ச ; தேவபுரீசுரர் - மதுரபாஷணியம்மை ; வாழை விருக்ஷம்.]

நாகபட்டினத்துக்கு மேற்கு 7-மைலிலுள்ள கீழ்வேளூர் [94] ரெயில்வே ஸ்டேஷனுக்குத் தெற்கு 2-மைல்.

கௌதமர், பிரகஸ்பதி, இந்திரன், குபேரன் முதலியோர் பூஜித்த ஸ்தலம்; கௌதமலிங்கம் கட்டுமலையில் வடபக்கத்தில் இருக்கின்றது. கோயிலுக்குத் தென்கிழக்கில் தேவதீர்த்தம் இருக்கின்றது. இடபவாகனம் வெகு நன்றாய் இருக்கின்றது.

ஓதி மண்டலத் தோர்முழு துய்யவெற் பேறு
சோதி வானவன் றுதிசெய மகிழ்ந்தவன் றூநீர்த்
தீதில் பங்கயந் தெரிவையர் முகமலர் தேவூர்
ஆதி சேவடி யடைந்தன மல்லலொன் றிலமே. (௫)

**156.** திருநணா என்பது பவாநி.

[கொ ; ச ; சங்கமுகநாதேசுரர் - வேதநாம்பிகை ; பவாநி காவிரி சங்கமம்.]

இந்தத்தலம் பவாநியும் காவிரியுங் கூடுமிடத்தி லிருக்கின்றது. ஈரோட்டு ஸ்டேஷனுக்கு வடக்கு 8½-மைல்.

குபேரன், விசுவாமித்திரர், பராசரர் முதலியோர் பூஜித்த ஸ்தலம். பிராகாரத்திற் பழைய இலந்தைமரங்கள் 2-இருக்கின்றன. கோயிலுக்குள் ஆதிகேசவப் பெருமாள் சந்நிதியும் இருக்கின்றது.

பந்தார் விரன் மடவாள் பாகமா நாகம் பூண்டேற தேறி
யந்தா ரரவணிந்த வம்மானிடம்போலு மந்தண் சாரல்
வந்தார் மடமந்தி கூத்தாட வார்பொழிலில் வண்டு பாடச்
செந்தேன் றெளியொளிரத் தேமா கனியுதிர்க்குந் திரு நணாவே. (௫)

## **157**. திருநல்லம் : கோனேரி ராஜபுரம்.

[சோ ; ச - அ ; உமாமஹேசுரர் - மங்களநாயகி.]

திருவிடைமருதூருக்குத் தென்கிழக்கு 6-மைல். கோயில் நல்ல ஸ்திதியி லிருக்கின்றது. எதிரில் திருக்குளம் கட்டுப்பாடுடையது. மேற்குப் பார்த்த சந்நிதி. இந்த ஸ்தலத்தில் நடேசருடைய விக்கிரகம் பிரபலமானது.

தக்கன் பெருவேள்வி தன்னி லமரரைத்
துக்கம் பலசெய்து சுடர்பொற் சடைதாழக்
கொக்கின் னிறகோடு குளிர்வெண் பிறைசூடும்
நக்கன் நமையாள்வான் நல்ல நகரானே. (௬)

கொல்லத் தானம னார்தமர் வந்தக்கால்
இல்லத் தார்செய லாவதெ னேழைகாள்
நல்லத் தானமை யானுடை யான்கழல்
சொல்லத் தான்வல்லி ரேற்றுயர் தீருமே. (௮)

## **158**. திருநல்லூர் :

[சோ ; ச - அ ; கலியாணசுந்தரேசுரர் - கலியாண சுந்தரி.]

கும்பகோணத்துக்கு அடுத்த சுந்தரபெருமாள் கோயில் ரெயில்வே ஸ்டேஷனுக்குத் தெற்கு 2-மைல்.

சிவபிரான் அப்பர்ஸ்வாமிகளுக்குத் திருவடி சூட்டியருளிய ஸ்தலம்.

"வடபாற் கயிலையுந் தென்பானல் லூருந்தம் வாழ்பதியே"—

"நல்லூருறை நம்பனை நானொருகாற்
றுஞ்சிடைக் கண்டு கனவின் றலைத்தொழு தேர்கவன்று
னெஞ்சிடை நின்றக லான்பல காலமு நின்றனனே"—

"நல்லருளாற் றிருவடியென் றலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே"—

எனத் திருநாவுக்கரசு ஸ்வாமிகளால் மிகப் பாராட்டப்பெற்ற ஸ்தலம்* சிவனடியார்களுக்குக் 'கந்தை கீளுடை கோவணம்' இவைகளைத்

கொடுத்துவந்த அமர்நீதிநாயனாரைச் சிவபெருமான் ஆட்கொண்டு, அவருக்கும் அவர் மனைவியாருக்கும் மைந்தனுச்கும் முத்தி யளித்தருளிய ஸ்தலம். இதனைத் திருநாவுக்கரசு நாயனார் திருநல்லூர்த் திருவிருத்தத்தில் ஏழாவது செய்யுளில்,

நாட்கொண்ட தாமரைப் பூந்தடஞ் சூழ்ந்தநல் லூரகத்தே
கீட்கொண்ட கோவணங் காவென்று சொல்லிக் கிறிபடத்தான்
வாட்கொண்ட நோக்கி மனைவி யொடுமங்கோர் வாணிகனை
யாட்கொண்ட வார்த்தை யுரைக்குமன் றோவிவ் வகலிடமே

என்று சிறப்பித்துப் பாடியிருக்கின்றார். ஸ்வாமி சந்நிதானம் மலைபோ லுயர்ந்த இடத்தில் இருக்கின்றது. கோயிலுக்கெதிரிற் பெரிய தீர்த்தமொன் றிருக்கின்றது. அதற்குச் சப்தசாகர தீர்த்தம் என்று பெயர். ஸ்வாமி பொன்வர்ணமாயிருக்கின்றார். ஒருநாளைக்கு ஐந்து வர்ணமாகத் தோன்றுகின்றாராம். இலிங்கத்திற் சில துவாரங்களுங் காணப்படுகின்றன. அகஸ்தியருக்குக் கலியாணகாக்ஷி கொடுத்த ஸ்தலம். அகஸ்தியலிங்கம் ஸ்வாமி பக்கத்தி லிருக்கின்றது.

“ தூடம்பொலி முனிக்கு மன்றற் கோலமுங் காட்டி யெம்மான்
இடம்படு கோவணங் கொண் டியலமர் நீதி யுய்ய
மடந்தையை மணியைப் பொன்னை மகவைமற் றனைவை யெல்லாம்
அடங்கலுஞ் சூறைகொண்டாங் களித்ததொன் றனது நல்லூர்.”

சீகாழித்தலபுராணம்—புராண வரலாறு-உஅ.

கோயிலிற் சாலிக்கிராமச் சிலையினாற் செய்த மிக அழகிய விநாயகர் விக்கிரகம் ஒன்றிருக்கின்றது. இந்தத் தலத்தில் வைகாசி மாதத்திற் சப்தஸ்தான உற்சவம் நடந்துவருகின்றது.

ஆறுமுகத்துடன் இரண்டு தேவிமார்கள் சமேதராய் உற்சவ சுப்பிரமணியமூர்த்தி மேற்குப் பார்த்திருக்கின்றார். அமர்நீதிநாயனார், இடுப்பிற் குழந்தையுடன் அவருடைய மனைவி இவர்களுடைய விக்கிரகங்கள் சிலையிலும் உற்சவ மூர்த்திகளாகவு முள்ளன.

ஸ்தலபுராணம் அச்சிடப்பட்டுள்ளது.

வண்ண மலரானும் வைய மளந்தானும்
நண்ண லரியானை நல்லூர்ப் பெருமானைத்
தண்ண மலர்தூவித் தாள்க டொழுதேத்த
எண்ணு மடியார்கட் கில்லை யிடுக்கணே. (ச)

*பொன்னலத்த நறுங்கொன்றைச் சடைமேல் வைத்தார்
புலியுரியி னதள்வைத்தார் புனலும் வைத்தார்
மன்னலத்த திரடோண்மேன் மழுவாள் வைத்தார்
வார்காதிற் குழைவைத்தார் மதியம் வைத்தார்
மின்னலத்த நுண்ணிடையாள் பாகம் வைத்தார்
வேழத்தி னுரிவைத்தார் வெண்ணூல் வைத்தார்
நன்னலத்த திருவடியென் றலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே. (அ)

**159.** திருநல்லூர்ப்பெருமணம் என்பது ஆச்சாபுரம்.
[சோ ; ச ; சிவலோகத்தியாகேசர் – நங்கையுமையம்மை.]

சிதம்பரத்துக்குத் [122] தெற்கு 4½-மைலிலுள்ள கொள்ளிடம் ரெயில்வே ஸ்டேஷனுக்குக் கிழக்கு 3-மைல்.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் திருக்கலியாணம் முடிந்தவுடன் மனைவியாருடன் ஆலயத்துக்குச் சென்று அங்கே ஒரு ஜோதி தோன்றக் "காதலாகி" என்னும் நமச்சிவாயத் திருப்பதிகத்தை யோதி, தாமும் மனைவியாரும், தங்களுடைய திருக்கலியாணத்தைத் தரிசிக்க வந்த திருநீலநக்க நாயனார் முதலிய அடியார்களுடன், அந்த ஜோதியிற் றோன்றிய வாயில் வழியாய்ப் புகுந்து சிவசாயுஜ்ஜியம் அடைந்த ஸ்தலம். "நல்லூர்ப் பெருமணம் புக்கிருந்தீ ரெமைப் போக்கருளீரே",—"ஞானசம்பந்தன் பேறும்பதம்...........உறும் பொருளாற் சொன்ன ஒண்டமிழ்.",—என்பன சம்பந்த ஸ்வாமிகளின் திருவாக்கு. சம்பந்த ஸ்வாமிக்குத் தனிச் சந்நிதி இருக்கின்றது. கோயிலுக்கு எதிரில் திருக்குளம் இருக்கின்றது.

ஸ்தலபுராணம் அச்சிடப்பட்டுள்ளது.

சிட்டப்பட் டார்க்கெளி யான்செங்கண் வேட்டுவப்
பட்டங்கட் டுஞ்சென்னி யான்பதி யாவது
நட்டக்கொட் டாட்டறு நல்லூர்ப் பெருமணத்
திட்டப்பட் டாலொத்தி ராலெம்பி ரானிரே. (ச)

**160.** திருநள்ளாறு : [சோ ; மூ ; தர்ப்பாரண்யேசுரர் - போகமார்த்த பூண்முலையம்மை ; நளதீர்த்தம்.]

ரெயில்வேஸ்டேஷன். காரைக்காலுக்கு மேற்கு 3-மைல்.

சப்த விடங்க ஸ்தலங்களில் ஒன்று, 'நாகம் பூண்டு கூத் தாடு நள்ளாறனே',—என்பது தேவாரம். இலிங்க மூர்த்தியின் உருவம்

தர்ப்பைக் கொழுந்துகள் சேர்ந்தனபோ லிருக்கின்றது. திருஞான சம்பந்த ஸ்வாமிகள் மதுரையிற் சமணருடன் வாது செய்கையில் அக்கினியிலிட்டும் வேகாமலிருந் தெடுத்த பச்சைத் திருப்பதிகம் ஆகிய 'போகமார்த்த பூண்முலையாள்' என்னும் அருமைத் திருப் பதிகத்தைப் பெற்றிருக்கும் ஸ்தலம். சநிபகவான் சந்நிதி விசேஷம். அதையே பகவான் கோயில் என்கிறார்கள். பகவான் என்றாற் சநி.

நளச்சக்கிரவர்த்தி பூஜித்துக் கலிதோஷம் நீங்கப்பெற்ற ஸ்தலம்*. விநாயகருக்குச் சொர்ணவிநாயகர் என்று பெயர். பிரா காரத்தில் வைரவர் விக்கிரகம் இருக்கின்றது. ஊருக்கு வடமேற்கில் நள தீர்த்தம் இருக்கின்றது.

திருநள்ளாறு பிரெஞ்சுக்காரரின் ஆளுகைக் குட்பட்டது. திரு நள்ளாற்றுக்குக் கிழக்கு 1-மைலில் 'தக்களூர்' என்னும் வைப்புத் தலம் இருக்கின்றது.

*விளங்கிழை மடந்தைமலை மங்கையொரு பாகத்
துளங்கொள விருத்திய வொருத்தனிட மென்பர்
வளங்கெழுவு தீபமொடு தூபமலர் தூவி
நளன்கெழுவி நாளும்வழி பாடுசெய் நள் ளாறே. (ச)

பாம்ப ணைப்பள்ளி கொண்ட பரமனும்
பூம்ப ணைப்பொலி கின்றபு ராணனுந்
தாம்ப ணிந்தளப் பொண்ணுத் தனித்தழல்
நாம்ப ணிந்தடி போற்றுநள் ளாறனே. (அ)

மங்கை பங்கனை மாசிலா மணியை வான நாடனை யேனமோ டன்னம்
எங்கு நாடியுங் காண்பரி யானை யேழையேற் கெளிவந்த பிரானை
அங்க நான்மறை யானிறை கின்ற அந்த ணாள ரடியது போற்றும்
நங்கள் கோனைநள் ளாறனை யமுதை நாயி னேன்மறந் தென்னினைக் கேனே. (சு)

## 161. திருநறையூர்ச்சித்தீச்சுரம் :

[சோ; ச - சு; சித்தநாதேசுரர் - அழகாம்பிகை.]

கும்பகோணத்துக்குத் தென்கிழக்கு $5\frac{1}{2}$–மைல். வழியில் $4\frac{1}{2}$–மைலில் அரிசிற்கரைப்புத்தூர் (அழகார்புத்தூர்) [10] இருக்கின்றது. திருநறையூருக்குக் கிழக்கு 1-மைலிற் பேணுபெருந்துறையும் [218], தெற்கு $\frac{1}{2}$–மைலில் நாச்சியார் கோயில் என்னும் விஷ்ணு ஸ்தலமு மிருக்கின்றன.

பிள்ளையார் — ஆண்டபிள்ளையார். கோயிலுக்கு வடக்கிற் பிரம தீர்த்தம் இருக்கின்றது.

பிறைகொள் சடையர் புலியி னுரியர் பேழ்வாய் நாகத்தர்
கறைகொள் கண்டர் கபால மேந்துங் கையர் கங்காளர்
மறைகொள் கீதம் பாடச் சேடர் மனையின் மகிழ்வெய்திச்
சிறைகொள் வண்டு தேனார் நறையூர்ச் சித்தீச் சரத்தாரே. (ச)

கரியின் னுரியுங் கலைமான் மறியும்
எரியும் மழுவு முடையா னிடமாம்
புரியும் மறையோர் நிறைசொற் பொருள்கள்
தெரியு நறையூர்ச் சித்தீச் சரமே. (கு)

**162.** திருநனிபள்ளி என்பது புஞ்சை.
[சோ ; மூ ; நற்றுணையப்பர்-மலையான் மடந்தை.]

மாயூரம் ஸ்டேஷனுக்கு வடகிழக்கு 8-மைல். வழியில் 4-மைலில் விளநகரும் [257] அப்பால் 3-மைலில் திருச்செம்பொன்பள்ளியும் [138] இருக்கின்றன.

திருஞான சம்பந்தமூர்த்தி நாயனாருடைய தாயார் பிறந்த ஸ்தலம்.

நிறவுரு வொன்று தோன்றி யெரியொன்றி நின்ற
தொருநீர்மை சீர்மை நினையார்
அறவுரு வேத னாவ னயனோடு மாலு
மறியாத அண்ணல் நகர்தான்
புறவிரி முல்லை மௌவல் குளிர்பிண்டி புன்னை
புனைகொன்றை துன்று பொதுளி
நறவிரி போது தாது புதுவாச நாறு
நனிபள்ளி போலு நமர்காள். (ரு)

பண்ணினார் பாட லாகிப் பழத்தினி லிரத மாகிக்
கண்ணினார் பார்வை யாகிக் கருத்தொடு கற்ப மாகி
எண்ணினா ரெண்ண மாகி ஏழுல கனைத்து மாகி
நண்ணினார் வினைக டீர்ப்பார் நனிபள்ளி யடிக ளாரே. (அ)

ஏனம ருப்பினொடு மெழி லாமையும் பூண்டு கந்து
வானம திலரண மலை யேசிலை யாவளைத்தா
னூனமில் காழி தன்னு ளுயர் ஞானசம் பந்தர்க் கன்று
ஞானம ருள்பு ரிந்தா னண்ணு மூர்நனி பள்ளி யதே. (கு)

**163.** நன்னிலம்: [சோ; சு; மதுவனேசுரர் - மதுவனநாயகி.]

ரெயில்வே ஸ்டேஷன். ஊர் ஸ்டேஷனுக்கு மேற்கு 3-மைல். வழியில் 1½-மைலில் திருக்கொண்டீச்சரம் [113] இருக்கின்றது.

ஸ்தலத்துக்கு 'மதுவனம்' என்றும் பெயர். ஸ்வாமி சந்நிதி கட்டுமலைமே லிருக்கின்றது. இக்கோயில் பெருங்கோயில்களுள் ஒன்று; கோச்செங்கட் சோழர் திருப்பணி செய்த ஸ்தலம். "கோச் செங்கணான் செய்கோயில், நாடிய நன்னிலத்துப் பெருங்கோயில்"— என்பது தேவாரம். சூரியன் பூஜித்த ஸ்தலம்.

தேவியார் சந்நிதியும் அகத்தீசுரர் சந்நிதியும் கீழே இருக்கின்றன. கோயிலுக்கு வடக்கிற் பிரமதீர்த்தம் இருக்கின்றது.

கருவரை போல ரக்கன் கயி லைம்மலைக் கீழ்க்க தற
ஒருவிர லாலடர்த்தின் னருள் செய்தவு மாப திதான்
திரைபொரு பொன்னி நன்னீர்த் துறை வன்றிகழ் செம்பி யர்கோ
னரபதி நன்னிலத்துப் பெருங் கோயின யந்தவனே. [சு]

**164.** திருநாகேச்சுரம்:

[சோ; மூ; சண்பகாரணியேசுரர் - குன்றமுலைநாயகி.]

ரெயில்வே ஸ்டேஷன். கும்பகோணத்துக்குக் கிழக்கு 4-மைல். திருவிடைமருதூருக்குத் [34] தென்மேற்கு 2½-மைல்.

சண்பகாரணிய க்ஷேத்திரம். பெரியபுராணஞ் செய்தருளிய சேக்கிழார் நாயனார் மிகுந்த அன்பு வைத்திருந்த ஸ்தலம். அதற்குத் திருஷ்டாந்தமாக அவர் தம்முடைய ஊராகிய குன்றத்தூரிலே திருக் கோயில் ஒன்று கட்டுவித்து அதற்குத் திருநாகேச்சுரம் என்று பெயரிட் டிருக்கிறார். சேக்கிழார் விக்கிரகமும் கோயிலி லிருக் கின்றது. கோயில் பெரிது. நான்கு புறமும் கோபுரங்கள் இருக் கின்றன. சூரிய புஷ்கரணி தீர்த்தம். சங்கநிதி, பதுமநிதி, மகா சாத்தா இவர்கள் விக்கிரகங்களும் இருக்கின்றன. சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் பக்கத்திற் பரவையார் விக்கிரகம் இருக்கின்றது.

சந்திரன், சூரியன், ஐந்தலைநாகம் இவர்கள் பூசித்த ஸ்தலம்.

"நாளு நாதனமர் கின்ற நாகேச்சுர நண்ணுவார்
கோளு நாளுந் தீயவேனு நன்காங் குறிக்கொண்மினே."

'ஞாயிறுந் திங்களுங் கூடிவந்தாடு நாகேச்சுரம்'

என்பன சம்பந்தர் திருவாக்கு.

முத்தியங் கனியைவேட்டு முழுமணிச் சுடிகைச் சேடன்
துத்தியஞ் செய்யு நாகேச் சுரமொன்று துலங்கிற் றம்மா—
சீகாழித் தலபுராணம்—புராண வரலாறு-௩௦.

கல்லால் நிழல் மேயவனே கரும்பின்
வில்லா னெழில் வேவ விழித்தவனே
நல்லார் தொழு நாகேச்சுர நகரில்
செல்வா வெனவல் வினைதேய்ந் தறுமே. (ச)

சந்தி ரனொடு சூரியர் தாமுடன்
வந்து சீர்வழி பாடுகள் செய்தபின்
ஐந்த லையர வின்பணி கொண்டருள்
மைந்தர் போன்மணி நாகேச் சுரவரே. (அ)

தங்கிய மாதவத்தின் தழல் வேள்வியி னின்றெழுந்த
சிங்கமு நீள்புலியுஞ் செழு மால்கரி யோடலறப்
பொங்கிய போர்புரிந்து பிளந் தீருரி போர்த்த தென்னே
செங்கயல் பாய்கழனித் திரு நாகேச் சுரத்தானே. (சு)

**165.** நாகைக்காரோணம் என்பது நாகபட்டினம்.

[சோ ; மூ ; காயாரோகணேசுரர், ஆதிபுராணேசுரர் - நீலாயதாக்ஷி யம்மை ; மாவிருக்ஷம்.]

ரெயில்வே ஸ்டேஷன். ஸப்தவிடங்க ஸ்தலங்களில் ஒன்று. அதிபத்தநாயனாருடைய ஸ்தலம். சிவபெருமான் புண்டரீக மகா ருஷியைக் காயத்தோடு ஆரோகணஞ் செய்துகொண்ட ஸ்தலம்.

கோயிலில் முதலி லிருக்கும் விநாயகருக்கு நாகாபரண விநாயகர் என்றும், உள்ளே இருக்கும் விநாயகருக்கு மாவடிப் பிள்ளையார் என்றும் பெயர். தேவதீர்த்தம் கோயிலுக்குத் தெற்கிலும் புண்டரீக தீர்த்தம் கோயிலுக்கு மேற்கிலும் இருக்கின்றன. தியாகராஜருக் கெதிரிற் சுந்தரமூர்த்தி பரவைநாச்சியாருட னிருக்கின்றார். நீலாயதாக்ஷியம்மை சந்நிதி விசேடமானது. "கஞ்சி-காமாக்ஷி, மதுரை-மீநாக்ஷி, காசி-விசாலாக்ஷி, நாகை-நீலாயதாக்ஷி" என்பன பழமொழி.

மீநாக்ஷிசுந்தரம் பிள்ளையவர்கள் பாடிய திருநாகைக் காரோணப் புராணம் அச்சிடப்பட்டுள்ளது.

புனையும் விரிகொன்றைக் கடவுள் புனல்பாய
நனையுஞ் சடைமேலோர் நகுவெண் டலை சூடி
வினையில் லடியார்கள் விதியால் வழிபடக்
கனையுங் கடல் நாகைக் காரோணத் தானே. (க)

அந்த மில்புக ழாயிழை யார்பணிந்
தெந்தை யீசனென் றேத்துமி றைவனைக்
கந்த வார்பொழி னாகைக்கா ரோணனைச்
சிந்தை செய்யக்கெ டுந்துயர் திண்ணமே. (அ)

பத்தூர்புக் கிரந்துண்டு பலபதிகம் பாடிப்
பாவையரைக் கிறிபேசிப் படிறாடித் திரிவீர்
செத்தார்த மெலும்பணிந்து சேவேறித் திரிவீர்
செல்வத்தை மறைத்துவைத்தீ ரெனக்கொருநா ளிரங்கீர்
முத்தார மிலங்கிமிளிர் மணிவயிரக் கோவை
யவைபூணத் தந்தருளி மெய்க்கினிதா நாறுங்
கத்தூரி கமழ்சாந்து பணித்தருள வேண்டுங்
கடனாகைக் காரோணமேவியிருந் தீரே. (ஐ)

## 166. திருநாட்டியத்தான்குடி.

[சோ; சு; மாணிக்கவண்ணர் – மலைமங்கை யம்மை.]

ரெயில்வே ஸ்டேஷன். திருவாரூருக்குத் [23] தெற்கு 6-மைல். திருக்காறாயிலுக்கு [90] வடமேற்கு 3-மைல். ஸ்டேஷனுக்கு வடமேற்கு $5\frac{1}{2}$-மைலிற் பேரெயில் [219] இருக்கின்றது.

கோட்புலிநாயனாருடைய ஸ்தலம். அவருடைய உருவம் கோயிலி லிருக்கின்றது. "கூடா மன்னரைக் கூட்டத்து வென்ற கொடிறன் கோட்புலி சென்னி, நாடார் தொல்புகழ் நாட்டியத்தான் குடி",—என்பது சுந்தரமூர்த்திஸ்வாமிகள் திருவாக்கு. அவர் கோயிலுக்கு வந்து ஸ்வாமியைக் காணாமல் விநாயக மூர்த்தியைக் கேட்க, ஸ்வாமி யிருந்த இடத்தை விநாயகர் சுட்டிக் காட்டிய காரணத்தால் அவருக்குக் கைகாட்டி மூர்த்தி என்ற பெயர் வந்தது.

அஞ்சாதே யுமக் காட்செய வல்லே னியாதினுக் காசைப் படுகேன்
பஞ்சேர் மெல்லடி மாமலை மங்கை பங்கா வெம்பர மேட்டி
மஞ்சேர் வெண்மதி செஞ்சடை வைத்த மணியே மாணிக்க வண்ணா
நஞ்சேர் கண்டா வெண்டலை யேந்தீ நாட்டியத் தான்குடி நம்பீ. (சு)

## 167. திருநாரையூர்: [சோ; ச–அ; சௌந்தரேசுரர் – திரிபுரசுந்தரி யம்மை; காருண்யதீர்த்தம்; புன்னைவிருக்ஷம்.]

சிதம்பரத்துக்குத் [122] தென்மேற்கு 8-மைலிலுள்ள குமாரக்ஷியை யடைந்து, அங்கிருந்து மன்னார்குடிக்குப் போகும் வழியில், $1\frac{1}{2}$-மைல் சென்று, அங்கு வழியைவிட்டுத் தெற்கே திரும்பி $\frac{3}{4}$-மைல் சென்றால் இந்தத் தலத்தை அடையலாம்.

நாரை பூஜித்த ஸ்தலம்.

சிதம்பரத்திற் சேமித்து வைத்திருந்த தேவாரத் திருமுறைகளை நம்பியாண்டார் நம்பியார் மூலமாய் வெளிப்படுத்தியருளிய கருணாகர மூர்த்தியாகிய பொல்லாப்பிள்ளையார் என்னும் விநாயக மூர்த்தி யெழுந்தருளியிருக்கும் ஸ்தலம்.

பூமகனும் மவனைப் பயந்த புயலார் நிறத்தானும்
ஆமளவுந் திரிந்தேத்தக் காண்டா லறிதற் கரியானூர்
பாமருவுங் குணத்தோர்க ளீண்டிப் பலவும் பணிசெய்யுந்
தேமருவுந் திகழ்சோலை சூழ்ந்ததிரு நாரையூர் தானே. (ச)

செம்பொன்னை நன்பவளந் திகழு முத்தைச்
செழுமணியைத் தொழுமவர்தஞ் சித்தத் தானை
வம்பவிழு மலர்க்கணையே னுலக்க நோக்கி
மகிழ்ந்தானை மதிற்கச்சி மன்னு கின்ற
கம்பனையெங் கயிலாய மலையான் றன்னைக்
கழுகிடுடு காகுத்தன் கருதி யேத்து
நம்பனையெம் பெருமானை நாதன் றன்னை
நர்ரையூர் நன்னகரிற் கண்டே னனே. (அ)

## 168. திருநாலூர்மயானம் :

[சோ; ச; பலாசவனேசுரர் — பெரிய நாயகி.]

திருக்குடவாசலுக்கு [98] வடகிழக்கு 3-மைல். திருக்குடவாசல் கும்பகோணத்துக்குத் [97] தென்கிழக்கு 10-மைல்.

ஆபஸ்தம்பருஷி பூஜித்த ஸ்தலம்.

திருநாலூர் மயானத்துக்குத் தென்மேற்கு ஒரு 1-மைலில் திரு நாலூர் என்னும் ஊர் இருக்கின்றது. இங்கும் ஓர் ஆலய மிருக் கின்றது.

கோலத்தார் கொன்றையான் கொல்புலித்தோ லாடையா
னீலத்தார் கண்டத்தா னெற்றியோர் கண்ணினான்
ஞாலத்தார் சென்றேத்து நாலூர் மயானத்திற்
சூலத்தா னென்பாரைச் சூழாவாந் தொல்வினையே. (ச)

## 169. திருநாவலூர் : [நடு; சு; திருநாவலேசுரர் — சுந்தரநாயகியம்மை.]

இது திருநாமநல்லூர் என வழங்குகின்றது. விழுப்புரம் - திரி சிராப்பள்ளி ரெயில் மார்க்கத்தில் உள்ள இருந்தை ஸ்டேஷனுக்குக் கிழக்கு $2\frac{1}{2}$-மைல்.

சுக்கிரன் பூசித்த ஸ்தலம்.

சுந்தரமூர்த்திநாயனுர் திருவவதாரஞ் செய்த ஸ்தலம்.

ஸ்வாமிக்குப் பக்தஜனேசுரர் என்ற பெயரும், அம்மனுக்கு மனோமணியம்மை என்ற பெயரும் வழங்குகின்றன. சுந்தரமூர்த்தி ஸ்வாமிகளின் சந்நிதி வெளிப்பிராகாரத்தில் தென்கிழக்கில் இருக்கின்றது. வரதராஜப்பெருமாள் சந்நிதி கோயிலுக்குள்ளும் நாவல் மரம் அம்மன் சந்நிதிக்குச் சமீபத்திலும் இருக்கின்றன. கோயிலுக்கு மேற்புறம் கோமுகி தீர்த்தம் என்ற சிற்றோடையும், தெற்கு ½-மைல் தூரத்திற் கெடில நதியும் இருக்கின்றன.

திருவெண்ணெய்நல்லூர் ராசப்பகவிராயர் திருநாவலூர்ப் புராணம் இயற்றியுள்ளனர்.

வாயாடி மாமறை யோதியோர் வேதிய னாகிவந்து
தீயாடி யார்சினக் கேழலின் பின்சென்றோர் வேடுவனாய்
வேயாடி யார்வெண்ணெய் நல்லூரில் வைத்தென்னை யாளுங்கொண்ட
நாயாடி யார்க்கிட மாவது நந்திரு நாவலூரே. (க)

**170.** திருநின்றியூர் : [சோ ; மூ ; மகாலக்ஷ்மீசுரர் — உலகநாயகி.]

மாயூரத்துக்கு வடக்கிலுள்ள ஆநந்ததாண்டவபுரம் ஸ்டேஷனுக்கு வடகிழக்கு 2-மைல்.

இலக்குமி பூசித்த ஸ்தலம். "செந்தண்மா மலர்த் திருமகள் மருவுஞ் செல்வத் தென்றிரு நின்றியூ ரானே",—என்பது சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் திருவாக்கு.

சூலம் படை சுண்ணப்பொடி சாந்தஞ் சுடு நீறு
பாலம் மதி பவளச்சடை முடிமேலது பண்டைக்
காலன்வலி காலினொடு போக்கிக் கடிகமழும்
நீலம் மலர்ப் பொய்கை நின்றி யூரின்னிலை யோர்க்கே. (ச)

அஞ்சியாகிலு மன்புபட் டாகிலும்
நெஞ்சம் வாழிநினை நின்றி யூரைநீ
இஞ்சி மாமதி லெய்திமை யோர்தொழக்
குஞ்சிவான் பிறை சூடிய கூத்தனே. (அ)

மோய்த்த சீர்முந்நூற் றறுபது வேலி மூன்று நூறுவேதியரொடுநனக்கு
ஒத்த பொன்மணிக் கலசங்க ளேந்தி யோங்கு நின்றியூ ரென்றுனக்களிப்பப்
பத்தி செய்தவப் பரசி ராமற்குப் பாதங் காட்டிய நீதிகண் டடைந்தேன்
சித்தர் வானவர் தானவர் வணங்குஞ் செல்வத் தென்றிரு நின்றியூ ரானே.(க)

**171.** திருநீடூர் :

[சோ ; சு ; அருட்சோமநாதேசுரர் - வேயுறு தோளியம்மை ; மகிழமரம்.]

மாயூரத்துக்கு வடக்கிலுள்ள ரெயில்வே ஸ்டேஷன். இங்கே முனையடுவார் நாயனர் சிவனடியார்களுக்குத் திருவமுது செய்வித்து வந்து முத்திபெற்றனர்.

ஊழிக்காலத்திலும் உலவாது நீடித்திருக்குந் தலமாதலின் இத்தலத்துக்கு நீடூர் என்னும் பெயர் எய்தியது. இந்திரன், சூரியன், சந்திரன், நண்டு, காளி இவர்கள் பூஜித்த ஸ்தலம். இதற்கு வகுளாரணியம், மகிழாரணியம், மகிழவனம் என்றும் பெயர்.

வடமலை — நாராணக்குடை மன்னர் இயற்றிய ஸ்தலபுராணம் அச்சிடப்பட்டுள்ளது.

காடி லாடிய கண்ணுத லானைக் கால னைக்கடிந் திட்டபி ரானைப்
பாடி யாடும் பரிசே புரிந்தானைப் பற்றி னோடுசுற் றம்மொழிப் பானைத்
தேடி மாலயன் காண்பரி யானைச் சித்த முந்தெளி வார்க்கெளி யானைக்
கோடி தேவர்கள் கும்பிடு நீடூர்க் கூத்த னைப்பணி யாவிட லாமே. (சு)

**172.** திருநீலக்குடி : [சோ ; அ ; நீலகண்டேசுரர் — உமையம்மை.]

இது 'தென்னலக்குடி' என வழங்குகின்றது.

ஆடுதுறை [102] ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து 2½-மைல். திருவிடைமருதூர் [34] ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து 5-மைல்.

வருணனும், தேவகன்னிகைகளும் பூஜித்த ஸ்தலம். அம்மன் சந்நிதிகள் இரண்டுள்ளன.

நாலு வேதியர்க் கின்னரு ளன்னிழல்
ஆல னாலஞ் சுண்டுகண் டத்தமர்
நீல னீலக்குடியுறை நின்மலன்
கால னாருயிர் போக்கிய காலனே. (அ)

**173.** நெடுங்களம் : [சோ ; ச ; நித்தியசுந்தரேசுரர்—ஒப்பிலாநாயகி.]

திரிசிரபுரத்துக்கு கிழக்கு 6-மைலிலுள்ள திரு எறும்பியூர் [48] ரெயில்வே ஸ்டேஷனுக்குக் கிழக்கு 7-மைல். சோழகம்பட்டி ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து 2-மைல்.

வங்கிய சோழராஜனுக்கு அநுக்கிரகஞ் செய்த ஸ்தலம்.

" தோட்டுத் தடவித் துடிப்பொன்றுங் காணாது
பெட்டப் பிணமென்று பேரிட்டுக்—கட்டி
யெடுங்களத்தா என்னாமு னேழைமட நெஞ்சே
நெடுங்களத்தான் பாத நினை "

என்பது ஐயடிகள் காடவர் கோனாயனார் க்ஷேத்திரத் திருவந்தாதி.

நின்னடியே வழிபடுவா னிமலா நினைக்கருத
என்னடியா னுயிரை வௌவே லென்றடற் கூற்றுதைத்த
பொன்னடியே பரவிநாளும் பூவொடு நீர்சுமக்கு
நின்னடியா ரிடர்களையாய் நெடுங்களமேயவனே. (ச)

## 174. திருநெய்த்தானம் :

[சோ ; ச-அ ; நெய்யாடியப்பர் - பாலாம்பிகை யம்மை ; காவிரி நதி.]

இது 'தில்லைஸ்தானம்' என வழங்குகின்றது. திருவையாற்றுக்கு [50] மேற்கு 1-மைல்.

சப்தஸ்தான க்ஷேத்திரங்களில் ஏழாவது ஸ்தலம். சரஸ்வதி பூஜித்த ஸ்தலம். தக்ஷிணாமூர்த்தி – நின்ற திருக்கோலம்.

" மையாடிய கண்டன்மலை மகள் பாகம துடையான்
கையாடிய கேடில்கரி யுரிமூடிய ஒருவன்
செய்யாடிய குவளைம்மலர் நயனத் தவளோடும்
நெய்யாடிய பெருமானிட நெய்த்தான மெனீரே. (ச)

தேய்ந்திலங் குஞ்சிறு வெண்மதி யாய்நின் றிருச்சடைமேல்
பாய்ந்தகங் கைப்புனல் பன்முக மாகிப் பரந்தொலிப்ப
ஆய்ந்திலங் கும்மழு வேலுடை யாயடி யேற்றுரைநீ
ஏந்திள மங்கையு நீயுநெய்த் தானத் திருந்ததுவே. (அ)

## 175. திருநெல்லிக்கா :

[சோ ; ச ; நெல்லிவனநாதேசுரர் - மங்களநாயகி.]

ரெயில்வே ஸ்டேஷன். திருவாரூருக்குத் [23] தெற்கு 8-மைல்.

சூரியனும் பிரமனும் பூஜித்த ஸ்தலம். மேற்குப் பார்த்த சந்நிதி. ஐப்பசி மீ கிருஷ்ணபக்ஷ சதுர்த்தசி முதல் 7-நாளும், மாசிமீ 18உ முதல் 7-நாளும், அஸ்தமன சமயத்திற் சூரியனுடைய கிரணங்கள் ஸ்வாமிமேல் விழுகின்றன. நெல்லி விருக்ஷம் பிராகாரத்தி லிருக்கின்றது. இதன் காய்கள் ஸ்வாமிக்கு மட்டும் உபயோகப்படுகின்றன. கோயிலுக்குத் தெற்கே பிரமதீர்த்தமும், வடக்கே சூரிய தீர்த்தமும் இருக்கின்றன.

நலந்தானவ னான்முகன் றன்றலையைக்
கலந்தானது கொண்ட கபாலியுந்தான்
புலந்தான்புக ழாலெரி விண்புகழுந்
நிலந்தானேனல்லிக் காவுணி லாயவனே. (ரு)

**176.** திருநெல்வாயில் என்பது சிவபுரி.

[சோ; ச; உச்சிநாதேசுரர் — கனகாம்பிகை.]

சிதம்பரத்துக்குத் [122] தென்கிழக்கு 3-மைல். இந்தத் தலத்தில் ஆலயங்கள் இரண்டு. வடக்கே யிருக்கும் ஆலயம் இந்தத் தலத்துக்கு உரித்தானது. தெற்கே யிருக்கும் ஆலயத்திலே முன் திருக்கழிப்பாலையி லிருந்த பால் வண்ண நாதரென்னும் சிவலிங்கப்பெருமான் வீற்றிருக்கின்றார். திருக்கழிப்பாலையி லிருந்த ஆலயம் இப்பொழுது கொள்ளிட நதியாற் கொண்டுபோய் விடப் பட்டது.

புடையி னார்புள்ளி கால்பொ ருந்திய
மடையி னார்மணி நீர்நெல் வாயிலார்
நடையி னல்விரற் கோவ ணந்நயக்
துடையி னாரெம துச்சி யாரே. (ச)

**177.** திருநெல்வாயில் அரத்துறை:

[நடு; மூ; அரத்துறைநாதர் — ஆநந்தநாயகி; வெள்ளாறு.]

பெண்ணாகடம் ரெயில்வே ஸ்டேஷனுக்குத் தென்மேற்கு 3-மைல். இது நிவாநதியின் வடகரையி லிருக்கின்றது.

திருஞானசம்பந்தமூர்த்தி ஸ்வாமிகளுக்குச் சிவபெருமான் முத்துச் சிவிகையும் முத்துக் குடையும் முத்துச் சின்னங்களும் கொடுத்தருளிய ஸ்தலம். இதனை இத்தலத்துத் திருப்புகழிலுங் காணலாம்.

எந்தை யீச னெம்பெருமான் ஏறமர் கடவுளென் றேத்திச்
சிந்தை செய் பவர்க்கல்லாற் சென்று கைகூடுவ தன்றால்
கந்த மாமல ருந்திக் கடும்புன னிவாமல்கு கரைமேல்
அந்தண் சோலை நெல்வாயி லரத்துறை யடிகடம் மருளே. (ச)

கடவு ளைக்கட லுள்ளெழு நஞ்சுண்ட
உடலு ளானை யொப்பாரி யிலாதவெம்
அடலு ளானை அரத்துறை மேவிய
சுடரு ளானைக் கண்டீர்நாந் தொழுவதே. (அ)

கல்வா யகிலுங் கதிர்மா மணியுங் கலந்துந் திவருந் நிவவின் கரைமேல்
நெல்வா யிலரத் துறைநீ ஹறையுந் நிலவெண் மதிசூ டியநின் மலனே
நல்வா யில்செய்தார் நடந்தா ருடுத்தார் நரைத்தா ரிறந்தா ரென்றுநா
னிலத்திற்
சொல்லாய்க் கழிகின் றதறிந் தடியேன் தொடர்ந்தே னுய்யப் போவதோர்
சூழல் சொல்லே. (சு)

## 178. திருநெல்வெண்ணெ :

[நடு ; ச ; வெண்ணெயப்பர்-நீலமலர்க்கண் அம்மை.]

இது 'நெய்வெணை'யென வழங்குகின்றது.

உளுந்தூர்பேட்டை ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடமேற்கு 4-மைல். கோயில் நல்ல ஸ்திதியில் இல்லை.

சநகர், சநற்குமாரர் முதலியோர் பூசித்த ஸ்தலம்.

நெற்றியோர் கண்ணுடை நெல்வெணெ மேவிய
பெற்றிகொள் பிறைநுத லீரே
பெற்றிகொள் பிறைநுத லீருமைப் பேணுதல்
கற்றறி வோர்கடங் கடனே. (ச)

## 179. திருநெல்வேலி :

[பா ; ச ; நெல்லையப்பர்-காந்திமதியம்மை ; தாமிரவர்ணி.]

ரெயில்வே ஸ்டேஷன். தாம்பிரவர்ணி நதியின் கரையி லிருக்கின்றது. பஞ்ச சபைகளில் ஒன்றாகிய **தாம்பிரசபையை** உடைய ஸ்தலம். சிவபெருமான் தம்முடைய நைவேத்தியத்துக்காக வேத சருமா என்னும் பிராமணர் யாசித்துக் கொண்டுவந்து உலர்த்தி வைத்திருந்த நெல்லை வெள்ளமடித்துப் போகாவண்ணம் **வேலி** கட்டிக் காத்தருளியபடியால் இந்தத் தலத்துக்குத் **திருநெல்வேலி** யெனப் பெயர் வந்தது. மிகப் பெரிய கோயில். நெல்லையப்பர், வேணுவனநாதர் என இரண்டு சந்நிதிக ளுள்ளன. இறைவன் மூங்கிலிற் றோன்றிய காரணத்தால் 'வேய்முத்தநாதர்' என்னும் திருப்பெயர் கொண்டனர்.

"பொருநைத் துறைவாய்ப் பிறவாக் கடவுள்வேய்
வயிற்றிற் பிறந்த தொன்னகரும்"—

திருவிளையாடல் - அருச்சனை - ருரு.

ஸ்ரீ காந்திமதியம்மை சந்நிதி தனியாக இருக்கின்றது. ஆறுமுக நாதர் (நயினார்) சந்நிதானம் பிராகாரத்தி லிருக்கின்றது. இராவணன் கயிலையை எடுப்பது போன்ற விமானமண்டபம் ஒன்றும் பிராகாரத்தில்

உள்ளது. அம்மன் கோயிலுக் கருகில் திருக்குளம் (பொற்றாமரை) இருக்கின்றது.

ஸ்தலபுராணம் பெரிது ; அச்சிடப்பட்டுள்ளது.

அகஸ்தியர், பிரமா, விஷ்ணு முதலியோர் பூசித்த ஸ்தலம்.

வெடிதரு தலையினர் வேனல்வெள் ளேற்றினர் விரிசடையர்
பொடியணி மார்பினர் புலியத ளாடையர் பொங்கரவர்
வடிவுடை மங்கையோர் பங்கினர் மாதரை மையல்செய்வார்
செடிபடு பொழிலணி திருநெல் வேலியுறை செல்வர் தாமே. (ச)

## 180. பட்டீச்சுரம் :

[சோ ; ச ; பட்டீசுரர்-பல்வளைநாயகி ; ஞானதீர்த்தம்.]

கும்பகோணத்துக்குத் [97] தென்மேற்கு 4-மைல்.

காமதேநுவின் புத்திரிகள் நால்வரிற் பட்டி என்பவள் பூஜித்த ஸ்தலம்.

சிவபெருமான் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாருக்கு வெயில் வெப்பந் தணிக்கும்பொருட்டு ஒரு பூதத்தைக்கொண்டு முத்துப் பந்தர் நிழற்றுவித்த ஸ்தலம். கோயிலுக்குள் ஞானதீர்த்தமும், அதன் தென்கரையில் ஸ்தலவிருக்ஷமாகிய வன்னியும் இருக்கின்றன. ஸ்ரீ ராமருக்குச் சாயை ஹத்தி தோஷம் தீர்ந்த ஸ்தலம். மார்கழி அமாவாசைதினம் இந்த ஐதிஹ்யம் நடத்தப்படுகின்றது. கோயிலில் நந்திகளெல்லாம் சற்று விலகியிருக்கின்றன. சம்பந்த ஸ்வாமிகள் வெளியிலிருந்து தரிசநஞ் செய்தற் பொருட்டு அப்படி விலகினதாகச் சொல்லுகிறார்கள். முதலில் இருக்கும் நந்தி பெரிது. நல்ல வேலைப்பாடுள்ளது. கோவிந்த தீக்ஷிதர் என்னும் மந்திரி அதிக திருப்பணி செய்தாராம். அவருடைய உருவமும் அவர் மனைவியாருடைய உருவமும் அம்மன் சந்நிதியி லிருக்கின்றன. பட்டீச்சுரத்துக்குத் தெற்கு 1-பர்லாங்கு தூரத்தில் திருமலைராயன் ஆறு என்னுஞ் சிற்றாறு ஓடுகின்றது.

இத் தலத்திற்கு வடக்கில் வேறொரு வீதியில் திருச்சத்திமுத்தம் என்னுந் தலம் [128] இருக்கின்றது.

பாடன்மறை சூடன்மதி பல்வளையொர் பாகமதின் மூன்றொர்கணையாற்
கூடவெரி யூட்டியெழில் காட்டிநிழல் கூட்டுபொழில் சூழ்பழசையுள்
மாடமழ பாடியுறை பட்டிசர மேயகடி கட்டரவினார்
வேடநிலை கொண்டவரை வீடுநெறி காட்டிவினை வீடுமவரே. (ச)

**181.** திருப்பந்தணைநல்லூர் :

[சோ ; ச - அ ; பசுபதீசுரர் — காம்பனதோளியம்மை.]

திருவிடைமருதூர் [34] ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கே 5½-மைல் சென்று கஞ்சனூரை [60] யடைந்து, அங்கிருந்து பின்னும் வடகிழக்கே 2-மைல் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம். குற்றாலம் ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடமேற்கு 6-மைல்.

தேவ கன்னிகைகளும், காமதேநுவும் பூசித்த ஸ்தலம்.

இடறினார் கூற்றைப் பொடிசெய்தார் மதிலை யிவை சொல்லி
யுலகெழுந் தேத்தக்
கடறினா ராவர் காற்றுளா ராவர் காதலித்துறை தருகோயில்
கொடிறனார் யாதுங் குறைவிலார் தாம்போய்க் கோவணங்கொண்டு
கூத்தாடும்
படிறனார் போலும் பந்தணை நல்லூர் நின்றவெம் பசுபதி யாரே. (ச)

நோதங்க மில்லாதார் நாகம் பூண்டார்
நூல்பூண்டார் நூன்மேலோ ராமை பூண்டார்
பேய்தங்கு நீள்காட்டி னட்ட மாடிப்
பிறைசூடுஞ் சடைமேலோர் புனலுஞ் சூடி
ஆதங்கு பைங்குழலாள் பாகங் கொண்டார்
அனல்கொண்டார் அந்திவாய் வண்ணங் கொண்டார்
பாதங்க நீரேற்றார் பைங்க ணேற்றார்
பலியேற்றார் பந்தணைநல் லூரா ரே. (அ)

**182.** திருப்பயற்றூர் என்பது திருப்பயற்றங்குடி.

[சோ ; அ ; திருப்பயற்றீசுரர் — காவியங்கண்ணியம்மை.]

திருவாரூருக்கு [23] வடக்கே 4—மைலிலுள்ள வெட்டாறு ஸ்டேஷனி லிறங்கி, அங்கிருந்து வடகிழக்கு 3½-மைல் சென்று, திருவிற்குடியை [259] அடைந்து, அப்பாற் கிழக்கே 3—மைல் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

பைரவருஷி பூசித்த ஸ்தலம்.

ஆவியா யவியு மாகி யருக்கமாய்ப் பெருக்க மாகிப்
பாவியாய்ப் பாவந் தீர்க்கும் பரமனாய்ப் பிரம னாகிக்
காவியங் கண்ண ளாகிக் கடல்வண்ண னாகி நின்ற
தேவியைப் பாகம் வைத்தார் திருப்பயற் றூரனாரே. (அ)

## 183. திருப்பரங்குன்றம் :

[பா ; ச-சு ; பரங்கிரிநாதேசுரர் - ஆவுடைநாயகி.]

ரெயில்வே ஸ்டேஷன். மதுரைக்குத் [28] தென்மேற்கு 4-மைல். முருகக் கடவுளுடைய ஆறு படை வீடுகளிலும் முதன்மைத்து. அவர் தெய்வயானை யம்மையை மணந்த ஸ்தலமும் இதுவே. சரவணப் பொய்கை கோயிலுக்குக் கிழக்கி லுள்ளது. மலையைச் சுற்றிவர அரைமணி நேரம் ஆகும். மலைமேற் ‘காசி தீர்த்தம்’ என்றொரு தீர்த்தம் இருக்கின்றது. அதனுள் மீன்கள் ஊதாவர்ணமாயும் பொன்னிறமாயு மிருக்கின்றன. அவல் போட்டாற் சாப்பிடுகின்றன.

நிரம்பவழகிய தேசிக ரியற்றிய புராணம் அச்சிடப்பட்டுள்ளது.

பொன்னியல் கொன்றை பொறிகிளர் நாகம் புரிசடைத்
துன்னிய சோதி யாகிய வீசன் றொன்மறை
பன்னிய பாட லாடலன் மேய பரங்குன்றை
யுன்னிய சிந்தை யுடையவர்க் கில்லை யுறுநோயே. (சு)

அடிகே ளுமக் காட்செய வஞ்சுதுமென்
றமரர் பெருமானை யாரூ ரனஞ்சி
முடியா லுலகாண்ட மூவேந்தர் முன்னே
மொழிந் தாறுமோர் நான்குமோ ரொன்றினையும்
படியா விவைகற்று வல்ல வடியார்
பரங்குன்ற மேய பரம னடிக்கே
குடியாகி வானோர்க்கு மோர்கோவு மாகிக்
குலவேந்தராய் விண்முழு தாள்பவரே. (கு)

## 184. திருப்பராய்த்துறை :

[சோ ; ச—அ ; பராய்த்துறைநாதர் - பொன்மயிலம்மை ; காவிரி.]

திரிசிராப்பள்ளி கோட்டை ஸ்டேஷனுக் கடுத்த எழுமனூர் ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடமேற்கு 1½—மைல்.

இந்திரனும், குபேரனும், சப்தருஷிகளும் பூசித்த ஸ்தலம்.

நீறு சேர்வதொர் மேனியர் நேரிழை
கூறு சேர்வதொர் கோல மாய்ப்
பாறு சேர்தலைக் கையர்ப ராய்த்துறை
ஆறு சேர் சடை யண்ணலே, (க)

அரக்க னூற்ற லழித்த அழகனைப்
பரக்கு நீர்ப்பொன்னி மன்னு பராய்த்துறை
இருக்கை மேவிய ஈசனை யேத்துமின்
பொருக்க நும்வினை போயறுங் காண்மினே. (அ)

**185**. பரிதிநியமம் : இதனைப் பரித்தியப்பார் கோயில் என்ப.

[சோ ; ச ; பரிதியப்பர் - மங்களநாயகி.]

தஞ்சாவூருக்குக் கிழக்கிலுள்ள சாலியமங்கலம் ரெயில்வே ஸ்டேஷனுக்குத் தென்மேற்கு 8-மைல். தஞ்சாவூரிலிருந்து பட்டுக் கோட்டைக்குப் போகும் வழியில் 10-மைல்.

பரிதி (சூரியன்) பூசித்த ஸ்தலம்.

விண்கொண்ட தூமதி சூடி நீடு விரிபுன் சடைதாழப்
பெண்கொண்ட மார்பில்வெண் ணீறு பூசிப் பேணர் பலிதேர்ந்து
கண்கொண்ட சாயலொ டேர்க வர்ந்த கள்வர்க் கிடம்போலும்
பண்கொண்ட வண்டினம் பாடி யாடும் பரிதி நியமமே. (க)

**186**. திருப்பருப்பதம் என்பது ஸ்ரீசைலம்.

[வட ; மூ ; பருப்பதநாதர் - பருப்பதநாயகி.]

மல்லிகார்ச்சுனபுரம் என்பதுவும் இதுவே. கர்னூல் ஜில்லாவி லுள்ள நந்தியால் ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடகிழக்கு 66-மைல். 40–மைல் தூரத்தி லுள்ள நாகலொட்டி என்னும் ஊர் வரையில் மாட்டுவண்டி போகும். மற்ற 26–மைலும் மலைவழி. இவ்வழியிற் பெத்தசெருவு 10-மைல். அப்பாற் பீமகுண்டம் 10–மைல். அதன் பின்னர் ஸ்ரீசைலம் 6–மைல். மலைவழி சற்று கஷ்டம்.

"செல்லலுற வரிய சிவன் சீபர்ப்பத மலையை"

என்பது சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் திருவாக்கு.

நந்திதேவர் பர்வத வடிவமாகிச் சிவபெருமானைத் தாங்கிக் கொண்டிருக்கும் ஸ்தலம்.

பருப்ப தப்பெயர்ச் சிலாதனற் பாலகன் பரம
னிருப்ப வோர்வரை யாவனென் றருந்தவ மியற்றிப்
பொருப்ப தாகியே ஈசனை முடியின்மேற் புனைந்த
திருப்ப ருப்பதத் தற்புதம் யாவையுந் தெரிந்தான்.

—கந்தபுராணம் - வழிநடை - ரு.

சுடுமணி யுமிழ்நாகஞ் சூழ்தர வரைக்கசைத்தான்
இடுமணி யெழிலானை யேறல னெருதேறி
விடமணி மிடறுடையான் மேவிய நெடுங்கோட்டுப்
படுமணி விடுசுடரார் பருப்பதம் பரவுதுமே. (சு)

அங்கண்மா லுடைய ராய ஐவரா லாட்டு ணாதே
உங்கண்மால் தீர வேண்டி லுள்ளத்தா லுள்கி யேத்துஞ்
செங்கண்மால் பரவி யேத்திச் சிவனென நின்ற செல்வர்
பைங்கண்வெள் ளேற தேறிப் பருப்பத நோக்கி னாரே. (அ)

மானு மரை யினமு மயி லினமுங் கலந்தெங்கும்
தாமே மிக மேய்ந்து தடஞ் சுனைநீர்களைப் பருகிப்
பூமா மர முரிஞ்சிப் பொழி லூடே சென்று புக்குத்
தேமாம் பொழி னீழற் றுயில் சீபர்ப் பத மலையே. (க)

## 187. திருப்பழனம்:

[சோ; ச-அ; ஆபத்சகாயேசுரர் - பெரியநாயகி; காவிரி.]

திருவையாற்றுக்குக் [50] கிழக்கு 2-மைல்.

இது சப்தஸ்தான க்ஷேத்திரங்களில் இரண்டாவது ஸ்தலம்.

அப்பூதியடிகளின் அடிமைத் திறத்தினை அப்பர் ஸ்வாமிகளே வியந்தேத்தியுள்ள அருமைத் தேவாரப் பதிகத்தைக் கொண்டுள்ளது*. விஷ்ணு (வேணுகோபால ஸ்வாமி) சந்நிதி ஒன் றிருக்கின்றது. இவ்வூரில் வாழை விசேஷம்; தலத்துக்குக் கதலிவனம் என்றும் பெயர். இதற்குச் சமீபத்திலுள்ள திங்களூரில், அப்பூதிநாயனாருடைய பிள்ளை விஷந்தீண்டி இறக்க, அப்பர் ஸ்வாமிகள் "ஒன்று கொலாம்" என்னும் திருப்பதிகம் பாடி அப் பிள்ளையை எழுப்பியருளினார். திங்களூர் சந்திரன் பூஜித்த ஸ்தலம். சந்திரனுடைய கிரணங்கள் பங்குனி, புரட்டாசி இந்த 2-மாதங்களிற் பௌர்ணமியிலும் அதற்கு முன் பின் ஆகிய 2-தினங்களிலும் ஸ்வாமிமேற் படுகின்றன.

வேத மோதி வெண்ணூல் பூண்டு வெள்ளை யெருதேறிப்
பூதஞ் சூழப் பொலிய வருவார் புலியி னுரிதோலார்
நாதா வெனவு நக்கா வெனவு நம்பா வென நின்று
பாதந் தொழுவார் பாவந்தீர்ப்பார் பழன நகராரே. (க)

*வஞ்சித்தென் வளைகவர்ந்தான் வாரானே யாயிடினும்
பஞ்சிக்காற் சிறகன்னம் பரந்தார்க்கும் பழனத்தான்
அஞ்சிப்போய்க் கலிமெலிய அழலோம்பும் அப்பூதி
குஞ்சிப்பூ வாய்நின்ற சேவடியாய் கோடியையே. (அ)

## 188. திருப்பழுவூர்:

[சோ; ச; வடமூலநாதர்—அருந்தவநாயகி; கொள்ளிட நதி.]

திருவையாற்றுக்கு [50] வடக்கு 10-மைல். அரியலூருக்குப் போகும் வழி.

அரியலூர் ரெயில்வேஸ்டேஷனிலிருந்து கீழைப்பழுவூர் என்கிற பழுவூர் 7-மைல்.

" அந்தணர்க ளானமலை யாளரவ ரேத்தும்
பந்தமலிகின்ற பழுவூ ரானே."

என்னுந் திருவாக்கு கவனிக்கற் பாலது.

பரசுராமர் தம் தாயைக் கொன்ற பழிநீங்கப் பூஜித்த ஸ்தலம்; அவருடைய உருவம் முன் வாயிலில் இருக்கின்றது.

எண்ணுமொரெ ழுத்துமிசை யின்கிளவி தேர்வார்
கண்ணுமுத லாயகட வுட்கிடம தென்பர்
மண்ணின்மிசை யாடிமலை யாளர் தொழு தேத்திப்
பண்ணிஞெலி கொண்டுபயில் கின்றபழ வூரே. (ச)

## 189. பழையாறைவடதளி:

[சோ; அ; சோமேசுரர்-சோமகலா நாயகி; சோமதீர்த்தம்.]

இது பழையாறை என்றும் வடதளி என்றும் இரண்டு ஸ்தலங்களாக இருக்கின்றது. பட்டீச்சுரத்திலிருந்து [180] கிழக்கே $\frac{1}{4}$-மைல் சென்று வடதளி என்னும் ஸ்தலத்தைஅடைந்து, அங்கிருந்து $\frac{3}{8}$-மைல் சென்று பம்பைப்படை என்னும் ஊரைச்சேர்ந்து, தெற்கே திரும்பி திருமலைராயன் ஆற்றைக்கடந்து $\frac{1}{4}$-மைல் சென்றுற் பழையாறையை அடையலாம். பழையனூர்-ஆலங்காடு போல இந்த இரண்டு ஸ்தலங்களும் ஒரே பதிகத்திற் சேர்த்துப் பாடப் பெற்றிருக்கின்றன.

வடதளியில் ஸ்வாமி பெயர்-தர்மபுரீசுரர். தேவியார்-விமல நாயகி. ஸ்வாமி அம்மை தவிர வேறு விக்கிரகம் ஒன்றும் இல்லை. ஆலயம் ஒரு மேட்டின்மேலிருக்கின்றது. இதற்குச் சமீபத்தில் துறையூர் - சிவப்பிரகாச ஸ்வாமிகளுடைய சமாதிக் கோயில் இருக்கின்றது.

பழையாறை—சந்திரன் பூசித்த ஸ்தலம். அமர்நீதி நாயனார் வாழ்ந்திருந்த பதி.

காமதேநுவின் புத்திரிகளுட் பட்டி பூசித்தது - பட்டீச்சுரம்; விமலி பூசித்தது-பழையாறைவடதளி; சபளி பூசித்தது-திருமேற்றளி-(கைலாச நாதர் - சபளநாயகி); நந்திநி பூஜித்தது - முழையூர் (பரசு நாதேசுரர்-ஞாநாம்பிகை.)

நீதி யைக்கெட நின்றம ணேயுணுஞ்
சாதி யைக்கெடு மாசெய்த சங்கரன்
ஆதி யைப்பழை யாறை வடதளிச்
சோதி யைத்தொழு வார்துயர் தீருமே. (அ)

**190.** பள்ளியின்முக்கூடல் :

[சோ ; அ ; முக்கோணநாதேசுரர்-மைம்மேவு கண்ணி.]

திருவாரூருக்கு [23] வடகிழக்கு 3-மைல். திருவாரூருக்குக் கிழக்கு $1\frac{1}{2}$-மைலிலுள்ள கயாகரைக்கு வடக்கு $1\frac{1}{2}$-மைல். திருவாரூருக்கு வடக்கிலுள்ள வெட்டாறு ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து 1-மைல். கோயிலுக் கெதிரில் திருக்குளம் இருக்கின்றது.

[கயாகரையை கேகரை என்று சொல்லுகிறார்கள். கயாதீர்த்தப் பெருமையைத் திருவாரூர்ப்புராணம் கயாதீர்த்தச் சருக்கத்திற் காண்க. இராமர் பூஜித்த இலிங்கம். பளபளப்பா யிருக்கின்றது. இவ்வாலயத்துக்கு மேற்பக்கத்தில் இராமசாமி கோயி லிருக்கின்றது.]

பூதியனைப் பொன்வரையே போல்வான் தன்னைப்
புரிசடைமேற் புனல் கரந்த புநிதன் தன்னை
வேதியனை வெண்காடு மேயான் தன்னை
வெள்ளேற்றின் மேலானை விண்ணோர்க் கெல்லாம்
ஆதியனை யாதிரைநன் னாளான் தன்னை
யம்மானை மைம்மேவு கண்ணி யாளோர்
பாதியனைப் பள்ளியின்முக் கூடலானைப்
பயிலாதே பாழேநா னுழன்ற வாறே. (அ)

**191.** திருப் பறியலூர் : இதனைப் பரசலூர் என்ப.

[சோ ; ச ; வீரட்டேசுரர் - இளங்கொடியம்மை.]

மாயூரத்துக் கருகிலுள்ள விளநகர் [257] என்னும் ஸ்தலத்தி லிருந்து 3-மைல். அஷ்டவீரத்தலங்களி லொன்று.

' "ஏழகச் சென்னி தன்னை மங்கல மாமற் கீந்த
மருகனு ரிருக்கை காண்மின்" —திருவிளை - அருச்சனை - உரு

தக்ஷ யாகத்துக்கு வந்திருந்த மாயன் முதலிய விண்ணவர்களின் தீமையைப் பறித்த ஸ்தலம்.

"பயங்கிளர் நுங்கள் தீமை பறி செய்தோ மித்தேத் தற்றால்
தயங்குமித் தான மென்றும் பறியலென் றொருபேர் சார்க."
—மாயூரப் புராணம்.

வளங்கொண் மலர்மே லயனோ தவண்ணன்
றளங்கு மனத்தார் தொழத்தழ லாய்நின்றான்
இளங்கொம்ப ரனோ டிணைந்தும் பிணைந்தும்
விளங்குந் திருப்பறியல் வீரட்டத் தானே. (ரு)

**192.** வன்பார்த்தான் பனங்காட்டூர் என்பது திருப்பனங்காடு.

[தொ ; ச ; பனங்காட்டீசுரர் - அமிர்தவல்லியம்மை; பனைவிருக்ஷம்.]

காஞ்சிபுரத்துக்குத் [56] தெற்கு 4-மைல் சென்று, ஐயன்குளம் என்னும் கிராமத்தை அடைந்து, அங்கிருந்து மேற்கு (ஆற்காடு) ஆறுகாட்டுக்குப் போகும் வழியில் $3\frac{1}{2}$-மைல் சென்று, அங்கு வடக்கே திரும்பி $\frac{3}{4}$-மைல் சென்றால் இந்தத் தலத்தை அடையலாம். வழியில் வேகவதி ஆற்றையும் பாலாற்றையுங் கடக்கவேண்டும். வன்பாக்கம் கிராமம் மேற்கே $1\frac{1}{2}$-மைலில் இருக்கின்றது.

ஆலயத்திற் சந்நிதிக ளிரண்டு. தெற்கிலிருப்பது அகஸ்தியர் பூஜித்தது; ஸ்வாமி-தாளபுரீசுரர்; தேவியார்-ஸ்தூலகோமளபதாம்பாள். வடக்கி லிருப்பது புலஸ்தியர் பூஜித்தது ; ஸ்வாமி-கிருபாநாதேசுரர் ; தேவியார் - கிருபாநாயகி. ஜடாகங்கை தீர்த்தம்.

விடையின்மேல் வருவானை வேதத்தின் பொருளானை
அடையிலன் புடையானை யாவர்க்கு மறிவொண்ணா
மடையில்வா ளைகள்பாயும் வன்பார்த்தான் பனங்காட்டூர்ச்
சடையிற்கங் கைதரித்தானைச் சாராதார் சார்வென்னே. (சு)

**193.** திருப்பனந்தாள் : [சோ ; ச ; சடையப்பர் - பெரியநாயகி.]

கும்பகோணத்துக்கு [97] வடகிழக்கு 10-மைல். ஆடுதுறை ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடக்கு 6-மைல்.

ஆலயத்துக்குத் தாடகேச்சுரம் என்று பெயர். தாடகையென்னும் ஒருமாதின் அன்புக்காகச் சாய்ந்திருந்த சிவலிங்கப் பெருமானை, சேனை முதலியவைகள் கயிற்றைக் கட்டிக்கொண்டு இழுத்தும்

நிமிராமற், குங்குலியக்கலய நாயனார் அக்கயிற்றைத் தம்முடைய் கழுத்திற்கட்டி யிழுத்தவுடனே அவருடைய அன்புக்காக நிமிர்ந் தருளிய ஸ்தலம்.

"மாலை சாத்துந்
தாடகை மானங் காப்பான் தாழ்ந்து பூங் கச்சிட் டீர்க்கும்
பீடுறு கலைய னன்பி னிமிர்ந்தவெம் பிரானு ரீதால்."
—திருவிளை - அருச்சனை - ௨0

பிராகாரத்தில் 2-ஆண் பனைகள் இருக்கின்றன.

சூழ்தரு வல்வினையு முடலோடு றொன்றிய பல்பிணியும்
பாழ்பட வேண்டுதிரேன் மிக வேத்துமின் பாய்புனலும்
போழிள வெண்மதியும் மனல் பொங்கர வும்புனைந்த
தாழ்சடை யான் பனந்தாட் டிருத் தாடகை யீச்சுரமே. (௪)

**194**. திருப்பனையூர்: [சோ; ௬-௬; சௌந்தரியநாதர் - பெரியநாயகி.]

திருவாரூருக்கு [23] வடக்கு 6½-மைலிலுள்ள ஆண்டிப் பந்தல் கிராமத்துக்குக் கிழக்கு 1-மைல்.

சிவபெருமான் திருக்கூத்தோடு சுந்தரமூர்த்தி நாயனாருக்குக் காட்சி கொடுத்தருள, அவர் 'மாடமாளிகை' என்னுந் திருப்பதிகம் பாடித் துதித்த ஸ்தலம். அமிர்த புஷ்கரணி தீர்த்தம் கோயிலுக் கெதிரி லிருக்கின்றது. கோயிலுக்குட் பிராகாரத்திற் பனைவிருக்ஷம் இரண்டு இருக்கின்றன. பராசர முநிவர் பூஜை செய்த தலம். இங்கு வளர்ந்த கரிகால் சோழனுக்குப் பிள்ளையார் துணையிருந் தாராம். அதனாற் பிள்ளையாருக்குத் 'துணையிருந்த பிள்ளையார்' என்று பெயர். திருப்பனையூருக்கு வடக்கு 3-மைலில் திருப்புகலூர் [203] இருக்கின்றது.

அரவச் சடைமேன் மதிமத்தம்
விரவிப் பொலிகின் றவனூராம்
நிரவிப் பலதொண் டர்க ளூரும்
பரவிப் பொலியும் பனையூரே. (௧)

மாடமாளிகை கோபு ரத்தொடு மண்ட பம்வளரும்வளர்பொழிற்
பாடல்வண் டறையும் பழனத் திருப்பனையூர்த்
தோடு பெய்தொரு காதி னிற்குழை தூங்கத் தொண்டர்க ளேரிப்பாடநின்
றாடு மாறு வல்லா ரவரே யழகியரே. (௧)

**195.** திருப்பாசூர் : [தொ ; ச-அ ; பாசூர்நாதர் - பசுபதிநாயகி.]

சென்னப்பட்டணத்துக்கு மேற்கு 26–மைலிலுள்ள திருவெவ்வுளூர் ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடமேற்கு 4½–மைல். கடம்பத்தூர் ஸ்டேஷனுக்கு வடக்கு 3½–மைல்.

சிவபெருமான் ஒரு மூங்கிலடியில் தோன்றியருளிய ஸ்தலம். கரிகால் சோழனுக்கு எதிரியான குறும்ப ராஜன் ஒருவனுக்கு உதவியாக, ஒரு பெரும்பாம்பைக் குடத்தில்விட்டுச் சமணர்கள் சோழனிடம் அனுப்ப, அச்சோழனுக்கு உதவியாகச் சிவபெருமான் அப்பாம்பை எடுத்து ஆட்டியருளிய ஸ்தலம்.

இதனைத் திருநாவுக்கரசு நாயனார் இத்தலத்துக்கு அருளிச்செய்த திருக்குறுந் தொகையில்,

"நீளரவந்தனைப் பற்றி யாட்டுவர் பாசூ ரடிகளே,"—என்றும்,

"தீயதோர் பாம்பும் ஆட்டுவர் பாசூ ரடிகளே,"—என்றும்,

திருத்தாண்டகத்தில்

"படவரவொன் றதுவாட்டிப் பாசூர் மேய
பரஞ்சுடரைக் கண்டடியே னுய்ந்த வாறே,"—என்றும்

சிறப்பித்துக் கூறியிருக்கின்றார். *

ஸ்தலபுராண வசனம் அச்சிடப்பட்டுள்ளது.

சிந்தை யிடையார் தலையின் மிசையார் செஞ்சொல்லார்
வந்து மாலை வைகும் போழ்தென் மனத்துள்ளார்
மைந்தர் மணாள ரென்ன மகிழ்வா ரூர்போலும்
பைந்தண் மாதவி சோலை சூழ்ந்த பாசூரே. (சு)

* சாம்பர் பூசுவர் தாழ்சடை கட்டுவர்
ஓம்பன் மூதெரு தேறு மொருவனார்
தேம்பல் வெண்மதி சூடுவர் தீயதோர்
பாம்பு மாட்டுவர் பாசூ ரடிகளே. (அ)

**196.** திருப்பாச்சிலாச்சிராமம்: இதனைத் திருவாசி யென்ப.

[சோ ; ச–சு ; மாற்றறிவரதர் – பாலசௌந்தரி ; வன்னிவிருக்ஷம்.]

பிக்ஷாண்டார்கோயில் ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து 3-மைல். திரு ஆனைக்கா [31] வுக்கு வடமேற்கு 3½–மைல்.

திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் கொல்லிமழவன் என்னும் அரசனுடைய குமாரத்திக்கு முயலகன் என்னும் வியாதியைத் தீர்த் தருளிய ஸ்தலம்.

இது சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் பொன்பெற்ற ஸ்தலங்களுள் ஒன்று.

" திருப்பாச்சிலாச்சி ராமத்துக் கார்வளர் கண்டர்
பொன்தரப் பாடிக் கைக்கொண்டு "
—பேரூர்ப் புராணம் – பள்ளுப்படலம்-உக.

" பெருமானார் விழுநிதிக் குவை யளித்தருள "
—பெரிய புராணம் - ஏயர்கோன் - அஉ.

அம்மன்கோயிலுக் கெதிரில் தாமிரபர்ணி எனப்படும் தீர்த்தமும் அதன் கரையில் வன்னிவிருக்ஷமும் இருக்கின்றன. நடராஜர் சர்ப்ப நடனமூர்த்தி. பாதத்தின் கீழ் சர்ப்பத்தின் உருவம் இருக்கின்றது.

போங்கிள நாகமோ ரேகவ டத்தோ டாமைவெண் ணூல்புனை கொன்றை
கொங்கிள மாலைபு னைந்தழ காய குழகர்கொ லாமிவ ரென்ன
அங்கிள மங்கையோர் பங்கினர் பாச்சி லாச்சிரா மத்துறை கின்ற
சங்கொளி வண்ணரோ தாழ்குழல் வாடச் சதிர்செய்வ தோவிவர் சார்வே.(௪)

வைத்தனன் தனக்கே தலையுமென் னாவு நெஞ்சமும் வஞ்சமொன் றின்றி
உய்த்தனன் தனக்கே திருவடிக் கடிமை யுரைத்தக்கா லுவமனே யொக்கும்
பைத்தபாம் பார்த்தோர் கோவணத் தோடு பாச்சி லாச்சிரா மத்தெம்பரமர்
பித்தரே யொத்தோர் நச்சில ராகில் இவரலா தில்லையோ பிரானார். (௬)

## 197. திருப்பாண்டிக் கொடுமுடி :

[கொ; மூ; கொடுமுடிநாதர் - பண்மொழி நாயகி; காவிரிநதி; வன்னிவிருக்ஷம்.]

கொடுமுடி ரெயில்வே ஸ்டேஷன். திரிசிராப்பள்ளிக்கு [132] மேற்கு 62-மைல். ஈரோட்டுக்குத் தென்கிழக்கு 23-மைல்.

சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் நமச்சிவாயத் திருப்பதிகம் பாடியருளிய ஸ்தலம்*. காவிரிதீரத்தி லுள்ளது. இதனைத் ' திரிமூர்த்தி ஸ்தலம் ' என்று சொல்லுகிறார்கள். கோயிலுக்குள் ஸ்ரீரங்கநாதர் சந்நிதி தனியாக இருக்கின்றது.

பெண்ணமர் மேனியி னாரும் பிறைபுல்கு செஞ்சடை யாரும்
கண்ணமர் நெற்றியி னாருங் காதம ருங்குழை யாரும்
எண்ணம ருங்குணத் தாரும் இமையவ ரேத்தநின் றாரும்
பண்ணமர் பாடலி னாரும் பாண்டிக் கொடுமுடி யாரே. (௪)

சிட்ட னைச்சிவ னைச்செழுஞ் சோதியை
அட்ட மூர்த்தியை யால நிழலமர்
பட்ட னைத்திருப் பாண்டிக் கொடுமுடி
நட்ட னைத்தொழ நம்வினை நாசமே. (அ)

மற்றுப் பற்றெனக் கின்றிநின் றிருப் பாத மேமனம் பாவித்தேன்
பெற்ற லும்பிறந் தேனி னிப்பிற வாத தன்மைவந் தெய்தினேன்
கற்ற வர்தொழு தேத்துஞ் சீர்க்கறை யூரிற் பாண்டிக் கொடுமுடி
நற்ற வாவுனை நான்ம றக்கினுஞ் சொல்லுநா நமச்சிவாயவே. (க)

## 198. பாதாளீச்சுரம் :

[சோ ; ச ; சர்ப்பபுரீசுரர் - அமிர்தநாயகி.]

இது பாமணி யென வழங்குவருகின்றது ; ராஜமன்னார் கோயில் ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடக்கு $1\frac{1}{2}$-மைல்.

ஸ்வாமிக்கு இரண்டு திருமுகங்கள் தோன்றுகின்றன. பதஞ்சலி போலப் பாம்புருவுள்ள தநஞ்சயருஷி பூஜித்த ஸ்தலம். அம்முநிவ ருடைய உருவம் கோயிலி லிருக்கின்றது.

விண்டலர் மத்தமொடு மிளி ரும்மிள நாகம் வன்னி திகழ்
வண்டலர் கொன்றைநகு மதிபுல்கு வார் சடையான்
விண்டவர் தம்புரமூன் றெரி செய்துரை வேத நான்கு மவை
பண்டிசை பாடலினா னுறை கோயில் பாதாளே. (ச)

## 199. திருப்பாதிரிப்புலியூர் :

[நடு ; ச - அ ; தோன்றாத் துணைநாதர் - பெரியநாயகி யம்மை ; கெடிலநதி ; பாதிரிவிருக்ஷம்.]

ரெயில்வே ஸ்டேஷன். கூடலூருக்கு வடக்கு 3-மைல். கெடில நதியின் தென்கரையி லிருக்கின்றது.

வியாக்கிரபாதர் பூஜித்தமையின் இது வடபுலியூர் எனப்படும். சாபத்தினால் * முடக்காலுள்ள முயலுருப் பெற்ற மங்கணமுநிவர் அவ்வுரு நீங்கப்பெற்ற ஸ்தலம். திருநாவுக்கரசு நாயனாரைச் சமணர்கள் கற்றூணிற் கட்டிக் கடலிற் றள்ளிவிட, அவர் 'சொற் றுணை வேதியன்' என்னும் நமச்சிவாயத் திருப்பதிகத்தை யோதிக் கரையேறப்பெற்ற ஸ்தலம். அந்த இடம் 'கரையேறவிட்ட குப்பம்' என்று சொல்லப்படுகின்றது. நாயனார் கரையேறின பின்பு "ஈன்றாளுமாய்" என்னும் பதிகம் பாடிச் சிவபிரானைத் துதித்துச் சிலநாள் எழுந்தருளியிருந்த ஸ்தலம்.

இலக்கணம் சிதம்பரநாதமுனிவர் இயற்றிய ஸ்தலபுராணமும், தொல்காப்பியமுனிவர் இயற்றிய கலம்பகமும் அச்சிடப்பட்டுள்ளன.

முன்ன நின்றமுடக் கால்மு யற்கருள் செய்துநீள்
புன்னை நின்றுகமழ் பாதி ரிப்புலி யூருளான்
றன்னை நின்றுவணங் குந்த னைத்தவ மில்லிகள்
பின்னை நின்றபிணி யாக்கை யைப்பெறு வார்களே. (எ)

ஈன்றாளு மாயெனக் கெந்தையு மாயுடன் தோன்றினராய்
மூன்றா யுலகம் படைத்துகந் தான்மனத் துள்ளிருக்க
ஏன்றா னிமையவர்க் கன்பன் திருப்பா திரிப்புலியூர்த்
தோன்றாத் துணையா யிருந்தனன் தன்னடி யோங்களுக்கே. (அ)

## 200. திருப்பாம்புரம் :

[சோ, ௬; பாம்புரேசுரர்-வண்டார்பூங்குழலியம்மை; வன்னிவிருக்ஷம்.]

பேரளம் ஸ்டேஷனுக்கு மேற்கு 4½-மைல். வழியில் 1-மைலில் திருமீயச்சூர் [234] இருக்கின்றது.

நாகராஜன் பூஜை செய்த ஸ்தலம். நாகராஜாவின் மூலவிக்கிரகமும் உற்சவ விக்கிரகமும் இருக்கின்றன.

கடிபடு கமலத் தயனொடு மாலுங் காதலோ டடிமுடி தேடச்
செடிபடு வினைகள் தீர்த்தருள் செய்யுந் தீவண்ண ரெம்முடைச் செல்வர்
முடியுடை யமரர் முனிகணத் தவர்கள் முறைமுறை யடிபணிந் தேத்தப்
படியது வாகப் பாவையுந் தாமும் பாம்புர நன்னக ராரே. (எ)

## 201. திருப்பாலைத்துறை :

[சோ; அ; பாலைவனநாதர் - தவள வெண்ணகை யம்மை; காவிரிநதி.]

கும்பகோணத்துக்குத் [97] தெற்கிலுள்ள பாபநாசம் ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடகிழக்கு 1-மைல்.

தாருகாவனருஷிகள் ஏவிய புலியைச் சிவபெருமான் யுரித்து அதன் தோலைத் தரித்தருளிய ஸ்தலம். அம்மையார் சந்நிதி தனியாகத் தெற்கி லிருக்கின்றது. பாபநாசத்துக்கு மேற்கு ½-மைலில் நாற்றெட்டுச் சிவாலயம் என்னும் ஸ்தலம் இருக்கின்றது.

கவள மாகளிற் றின்னுரி போர்த்தவர்
தவள வெண்ணகை மங்கையோர் பங்கினர்
திவள வானவர் போற்றித் திசைதொழும்
பவள மேனியர் பாலைத் துறையரே. (அ)

## 202. திருப்பாற்றுறை :

[சோ ; ச ; மூலநாதர் – மேகலாம்பிகை.]

ஸ்ரீரங்கம் ரெயில்வே ஸ்டேஷனுக் கடுத்த திரு ஆனைக்காவுக்குக் [31] கிழக்கு 5-மைல். திருவெறும்பூர் ரெயில்வே ஸ்டேஷனி லிருந்து 4-மைல். மார்க்கண்டருஷி பூஜிக்கும்பொழுது அபிஷேகத் துக்குப் பசும்பால் கிடையாமல் வருந்த, சிவபெருமான் பால் பெருகும்படி அநுக்கிரகித்த ஸ்தலம்.

பூவுந் திங்கள் புனைந்த முடியின
ரேவி னல்லா ரெயிலெய்தார்
பாவந் தீர்புனன் மல்கிய பாற்றுறை
யோவென் சிந்தை யொருவரே. (ச)

## 203. திருப்புகலூர் :

[சோ ; மூ ; அக்நீசுரர் - கருந்தாழ்குழலியம்மை ; அக்கிதீர்த்தம் ; புன்னைவிருக்ஷம்.]

நன்னிலம் ரெயில்வே ஸ்டேஷனுக்குக் கிழக்கு 4-மைல்.

அக்நி பூஜித்த ஸ்தலம். கோயிலும் கோபுரமும் பெரியன. தென்பக்கந் தவிர மற்றெல்லாப் பக்கங்களிலுங் கருங்கல்லினுற் கட்டிய அகழி யொன்றிருக்கின்றது. ஸ்வாமியின் (கோணப்பிரா னுடைய) உருவம் சற்று சாய்ந்திருக்கின்றது. சந்திரசேகரர் சந்நிதி விசேஷம். அதற்கு நேராக அக்கினிபகவான் உருவம் இருக்கின்றது.

திருநாவுக்கரசு நாயனார் முத்திபெற்ற ஸ்தலம். வாதாபி கணபதி பக்கத்தில் அப்பர் ஸ்வாமிகள் திருவுருவம் இருக்கின்றது. முன் பிராகாரத்திற் கீழ்ப்பக்கத்தில் ஸ்வாமி சிங்கரூபமாய் அப்பரை விழுங்குகிற பாவனை சிலையிற் காட்டப்பட் டிருக்கின்றது. திருப் புகலூர் வர்த்தமானேச்சுரம் இவ்வாலயத்துக்குள் இருக்கின்றது. ஸ்வாமிக்குப் பலவித புஷ்பமாலை கட்டிக்கொடுக்குந் திருத்தொண்டு செய்து வந்த முருகநாயனா ருடைய ஸ்தலம். சுந்தரமூர்த்திநாயனார் நித்திரை செய்யும்பொழுது தம் தலையின் கீழ் வைத்துக்கொண் டிருந்த செங்கற்களெல்லாம் செம்பொற் கற்களா யிருக்கக்கண்டு, ‘தம்மையே புகழ்ந்திச்சை பேசினும்’ என்னுந் திருப்பதிகம் பாடி ஸ்வாமியைத் துதிசெய்த ஸ்தலம்.

இத்தலத்துத் தேவாரத்திற், ‘புன்னைப் பொழிற்புக லூரண்ணல் செய்வன கேண்மின்களோ’—‘புன்னைத் தாது பொழிற்புக

லூரரை'—என்பதனுல் ஸ்தலவிருக்ஷம் புன்னை என்பதும், 'கர நா லைந்துடைத், தோணற் பிரானை வலிதொலைத் தோன்றெல்லை நீர்ப் புகலூர்க், கோணப் பிரானைக் குறுகக் குறுகா கொடுவினையே'—என்பதனுல் ஸ்வாமிபெயர் கோணப்பிரான் என்பதும், 'பெருந்தாழ் சடைமுடி மேற்பிறை சூடிக், கருந்தாழ் குழலியுந் தாமுங் கலந்து என்பதனுல் தேவியார் பெயர் கருந்தாழ்குழலி என்பதும், வர்த்தமானீச்சுரத்துப் பதிகத்தில் "தொண்டர் தண்கய மூழ்கித் துணையலுஞ் சாந்தமும் புகையுங், கொண்டு கொண்டடி பரவிக் குறிப்பறி முருகன் செய் கோலம்",—என்பதனுல் முருகநாயனுருடைய திருப்பணியின் சிறப்பு இத்தன்மைத்து என்பதும் புலப்படுகின்றன.

வாழ்ந்த நாளும் மினி வாழு நாளும் மிவை யறிதிரேல்
வீழ்ந்த நாளெம் பெருமானை யேத்தா விதியில் லிகாள்
போழ்ந்த திங்கட் புரிசடையி னுன்றன் புகலூரையே
சூழ்ந்த வுள்ளம் முடையீர்க ளுங்கடுயர் தீருமே. (ச)

அங்கமே பூண்டா யனலாடினு
    யாதிரையா யானிழலா யானே றூர்ந்தாய்
பங்கமொன் றில்லாத படர்சடையினுய்
    பாம்போடு திங்கள் பகைதீர்த் தாண்டாய்
சங்கையொன் றின்றியே தேவர் வேண்டச்
    சமுத்தி ரத்தி னஞ்சுண்டு சாவா மூவாச்
சிங்கமே யுன்னடிக்கே போது கின்றேன்
    திருப்புகலூர் மேவிய தேவதேவே. (அ)

தம்மையே புகழ்ந் திச்சை பேசினுஞ் சார்வினுந் தொண்டர் தருகிலாப்
பொய்ம்மை யாளரைப் பாடாதே யெந்தை புகலூர் பாடுமின் புலவீர்காள்
இம்மையே தருஞ் சோறுங் கூறையும் ஏத்தலா மிடர் கெடலுமாம்
அம்மையே சிவ லோக மாள்வதற் கியாதுமையுற வில்லையே. (சு)

## 204. திருப்புகலூர் வர்த்தமானீச்சுரம்:

[சோ ; ச ; வர்த்தமானேசுரர் - கருந்தாழ் குழலியம்மை.]

இது திருப்புகலூர் [203] ஆலயத்துக்குள் வடபுறமுள்ளது.

அக்கினீசுரருக்கு அடுத்த வட பக்கத்தில் வர்த்தமானேசுரர் சந்நிதியும் முருக நாயனுர் திருவுருவமும் இருக்கின்றன.

தொண்டர் தண்கய மூழ்கித் துணையலுஞ் சாந்தமும் புகையுங்
கொண்டு கொண்டடி பரவிக் குறிப்பறி முருகன் செய் கோலங்
கண்டு கண்டுகண் குளிரக் களிபரந் தொளிமல்கு கள்ளார்
வண்டு பண்செய்யும் புகலூர் வர்த்தமா னீச்சுரத் தாரே. (க)

## 205. திருப்புத்தூர்:

[பா; ச - அ; ஸ்ரீதளிநாதர் - சிவகாமியம்மை; ஸ்ரீதளிதீர்த்தம்; கொன்றை விருக்ஷம்.]

மதுரைக்கு வடகிழக்கு 38—மைல். அறந்தாங்கி ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து 27—மைல். காரைக்குடி ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து 12-மைல்.

இதற்கு வடமேற்கு 15—மைலில் பிரான்மலை என்று வழங்கும் கொடுங்குன்றமும் [111], கிழக்கு 7—மைலிற் குன்றக்குடி என்னும் சுப்பிரமணிய க்ஷேத்திரமும் இருக்கின்றன.

லக்ஷ்மி பூஜைசெய்த ஸ்தலம். வயிரவர் சந்நிதி விசேஷம். சபாபதி விக்கிரகமும் சிவகாமியம்மன் விக்கிரகமும் சிலையிலிருக்கின்றன.

விஷ்ணுவுக்கும் ஒரு சந்நிதி யிருக்கின்றது. கோயிலுக்கு வடமேற்கே ஸ்ரீதளி தீர்த்தமும் கிழக்கே சிவகங்கையும் இருக்கின்றன.

வெங்கள் விம்மு வெறியார் பொழிற்சோலை
திங்க ளோடு திளைக்குந் திருப்புத்தூர்க்
கங்கை தங்கு முடியா ரவர் போலும்
எங்க ளுச்சி யுறையு மிறையாரே. (ச)

ஏடேறு மலர்க்கமலத் தயனு மாலு
மிந்திரனும் பணிந்தேத்த விருக்கின் றான்காண்
தோடேறு மலர்க்கடுக்கை வன்னி மத்தந்
துன்னியசெஞ் சடையான் காண் துகடீர் சங்க
மாடேறி முத்தீனுங் கானல் வேலி
மறைக்காட்டு மாமணிகாண் வளங்கொள் மேதி
சேடேறி மடுப்படியுந் திருப்புத்தூரிற்
றிருத்தளியான் காணவனென் சிந்தை யானே. (அ)

## 206. திருப்புள்ளமங்கை என்பது பசுபதிகோயில்.

[சோ; ச; ஆலந்தரித்த ஈசுரர் - அல்லியங் கோதை; காவிரி நதி.]

சக்கிரப்பள்ளிக்கு [127] மேற்கு 1½-மைல். பசுபதிகோயில் ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து 1—மைல்.

தேவர்கள் அமுதம் கடைந்தபொழுது உண்டான விஷத்தைச் சிவ பெருமான் உண்டு திருமிடற்றில் அடக்கியருளிய ஸ்தலம்.

கறையார்மிட றுடையான்கமழ் கொன்றைச்சடை முடிமேற்
பொறையார்தரு கங்கைப்புன லுடையான்புள மங்கை
சிறையார்தரு களிவண்டறை பொழில்சூழ்திரு வாலந்
துறையானவ னறையார்கழல் தொழுமின்றுதி செய்தே. (ச)

**207.** புள்ளிருக்குவேளூர் என்பது வைத்தீசுரன் கோயில்.

[சோ ; ச-அ ; வைத்தியநாதர் - தையல் நாயகி ; வேப்பவிருக்ஷம்.]

ரெயில்வே ஸ்டேஷன். சீகாழிக்குத் [88] தென்மேற்கு 3½-மைல். மேற்குப்பார்த்த சந்நிதி.

சம்பாதி-ஜடாயு, இருக்கு வேதம், முருகக்கடவுள் இவர்கள் பூஜித்தமையின் இப்பெயர் வந்தது. 'புள்ளினூர் பணி புள்ளிருக்கு வேளூர்',—என்பது தேவாரம். சூரியனும் பூஜித்த தலம். இந்தத் தல ஆலயத்துக்குள் இருக்கும் முத்துக் குமாரஸ்வாமி சந்நிதி மிகப் பிரபலமானது. கிருத்திகைத் தினங்களில் அடியார்கள் திரளாகச் செல்கின்றார்கள்.

" சடாயு சம்பாதிகள் பெரும்பூசை செய்ய
வரமளித் திருநோய் தீர்க்கு மருந்துறை பதியீதாகும் "
திருவிளை - அருச்சனை - கஅ.

வடுகநாத தேசிகர் இயற்றிய புராணம் அச்சிடப்பட்டுள்ளது.

கள்ளார்ந்த பூங்கொன்றை மதமத்தங் கதிர்மதிய
முள்ளார்ந்த சடைமுடியெம் பெருமானா ருறையுமிடந்
தள்ளாய சம்பாதி சடாயென்பார் தாமிருவர்
புள்ளானூர்க் கரையனிடம் புள்ளிருக்கு வேளூரே. (ச)

கையினோடு கால் கட்டி யுமரெலாம்
ஐயன் வீடின னென்பதன் முன்ன நீர்
பொய்யிலா வரன் புள்ளிருக்கு வேளூர்
மையுலாவிய கண்டனை வாழ்த்துமே. (அ)

**208.** திருப்புறம்பயம் :

[சோ ; மூ ; சாக்ஷிநாதேசுரர் — கரும்பன்ன சொல்லம்மை ; வன்னி விருக்ஷம்.]

கும்பகோணத்துக்கு [97] வடமேற்கு 4—மைலிலுள்ள திரு இன்னம்பருக்கு [42] வடக்கு சுமார் 2-மைல். தெற்கே மண்ணி யாறும் வடக்கே கொள்ளிடமும் இருக்கின்றன.

பிரளயத்துக்குப் புறம்பாய் இருந்தமையாற் புறம் பயம் என்ற பெயர் வந்தது ; (புறம்பு—அயம் = நீர்). ஒரு வணிக கன்னிகைக்குக் குறித்திருந்த புருஷன் பாம்பு கடித்து இறக்க, அவனைத் திருஞான சம்பந்த ஸ்வாமிகள் எழுப்பியருளிய ஸ்தலம். ஆவாறு திருவாக்காலும், 'புறம்பய மதனி லறம்பல அருளியும்' என்னுந் திரு வாசகத்தாலும், சிவபிரான் இத்தலத்தில் நால்வர்க்கு அறந்தின் பபனை

உணர்த்தினதாகத் தெரிகின்றது *. செட்டிப் பெண்ணுக்குச் சாக்ஷி சொன்ன காரணத்தால் ஸ்வாமிக்குச் சாக்ஷிநாதர் என்று பெயர். புன்னைவனநாதர் என்றும் பெயர். புன்னைமரத்துக்கு மேற்பால் நான்கு இலிங்கங்க ளிருக்கின்றன. தக்ஷிணாமூர்த்திக்கு மேலிடத்தில் சட்டைநாதர் சந்நிதி யிருக்கின்றது. விநாயகர் வெண்மைநிறம்; பிரளயங்காத்த பிள்ளையார் என்று பெயர். விநாயகசதுர்த்தி யன்று ஒரு ஆடம் தேன் அபிஷேகம் செய்யப்படுகின்றது. மற்றை நாட்களில் அபிஷேகம் கிடையாது. கோயிலுக்குக் கிழ்ப்புறத்தில் திருக்குள மிருக்கின்றது. அதன் கரைமேலும் தக்ஷிணாமூர்த்தி சந்நிதி யொன் றிருக்கின்றது. கோயிலுக்கு விறகு கொண்டுவந்த ஒரு ஈசனுக்கு ஸ்வாமி அர்த ரூபமாய் வெளிப்பட்டு அநுக்கிரகித்தனர்.

* மறம்பய மலைந்தவர் மதிற்பரி சறுத்தனை
நிறம்பசுமை செம்மையொ டிசைந்துனது நீர்மை
திறம்பய னுறும்பொரு டெரிந்துணரு நால்வர்க்
கறம்பய னுரைத்தனை புறம்பய மமர்ந்தோய். (ச)

கொடிமாட நீடெருவு கூடல் கோட்டூர்
கொடுங்கோளூர் தண்வளவி கண்டியூரும்
நடமாடு நன்மருகல் வைகி நாளு
நலமாகு மொற்றியூ ரொற்றி யாகப்
படிமாலை வண்டறையும் பழனம் பாசூர்
பழையாறும் பாற்குளமுங் கைவிட் டிந்நாள்
பொடியேறு மேனியராய்ப் பூதஞ் சூழப்
புறம்பயநம் மூரென்று போயி னாரே. (அ)

மலமெலா மறுமிம்மையே மறுமைக்கும் வல்வினை சார்கிலா
சலமெலா மொழி நெஞ்சமே யெங்கள் சங்கரன் வந்து தங்குமூர்
கலமெலாங் கடல் மண்டு காவிரி நங்கை யாடிய கங்கைநீர்
புலமெலா மண்டிப் பொன் விளைக்கும் புறம்பயந் தொழப் போதுமே. (சு)

## 209. புறவார்பனங்காட்டூர் என்பது பனையபுரம்.

[நடு; ச; பனங்காட்டீசுரர் – புறவம்மை; பனைவிருக்ஷம்.]

விழுப்புரம் ஸ்டேஷனுக்கு வடக்கு $5\frac{1}{2}$–மைல். முண்டியம் பாக்கம் ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடகிழக்கு 2-மைல். திண்டிவனம் போகும் வழியில் 1–மைல் சென்று, பின்பு கிழக்கே 1-மைல் செல்லவேண்டும்.

இந்த ஸ்தலத்தில் சித்திரைமீ முதல் தேதி முதல், ஏழாந்தேதி வரையில், ஒவ்வொரு நாட் காலையிலும் சூரியன் உதயமாகும் பொழுது, கிரணங்கள் முதலில் ஸ்வாமி மேலும், பின்பு தேவியார் மேலும் விழுகின்றன.

சூரியன் பூஜித்த தலம். புறுவுக்கு அபயங் கொடுத்த சிபிச் சக்கிரவர்த்தி தம் கண்ணைப் பறித்திட்டதும், புறுவின் எடைக்குச் சரியாகி, ஸ்வாமியும் பிரத்தியக்ஷமான காரணத்தால், ஸ்வாமிக்கு நேத்திரோத்தாரக ஈசுரர் என்று பெயர்.

விண்ணமர்ந்தன மும்மதில்களை வீழவெங்கணை யாலெய்தாய்விரி
பண்ணமர்ந்தொலிசேர் புறவார் பனங்காட்டூர்ப்
பெண்ணமர்ந்தொரு பாகமாகிய பிஞ்ஞகாபிறை சேர்நுதலிடைக்
கண்ணமர்ந்தவனே கலந்தார்க் கருளாயே. (௪)

## **210.** திருப்புனவாயில் :

[சோ ; ௪ — ௪ ; பழம்பதிநாதர் — கருணைநாயகி.]

அறந்தாங்கி ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து சுமார் 30—மைல். வழியில் திருப்பெருந்துறையும் (ஆவிடையார் கோவில்), மீமிசலும் இருக்கின்றன. திருப்பெருந்துறைவரையும் (8-மைல்) நல்லவழி. காரைக்குடி ரெயில்வே ஸ்டேஷனி லிருந்தும் போகலாம்.

திரு ஆடானைக்கு [19] வடக்கு 12-மைல்.

இத்தலத்திற்குப் *பழம்பதி, விருத்தபுரி எனவும் பெயர் உண்டு.

"கற்குன்றுந் தூறுங் கடுவெளியுங் கடற்கானல் வாய்ப்
புற்கென்று தோன்றிடு மெம்பெருமான் புனவாயிலே"

என்ற சுந்தரமூர்த்தி ஸ்வாமிகளின் திருவாக்கின் உண்மை யுணரற்பாலது. கோயில் பெரிது. நான்கு வேதங்களும் பூஜித்த ஸ்தலம்.

"சாத வேதம் பரவு புனவாயி னகரும்"

திருவிளை — அருச்சனை — ௩௨.

நந்தியும் மூலலிங்கமும் ஆவிடையாரும் மிகப்பெரியன. ஸ்வாமிக்கு 3-முழ உடை வேண்டும்; ஆவிடையாருக்கு 30-முழ உடைவேண்டும்; 'மூன்று முழமும் ஒரு சுற்று, முப்பது முழமும் ஒரு சுற்று' என்று சொல்வது இந்தத் தலத்து ஸ்வாமியைப் பற்றித்தான். லக்ஷ்மி தீர்த்தமும் பிரமதீர்த்தமும் கோயிலுக்கெதிரி லிருக்கின்றன. பாண்டி 14—தலமும் திருப்புனவாயிலிலேயே இருப்பதாக ஐதிஹ்யம். ஊருக்குத் தெற்கிற் பாம்பாறு (சர்ப்பநதி) ஓடுகின்றது.

மின்னியல் செஞ்சடை வெண்பிறையன் விரிநூலினன்
பன்னிய நான்மறை பாடியாடிப் பலவூர்கள் போய்
அன்ன மன்ன நடையாளொடும் மமரும் மிடம்
புன்னைநன் மாமலர் பொன் னுதிர்க்கும் புனவாயிலே. (ரு)

சித்த நீநினை யென்னொடு சூளறும் வைகலு
மத்த யானையி னீருரி போர்த்த மணாளனூர்
பத்தர் தாம்பலர் பாடிநின் றாடும் *பழம்பதி
பொத்தி லாந்தைகள் பாட்டறாப்புன வாயிலே. (சு)

## 211. திருப்புன்கூர்:

[சோ; மூ; சிவலோகநாதர் - சொக்கநாயகியம்மை.]

வைத்தீசுரன் கோயில் [207] ரெயில்வே ஸ்டேஷனுக்கு மேற்கு 3-மைல்.

திருநாளைப்போவார் (நந்தனார்) நேரே தரிசிக்கும் பொருட்டு, ஸ்வாமி தமக்கு முன்னிருந்த நந்திதேவரைச் சற்று விலகி யிருக்கும் படிச் செய்தருளிய ஸ்தலம். நந்தனாருடைய சிலை யுருவம் வெளிப் பிராகாரத்திற் கோபுரத்துக்கு அருகில் இருக்கின்றது. கையிற் கஞ்சிக் கலசமும் மண் வெட்டியும் இருக்கின்றன. புங்கமரம் ஸ்தல விருக்ஷமாதலால் "காஞ்சாரண்யம்" என்று தலத்துக்குப் பெயர். இவ்விருக்ஷம் வெளிப் பிரகாரத்திலும், கோயிலுக்குப் பின்புறத்தில் திருக்குளமும் இருக்கின்றன.

சுந்தரமூர்த்தி நாயனாரும், ஏயர்கோன் கலிக்காம நாயனாரும் நண்புள்ளவர்களான பின்பு, இருவருமாகச் சென்று வணங்கிய ஸ்தலம். கலிக்காம நாயனார் அநேகந் திருப்பணிகள் செய்த ஸ்தலம். அவர் பொருட்டுச் சிவபெருமான் ஈராறுவேலி இரு முறை கொண்டு, மழையின்றி உயிர்கள் வருந்திய காலத்து, மழை பெய்வித்து உலகை உய்வித்த ஸ்தலம்.* இவ்வுண்மை இத்தலத்துத் தேவாரப் பதிகத்தில் "வையக முற்றும்" என்னும் இரண்டாவது செய்யுளானும், "ஏத நன்னில மீராறு வேலி யேயர்கோன்" என மூன்றாஞ் செய்யுளில் உள்ள அடைமொழியானும், கோயிற்றிருப் பண்ணியர் விருத்தத்தில்,

பொன்னம் பலத்துறை புண்ணிய னென்பர் புயன்மறந்த
கன்னன்மை தீரப் புனிற்றுக் கலிக்காமற் கன்று புன்கூர்
மன்னு மழைபொழிந் தீரறு வேலிகொண் டாங்கவற்கே
பின்னும் பிழைதவிர்த் தீரறு வேலிகொள் பிஞ்ஞகனே.—

என நம்பியாண்டார் நம்பி கூறுதலானும் நன்கு விளங்கும்.

கலிக்காமநாயனார் ஊராகிய திருப்பெருமங்கலம் திருப்புன்கூருக்குச் சமீபத்தி லிருக்கின்றது.

ஸ்தலபுராணம் அச்சிடப்பட்டுள்ளது.

பூந்தி நின்ற வினைக ளவைபோகச்
சிந்தி நெஞ்சே சிவனார் திருப்புன்கூர்
அந்த மில்லா வடிக ளவர்போலும்
கந்த மல்கு கமழ்புன் சடையாரே. (ச)

பிறவாதே தோன்றிய பெம்மான் றன்னைப்
பேணாதா ரவர் தம்மைப் பேணாதானைத்
துறவாதே கட்டறுத்த சோதி யானைத்
தூநெறிக்குந் தூநெறியாய் நின்றான் றன்னைத்
திறமாய வெத்திசையுந் தானே யாகித்
திருப்புன்கூர் மேவிய சிவ லோகனை
நிறமா மொளியானை நீடூ ரானை
நீதனே னென்னேநா னினையா வாறே. (அ)

* வையக முற்று மாமழை மறந்து
வயலில் நீரிலை மாநிலந் தருகோம்
உய்யக் கொள்கமற் றெங்களை யென்ன
வொளிகொள் வெண்முகி லாய்ப்பரந் தெங்கும்
பெய்யு மாமழைப் பெருவெள்ளந் தவிர்த்துப்
பெயர்த்தும் பன்னிரு வேலிகொண் டருளுஞ்
செய்கை கண்டுநின் றிருவடி யடைந்தேன்
செழும்பொ ழிற்றிருப் புன்கூரு ளானே. (கூ)

## 212. திருப்பூந்துருத்தி :

[சோ ; அ ; புஷ்பவனநாதர் – அழகார்ந்த நாயகி.]

தஞ்சாவூருக்கு வடக்கிலுள்ள திருக்கண்டியூருக்கு [68] மேற்கு 2–மைல். இதற்கு வடக்கு 1-மைலில் திருநெய்த்தானம் [174] இருக்கின்றது.

சோழராஜா ருத்திரனை வைத்துப் பூஜிக்கச் செய்ததனால் திருப்பூந்துருத்தி என்று பெயர்வந்த தென்பர். பட்டீச்சரத்திற் போல நந்திகள் விலகியிருக்கின்றன; திருஞான சம்பந்தருக்காக விலகினவாம். அப்பர் ஸ்வாமிகள் ஒரு திருமடங் கட்டுவித்துப் பல வகைத் திருத்தாண்டகங்களும் திரு அங்கமாலை முதலிய திருப் பதிகங்களும் பாடிக்கொண்டிருந்த ஸ்தலம். திருஞானசம்பந்த ஸ்வாமிகள், பாண்டிநாடு சென்று சமணரை வென்று திரும்பி வரும்பொழுது, அப்பர்ஸ்வாமிகள் இங்கிருத்தலைக் கேள்வியுற்று, அவருடன் சிலகாலம் இருந்தருளிய திருப்பதி. அப்பர்ஸ்வாமிகள் மடம் இடிந்து கிடக்கின்றது. தேவேந்திரனும் காசிபரும் பூஜித்த ஸ்தலம். சப்த ஸ்தானங்களில் ஆறாவது ஸ்தானம்.

அருகடை மாலையுந் தானுடை யானழ காலமைந்த
உருவுடை மங்கையுந் தன்னொரு பாலுல காயுநின்றான்
பொருபடை வேலினன் வில்லினன் பூந்துருத் தியுறையும்
திருவுடைத் தேச மதியனை யானடி போற்றுவதே. (அ)

## 213. திருப்பூவணம்:

[பா; ஞூ; பூவணநாதர்-மின்னனையாளம்மை; வைகை நதி; பலாவிருக்ஷம்.]

ரெயில்வே ஸ்டேஷன். மதுரைக்குக் கிழக்கு 12-மைல். பொன்னனையாள் என்னுந் தாசிக்காக ஸ்வாமி சித்தராயெழுந்தருளி வந்து, இரசவாதஞ் செய்து கொடுத்த பொன்னைக்கொண்டு, அவள் ஸ்வாமியின் திருவுருவஞ் செய்வித்து மகிழ்ந்த ஸ்தலம்.

தவசித்த ரிரதவாதஞ் செய்து சிவ னுருவங்கண்ட வெழினகரும்—
திருவிளை-அருச்சனை-௩௨.

'தென்னர் சேரர் சோழர்' ஆகிய தமிழ்நாட்டு மூவேந்தர்கள் பூஜித்து வணங்கின ஸ்தலம்*.

பிரமன் பூஜித்த ஸ்தலம்.

"........... .........நான் மறையோன் கழலே
சென்று பேணி யேத்த நின்ற தேவர் பிரானிடமாம்"

என்பது தேவாரம்.

கோயிலிற் கொடுங்கைகள் திருப்பெருந்துறையிற் போலச் செய்யப்பட்டிருக்கின்றன. நடராஜர் — சிலா விக்ரகம்.

கந்தசாமிப் புலவரியற்றிய திருப்பூவணப் புராணம் அச்சிடப் பட்டுள்ளது.

திருப்பூவணத்துக்கு வடகிழக்கு 10-மைலில் திருவாதவூர் இருக்கின்றது. அது மதுரையிலிருந்து 14-மைல்.

*அறையார் புனலு மாமலரு மாடர வார்சடைமேற்
குறையார் மதியஞ் சூடி மாதோர் கூறுடை யானிடமா
முறையால் முடிசேர் தென்னர் சேரர் சோழர்க டாம்வணங்குந்
திறையா ரொளிசேர் செம்மை யோங்குந் தென் றிருப் பூவணமே. (ச)

வடியேறு திரிசூலந் தோன்றுந் தோன்றும்
வளர்சடைமே லிளமதியந் தோன்றுந் தோன்றும்
கடியேறு கமழ்கொன்றைக் கண்ணி தோன்றுங்
காதில்வெண் குழைதோடு கலந்து தோன்றும்
இடியேறு களிற்றுரிவைப் போர்வை தோன்றும்
எழில்திகழுந் திருமுடியு மிலங்கித் தோன்றும்
பொடியேறு திருமேனி பொலிந்து தோன்றும்
பொழில்திகழும் பூவணத்தெம் புநித னூர்க்கே. (அ)

மின்னனை யாள்திரு மேனி விளங்க வொர்
தன்னமர் பாகம தாகிய சங்கரன்
முன்னினை யார்புர மூன்றெரி யூட்டிய
பொன்னனை யானுறை பூவண மீதோ. (ரு)

**214.** திருப்பூவனூர் : [சோ ; அ ; புஷ்பவனேசுரர் – கற்பகவல்லி.]

நீடாமங்கலம் ரெயில்வே ஸ்டேஷனுக்குத் தென்மேற்கு 2-மைல். மன்னார்குடிக்குப் போகும் வழி. பாமணி ஆற்றின் மேல்கரை.

சுகமுநி முதலாயினோர் புஷ்பவனம் வைத்து ஸ்வாமியைப் பூஜித்து முத்திபெற்ற ஸ்தலம்.

ஆவின் மேவிய வைந்தமர்ந் தாடுவான்
தூவெண் ணீறு துதைந்தசெம் மேனியான்
மேவ நூல்விரி வெண்ணியின் றென்கரைப்
பூவ னூர்புகு வார்வினை போகுமே. (அ)

**215.** பெண்ணாகடம் : திருக்கடந்தைநகர்.

[நடு ; ச, அ ; சுடர்க்கொழுந்தீசுரர் - கடந்தை நாயகி ]

ரெயில்வே ஸ்டேஷன். விருத்தாசலத்துக்குத் தென்மேற்கு 11-மைல்.

தேவகன்னியரும் காமதேநுவும் வெள்ளையானையும் பூஜித்த படியால் இப் பெயர் வந்தது. இந்தத் தலத்திலுள்ள ஆலயத்துக்குத் தூங்கானை மாடம் என்று பெயர். கலிக்கம்ப நாயனாருடைய ஸ்தலம். அப்பர் ஸ்வாமிகள் திருப்பதிகம் பாடித் தம்முடைய தோளின்மேற் சூலக்குறியும் இடபக்குறியும் பொறித்தருளப் பெற்ற ஸ்தலம்.*

ஒடுங்கும் பிணிபிறவி கேடென் றிவை
யுடைத்தாய வாழ்க்கை யொழியத்தவம்
அடங்கும் இடங்கருதி நின்றீரெல்லாம்
அடிக ளடிநிழற்கீ ழாளாம் வண்ணம்
கிடங்கும் மதிலுஞ் சுலாவி யெங்குங்
கெழுமனைக டோறு மறையின்னொலி
தொடங்குங் கடந்தைத் தடங்கோயில் சேர்
தூங்கானை மாடந் தொழுமின்களே. (ச)

*பொன்னார் திருவடிக் கொன்றுண்டு விண்ணப்பம் போற்றிசெய்யும்
என்னாவி காப்பதற் கிச்சையுண் டேலிருங் கூற்றகல
மின்னாரு மூவிலைச் சூலமென் மேற்பொறி மேவுகொண்டல்
துன்னார் கடந்தையுட் டூங்கானை மாடச் சுடர்க்கொழுந்தே. (அ)

## 216. திருப்பெரும்புலியூர் :

[சோ ; ச ; வியாக்ரபுரீசுரர் - சௌந்தரநாயகி ; காவிரி நதி.]

திருவையாற்றுக்கு [50] மேற்கு 2½-மைல். வழியில் 1-மைலில் திருநெய்த்தானம் [174] இருக்கின்றது.

வியாக்கிரபாதர் பூஜித்த ஸ்தலம். ஸ்வாமி யிருக்கும் இடத்திலுள்ள கற்கள் தாமரைபோல் வட்டமாய்ப் போடப்பட்டிருக்கின்றன.

மண்ணுமோர் பாக முடையார் மாலுமோர் பாக முடையார்
விண்ணுமோர் பாக முடையார் வேத முடைய விமலர்
கண்ணுமோர் பாக முடையார் கங்கை சடையிற் கரந்தார்
பெண்ணுமோர் பாக முடையார் பெரும்புலி யூர்பிரி யாரே. (ச)

## 217. பெருவேளூர் என்பது காட்டூர் ஐயன்பேட்டை.

[சோ; ச-அ; பிரியா ஈசுரர் – மின்னனையாளம்மை.]

தலையாலங்காட்டுக்குக் [146] கிழக்கு 3-மைல். திருவாரூருக்கு [23] மேற்கு 7-மைலிலுள்ள திருக்கரவீரம் [71] ஆகிய கரையபுரத்துக்கு வடமேற்கு 1½-மைல்.

கௌதமருஷி முதலியோர் பூஜித்த ஸ்தலம்.

கருமானின் உரியுடையர் கரிகாடர் இமவானார்
மருமானார் இவரென்று மடவாளோ டுடனாவர்
பொருமான விடையூர்வ துடையார்வெண் பொடிப்பூசும்
பெருமானார் பிஞ்ஞகனார் பெருவேளூர் பிரியாரே. (சு)

விரிவிலா அறிவினார்கள் வேறொரு சமயஞ் செய்து
வெரிவினாற் சொன்னா ரேனு மெம்பிராற் கேற்ற தாகும்
பரிவினாற் பெரியோ ரேத்தும் பெருவேளூர் பற்றினானை
மருவி நான் வாழ்த்தி யுய்யும் வகையது நினைக்கின் றேனே. (அ)

**218.** பேணுபெருந்துறை :

[சோ ; ச ; சிவாநந்தேசுரர் – மலையரசியம்மை ]

கும்பகோணத்துக்குத் [97] தென்கிழக்கு சுமார் 7-மைல். திருநறையூருக்குக் [161] கிழக்கு 1-மைல்.

சிவசத்தி, பிரமன் முதலியோர் பூஜித்த ஸ்தலம். சுப்பிரமணிய ஸ்வாமி மூகைத்தன்மை நீங்கப்பெற்ற ஸ்தலம். திருக்கடம்பந்துறையி லும் [61] இந்த ஐதிஹ்யம் உண்டு. மங்கள தீர்த்தமும் வன்னி விருக்ஷமும் கோயிலுக்கெதிரி லிருக்கின்றன.

"அரிசி லுரிஞ்சு கரைமேல்", "தண்ணரிசில் புடைசூழ்ந்து"— என்பன சம்பந்த ஸ்வாமிகள் திருவாக்கு.

பைம்மா நாகம் பன்மலர்க் கொன்றை
பன்றிவெண் கொம்பொன்று பூண்டு
செம்மாந் தையம் பெய்கென்று சொல்லிச்
செய்தொழில் பேணி யோர்செல்வ
ரம்மா னோக்கி யந்தளிர் மேனி
யரிவையோர் பாக மமர்ந்த
பெம்மா னல்கிய தொல்புக ழாளர்
பேணு பெருந்துறை யாரே. (சு)

**219.** பேரெயில்: இஃது ஓகைப்பேரையூர் என வழங்குகின்றது.

[சோ ; அ ; ஜகதீசுரர் - ஜகந்நாயகி - அக்கினி தீர்த்தம்.]

திருவாரூருக்கு [23] மேற்கிலுள்ள குழிக்கரை ரெயில்வே ஸ்டேஷனுக்குத் தெற்கு வயல் வழியாய் 3-மைல்.

நாட்டியத்தான்குடி [166] ரெயில்வே ஸ்டேஷனி லிறங்கி, மேற்கே 5-மைல் சென்று, வடபாதிமங்கலம் என்னும் ஊரைச்

சேர்ந்து, அங்கிருந்து வடக்கே ஒருமைல் சென்றாலும் இந்தத் தலத்தை அடையலாம்.

ஊருக்குத் தெற்கே ½-மைலில் வெள்ளையாறு ஓடுகின்றது. கோயிலுக்கெதிரிற் கீழ்ப்பக்கத்தில் அக்கினி தீர்த்தம் இருக்கின்றது. கோயில் சிறிது. சபாபதி விக்கிரகம் வெகு அழகா யிருக்கின்றது.

சொரிவிப் பார்மழை சூழ்கதிர்த் திங்களை
விரிவிப் பார்வெயிற் பட்ட விளங்கொளி
எரிவிப் பார்தணிப் பாரைப் பொருளையும்
பிரிவிப் பாரவர் பேரெயி லாளரே. (அ)

**220**. திருப்பைஞ்ஞீலி: [சோ; மூ; நீலகண்டர் - விசாலாக்ஷியம்மை.]

திரிசிராப்பள்ளிக்கு [132] வடக்கு 4-மைல் சென்று, அப்பால் வடமேற்கே 7-மைல் சென்றால் இந்தத் தலத்தை அடையலாம். பிக்ஷாண்டார் கோயில் ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து நொச்சியம் வழியாகப் போகலாம். பசியினால் வருத்தமுற்று வந்த அப்பர் ஸ்வாமிகளுக்குச் சிவபெருமான் கட்டமுது கொடுத்தருளிய தடாகமுந் தோட்டமும் இந்தத் தலத்துக்குத் தெற்கே ¾-மைலி லிருக்கின்றன.

அம்மன் சந்நிதிகள் இரண்டு; ஒன்று பழைய அம்மன் சந்நிதி.

பைஞ் ஞீலி என்றாற் பசிய வாழை என்று பொருள். இவ் வாழை கோயிலி லிருக்கின்றது. இதை ஸ்வாமிக்குத் தான் உபயோகிக்கிறார்கள்.

மதுரை மெய்ப்பாத புராணிகர் திருப்பைஞ்ஞீலிப் புராணம் இயற்றி யுள்ளனர்.

ஆரிடம் பாடில ரடிகள் காடலால்
ஓரிடங் குறைவில ருடையர் கோவணம்
நீரிடஞ் சடைவிடை யூர்தி நித்தலும்
பாரிடம் பணிசெயும் பயில்பைஞ் ஞீலியே. (௪)

ஒன்றி மாலும் பிரமனுந் தம்மிலே
நின்ற சூழ லறிவரி யானிடம்
சென்று பாரிட மேத்து பைஞ் ஞீலியுள்
என்று மேவி யிருந்த அடிகளே. (அ)

காரு லாவிய நஞ்சை யுண்டிருள் கண்டர் வெண்டலை யோடுகொண்
டூரெ லாந்திரிந் தென்செய் வீர்பலி யோரி டத்திலே கொள்ளுமீர்
பாரெ லாம்பணிந் தும்மை யேபர விப்பணி யும்பைஞ் ஞீலியீர்
ஆர மாவது நாகமோ சொலும் ஆர ணீயவி டங்கரே. (க)

## 221. திருமங்கலக்குடி :

[சோ ; ச - அ ; பிராணவரதேசுரர் – மங்களநாயகி ; காவிரிநதி.]

திருவிடைமருதூருக்கு [34] வடகிழக்கு 3½-மைல். தென் குரங்காடுதுறை [102] ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து 1-மைல்.

மாகாளி, சூரியன், விஷ்ணு, பிரமன், அகஸ்தியர் இவர்கள் பூஜித்த ஸ்தலம். *

கோயிலுக் கெதிரில் திருக்குள மிருக்கின்றது.

அரசனது தண்டலாளர் ஒருவர், அரசனது பணத்தைக் கொண்டு ஆலயத் திருப்பணி செய்ததை அரச னறிந்து, அவரை அழைப்பிக்க, சிவபக்தரான அவர் அரசனது ஆக்ஞைக்குப் பயந்து உயிர் துறந்தனர் ; அவருடைய சரீரத்தைத் திருமங்கலக்குடிக்கு அப்பாற் கொண்டு போகும்படி அரசன் கட்டளையிட்டான் ; அந்த சரீரம் திருவியலூருக்கு வர, அத் தண்டலாளருடைய மனைவியார் வேண்டிக்கொள்ளத் திருமங்கலக்குடியில் வீற்றிருந்தருளும் மங்கள நாயகியாரின் திருவருளால் அவர் உயிர்த்தெழுந்தார்.

சீரி ஞார்மணி யும்மகில் சந்துஞ் செறிவரை
வாரி நீர்வரு பொன்னி வடமங்க லக்குடி
நீரின் மாமுநி வன்னெடுங் கைகொடு நீர்தனைப்
பூரித் தாட்டி யர்ச்சிக்க விருந்த புராணனே. (ச)

*மங்க லக்குடி யீசனை மாகாளி
வெங்கதிர்ச் செல்வன் விண்ணொடு மண்ணுநேர்
சங்கு சக்கிர தாரி சதுமுக
னங்க கத்திய னும்மர்ச்சித் தாரன்றே. (அ)

## 222. திருமணஞ்சேரி :

[சோ ; ச-அ ; அருள்வள்ளலுயகேசுரர்-யாழின்மென்மொழி யம்மை.]

எதிர்கொள்பாடிக்குக் [46] கிழக்கு ¼-மைல். மாயூரத்துக் [224] கடுத்த குற்றாலம் [150] ரெயில்வே ஸ்டேஷனி லிறங்கி வடகிழக்கு 3-மைல் சென்று திருவேள்விக்குடி [271] சேர்ந்து, அப்பாலும் 1¾-மைல் செல்லல் வேண்டும்.

மன்மதன் பூஜித்த ஸ்தலம். வைசிய குலத்திற் பிறந்த நங்கை நாத்திக ளிருவர் ஒருங்கே கருப்பமுற்று, தமக்குப் பிறக்கும் குழந்தைகளை ஒருவர்க்கொருவர் சம்பந்தஞ் செய்து கொள்ளுகிற தென்று உறுதிசெய்துகொண்டார்கள். பின்பு ஒருத்தி பெற்றது

ஆமையாயிருந்தபடியால் மற்றவள் தன் பெண்ணைக் கொடேன் என்று சொன்னாள். அந்த ஆமை சிவபெருமானைப் பூஜித்துத் தான் குறித்த பெண்ணை இத்தலத்தில் மணஞ் செய்யப் பெற்று, ஆமை யுரு நீங்கி மாநுட வுருவம் பெற்றது.

அயிலாரு மம்பத னாற்புர மூன்றெய்து
குயிலாரு மென்மொழி யாளொரு கூறாகி
மயிலாரு மல்கிய சோலை மணஞ்சேரிப்
பயில்வானைப் பற்றிநின் றார்க்கில்லை பாவமே. (ச)

பட்ட நெற்றியர் பாய்புலித் தோலினர்
நட்ட நின்று நவில்பவர் நாடொறும்
சிட்டர் வாழ்திரு வார்மணஞ் சேரியெம்
வட்ட வார்சடை யார்வண்ணம் வாழ்த்துமே. (அ)

**223.** திருமண்ணிப்படிக்கரை என்பது இலுப்பைப்பட்டு.

[சோ ; சு ; நீலகண்டர் – அமிர்தகரவல்லியம்மை.]

வைத்தீசுரன்கோயில் [207] ரெயில்வே ஸ்டேஷனுக்கு மேற்கு 6-மைல். வழியில் 2-மைலில் திருப்புன்கூரும் [211] அப்பால் 3-மைலில் திருவாளொளி புற்றூரும் [253] இருக்கின்றன.

மீநாக்ஷிசுந்தரம் பிள்ளையவர்கள் பாடிய ஸ்தலபுராணம் அச்சிடப் பட்டுள்ளது.

சிவபெருமான் ஆலகால விஷத்தை யருந்தியபொழுது, உமா தேவியார் அவருடைய கண்டத்தைப் பிடிக்க, அவர் அவ்விஷக் கறையைத் தமது கண்டத்திற் காட்டியருளிய ஸ்தலம்.

முன்னவ னெங்கள் பிரான் முதல் காண்பரி தாய பிரான்
சென்னியி லெங்கள் பிரான் திரு நீலமி டற்றெம் பிரான்
மன்னிய எங்கள் பிரான் மறை நான்குங்கல் லால்நிழற் கீழ்ப்
பன்னிய எங்கள் பிரான் பழ மண்ணிப் படிக்கரையே. (சு)

**224.** திருமயிலாடுதுறை என்பது மாயூரம்.

[சோ ; ச - அ ; மாயூரநாதேசுரர் – அபயாம்பிகை ; காவிரிநதி.]

ரெயில்வே ஸ்டேஷன். காவிரியின் தென்கரை.

பார்வதிதேவியார் மயிலாயிருந்து சிவபெருமானைப் பூஜித்த ஸ்தலம். இந்த க்ஷேத்திரத்திற் காவிரிநதியில் துலாமாசமாகிய ஐப்பசி மாதத்திற் செய்யும் ஸ்நாநம் விசேஷம்.

ஸ்தல விநாயகர் - முக்குறுணிப் பிள்ளையார். கோயிலுக்குட் கோபுரத் தருகில் திருக்குளமும், வடவண்டை பிராகாரத்திற் 'பழையகோயில்' எனப்படும் பிரமபுரீசர் சந்நிதியு மிருக்கின்றன.

"மதிநுதல் இமயச் செல்வி மஞ்ஞையாய் வழிபட் டேத்து
மிது துலாப் பொன்னித் தானம்"

—திருவிளை - அருச்சனை - கஅ.

மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை யவர்கள் இயற்றிய ஸ்தலபுராணம் அச்சிடப்பட்டுள்ளது.

மாயூரத்துக்கு மேற்கு 3—மைலில் "மூவலூர்" என்னும் வைப்புத்தலமும், வழியில் இரண்டாவது மைலில் 'சித்தர் காடு' என்னுந் தலத்தில் திருச்செந்தூ ரகவல் பாடிய "திருச்சிற்றம்பல நாடிகள்" சமாதியு மிருக்கின்றன. மாயூரங் கோயிலுக்கு நேர் வடக்கு 1—மைலிற் காவிரிக்கு வடபுறத்துள்ள "வள்ளலார் கோயில்" ஆலயத்திலுள்ள "தக்ஷிணா மூர்த்தி" சந்நிதி ஐப்பசி அமாவாசை யிலும் குருவாரங்களிலும் மிகவுங் கொண்டாடப்படுகின்றது.

கரவின்றி நன் மாமலர் கொண்டே
இரவும் பகலுந் தொழு வார்கள்
சிரமொன் றியசெஞ் சடையான் வாழ்
வரமா மயிலாடு துறையே. (ச)

வெஞ்சி னக்கடுங் காலன் விரைகிலான்
அஞ்சி றப்பும் பிறப்பு மறுக்கலாம்
மஞ்சன் மாமயி லாடு துறை யுறை
அஞ்சொ லாளுமை பங்க னருளிலே. (அ)

## 225. மயிலாப்பூர் :

[தொ ; ச ; கபாலீசுரர் — கற்பகவல்லியம்மை ; புன்னை விருக்ஷம்.]

சென்னப்பட்டணத்துக்குத் தெற்கு 4—மைல்.

பார்வதி தேவியார் மயிலாயிருந்து பூஜித்த ஸ்தலம். இங்கு வாயிலார் நாயனர் திருவவதாரஞ் செய்தனர். திருஞான சம்பந்த ஸ்வாமிகள் பூம்பாவைத் திருப்பதிகம்பாடி, சிவநேச செட்டியாருடைய அருமைப் புதல்வி பூம்பாவை அரவு கடித்து இறந்து தகனமான எலும்பைப் பெண்ணுருவாக்கி யருளின ஸ்தலம்.*

திருக்குறளாசிரியர் தெய்வப் புலமைத் திருவள்ளுவநாயனர் எழுந்தருளியிருந்த ஸ்தலம்.

மேற்குப் பார்த்த சந்நிதி.

கோயிலுள் சுப்பிரமணிய ஸ்வாமி சந்நிதி தெற்குப் பிராகாரத்திலும், வாயிலார் நாயனர் சந்நிதி நிருதி மூலையிலும் உள்ளன. திருக்குளம் கோயிலுக்கு மேற்கிலிருக்கின்றது. மேற்கு வாயிலுக்குச் சற்று வடபால் சம்பந்தமூர்த்தி, குடத்தின்மேற் பூம்பாவை யிவர்கள் உருவமும், வடக்குப் பிராகாரத்தில் புன்னை விருக்ஷமும், மயிலம்மை பூஜிக்கும் இலிங்க மூர்த்தியும், கிழக்குப் பிராகாரத்தில் விநாயகர் சந்நிதியு மிருக்கின்றன. பங்குனி மாதத்தில் 63–நாயன்மாருடைய உற்சவம் பிரபலமாய் நடக்கின்றது.

திரு 'மயிலைப் புராணம்' அச்சிடப்பட்டிருக்கின்றது.

* மட்டிட்ட புன்னையங் கானன் மடமயிலைக்
கட்டிட்டங் கொண்டான் கபாலீச் சுரமமர்ந்தான்
ஒட்டிட்ட பண்பி னுருத்திர பல்கணத்தார்க்
கட்டிட்டல் காணதே போதியோ பூம்பாவாய். (ச)

## 226. திருமயேந்திரப்பள்ளி :

[சோ ; ச ; திருமேனியழகர் – வடிவாம்பிகை.]

சிதம்பரத்துக்குத் [122] தெற்கிலுள்ள கொள்ளிடம் ரெயில்வே ஸ்டேஷனுக்குக் கிழக்கு 3-மைலிலுள்ள ஆச்சாபுரத்துக்கு [159] வடகிழக்கு 4-மைல்.

சந்திரன், சூரியன், பிரமன், இந்திரன் ஆகிய இவர்கள் வழிபட்ட ஸ்தலம்.*

* சந்திரன் கதிரவன் றகுபுக ழயனெடும்
இந்திரன் வழிபட விருந்தவெம் மிறையவன்
மந்திரம் மறைவளர் மயேந்திரப் பள்ளியுள்
அந்தமில் லழகனை யடிபணிந் துய்ம்மினே. (ச)

## 227. திருமருகல் :

[சோ ; ச – அ ; மாணிக்கவண்ணர் – வண்டுவார்குழலம்மை.]

நன்னிலம் ரெயில்வே ஸ்டேஷனுக்குக் கிழக்கு 4–மைலிலுள்ள திருப்புகலூருக்குத் [203] தென்கிழக்கு $3\frac{1}{2}$–மைல். இதற்கு வடகிழக்கு 1-மைலில் திருச்சாத்தமங்கை [129] இருக்கின்றது.

விஷந் தீண்டி யிறந்த செட்டிப் பிள்ளையைத் திருஞான சம்பந்த ஸ்வாமிகள் உயிர்ப்பித்தருளிய ஸ்தலம். அம்மன் சந்நிதிக்கு நேரே, வீதியில், "விஷந்தீர்த்த பிள்ளையார்" சந்நிதியும், பிராகாரத்தில் "மருகலுடையார்"—"சௌந்தர நாயகி" சந்நிதியும் உள்ளன.

சடையா யெனுமால் சரணீ யெனுமால்
விடையா யெனுமால் வெருவா விழுமால்
மடையார் குவளை மலரும் மருகல்
உடையாய் தகுமோ விவளுண் மெலிவே. (௧)

பெருக லாந்தவம் பேதைமை தீரலாம்
திருக லாகிய சிந்தை திருந்தலாம்
பருக லாம்பர மாயதோ ராநந்தம்
மருக லானடி வாழ்த்தி வணங்கவே. (அ)

## 228. திருமழபாடி :

[சோ ; மூ ; வஜ்ரஸ்தம்பேசுரர் - அழகம்மை ; கொள்ளிடநதி; பனைவிருக்ஷம்.]

திருவையாற்றுக்கு [50] மேற்கு 1-மைலிலுள்ள திருநெய்த்தானத்துக்கு [174] வடமேற்கு 2–மைல். இடையிற் கொள்ளிடநதி ஓடுகின்றது.

திருமாலும்*, தேவேந்திரனும் பூஜித்த ஸ்தலம்.

இந்தத் தலத்திற்குப் பங்குனி மாதத்தில் திருவையாற்றிலிருந்து ஐயாற்றப்பரும், நந்திதேவரும் வருகின்றார்கள். நந்திதேவருக்குத் திருக்கலியாணம் நடக்கின்றது. கணபதி-சுந்தரகணபதி. சோமாஸ்கந்த மூர்த்தியின் உருவம் சிலையி லிருக்கின்றது.

பாலனா ராருயிர் பாங்கினா லுணவரும்
காலனா ருயிர்செகக் காலினாற் சாடினான்
சேலினார் கண்ணினாள் தன்னொடுஞ் சேர்விடம்
மாலினார் வழிபடு மாமழ பாடியே. (௧)

அலையடுத்த பெருங்கடனஞ் சமுதா வுண்டு
அமரர்கடந் தலைகாத்த ஐயர் செம்பொற்
சிலையெடுத்து மாநாக நெருப்புக் கோத்துத்
திரிபுரங்க ளெரிசெய்த செல்வர் போலும்

நிலையடுத்த பசும்பொன்னுன் முத்தா னீண்ட
 நிரைவயிரப் பலகையாற் குவையார்த் தூற்ற
மலையடுத்த மழபாடி வயிரத் தூணே
 யென்றென்றே நானரற்றி நைகின் றேனே. (அ)

பொன்னார் மேனியனே புலித் தோலை யரைக் கசைத்து
மின்னார் செஞ்சடைமேல் மிளிர் கொன்றை யணிந்தவனே
மன்னே மாமணியே மழ பாடியுள் மாணிக்கமே
அன்னே யுன்னை யல்லால் இனி யாரை நினைக்கேனே. (சு)

**229.** திருமறைக்காடு என்பது வேதாரணியம்.

[சோ ; மூ ; மறைக்காட்டீசர்-யாழைப் பழித்தமொழி யம்மை.]

ரெயில்வே ஸ்டேஷன். திருத்தருப்பூண்டி ஜங்க்ஷனுக்குத் தென்கிழக்கு 22-மைல்.

சப்த விடங்க ஸ்தலங்களி லொன்று. தியாகராஜருக் கெதிரிற் சுந்தரர் பரவையாருடன் இருக்கின்றார். வேதங்கள் பூஜித்துத்* திருக் காப்புச்செய்த கதவைத் திருநாவுக்கரசு ஸ்வாமிகளும் திருஞான சம்பந்தமூர்த்தி ஸ்வாமிகளும் முறையே திறக்கவும் அடைக்கவும் பாடியருளிய ஸ்தலம்.

'கண்ணி னுமைக் காணக் கதவினைத்
 திண்ண மாகத் திறந்தருள் செய்ம்மினே.'

'இதுநன்கிறை வைத்தருள் செய்க எனக்குன்
 கதவந்திருக் காப்புக்கொள் ளுங்கருத் தாலே'.—

என்பன தேவாரம்.

சேரமான் பெருமாணுயனார் சுந்தரமூர்த்தி நாயனாருடன் சென்று தரிசநஞ் செய்த ஸ்தலம். ஸ்வாமியும் அம்மையும் கலியாண கோலமாய் நின்றருளுகின்றார்கள்.

"மலையார்த மகளொடு மாதேவன் சேரு மறைக்காடு"

தேவாரம் - திரு அடைவு – திருத்தாண்டகம்.

ஸ்தல விநாயகர் – சிந்தாமணி கணபதி. வெளிப் பிராகாரத்தில் மேல்பால் வீரஹத்தி விநாயகர் மேற்கு நோக்கி வீற்றிருக்கின்றார்.

"திருமறைக் காட்டினில் இராமர் பின்னே தொடர்ந்து
 வரும்வீர கத்திதீர்த் தருள்செயும் விநாயகன்"

—க்ஷேத்திரக்கோவை - பிள்ளைத் தமிழ் - வாரானை - சு.

"வேதாரணிய விளக்கழகு" என ஓர் உலகவழக் குள்ளது. இந்தத் தலத்தில் துர்க்கை யம்மை சந்நிதியும் விசேஷம்.

மேற்குப் பிராகாரத்திற் 'காக்ஷி கொடுத்த நாயகர்' அல்லது "மோக்ஷ துவாரேசுரர்" என்ற செப்பு விக்கிரகமூர்த்திக்கு நீண்ட சட்டையும் தலைக்குக் குட்டையும் தரித்திருக்கின்றது. கோயில் பெரிது. சந்நிதிக் கெதிரிலிருக்குங் கடலுக்கு "வேததீர்த்தம்" என்று பெயர்.

ஆலயத்துள்ள தீப நெய்யை ஓர் எலி வந்து உண்ணும்பொழுது சுடர் தன் மூக்கிற் படக் கனன்று தூண்டத் தீபம் பிரகாசமா யெரிந்தது. தீபம் மங்குஞ் சமயத்து எலி யிப்படிச் செய்ததால், ஸ்வாமி அது மூவுலகும் ஆளும்படிப் பேரருள்புரிந்தார். அவ்வெலி மறுபிறப்பில் மாவலிச் சக்கிரவர்த்தியாகி அரசாண்டது. இதனை அப்பர் ஸ்வாமிகள் திருக்குறுக்கைக்கு அருளிச்செய்த திரு நேரிசையில் எட்டாவது செய்யுளில்,

நிறைமறைக் காடு தன்னி னீண்டெரி தீபந் தன்னைக்
கறைநிறத் தெலிதன் மூக்குச் சுட்டிடக் கனன்று தூண்ட
நிறைகடல் மண்ணும் விண்ணும் நீண்டவா னுலகு மெல்லாங்
குறைவறக் கொடுப்பர் போலுங் குறுக்கைவீ ரட்ட னாரே—

என்று சிறப்பித்திருக்கின்றார்.

மறையடி வழுத்திய மறைவனத் தொருநாள்
மணிச்சுடர் நறுநெய் கவர்மதிக் கருப்பைக்
கிருவகை யெழுனூர் திருவுல கனைத்துங்
கொடுத்தவன்.— என்பது கல்லாடம்—96.

அகோரமுனிவரும் பரஞ்சோதியாரும் பாடிய புராணங்கள் இரண்டு அச்சிடப்பட்டுள்ளன.

*பலகாலங்கள் வேதங்கள் பாதங்கள் போற்றி
மலரால்வழி பாடுசெய் மாமறைக் காடா
உலகேழுடை யாய்கடை தோறுமுன் னென்கொல்
தலைசேர்பலி கொண்டதி லுண்டது தானே. (ச)

தூண்டு சுடரனைய சோதி கண்டாய்
தொல்லமரர் சூளா மணிதான் கண்டாய்
காண்டற் கரிய கடவுள் கண்டாய்
கருதுவார்க் காற்ற எளியான் கண்டாய்
வேண்டுவார் வேண்டுவதே யீவான் கண்டாய்
மெய்ந்நெறி கண்டாய் விரத மெல்லாம்
மாண்ட மனத்தார் மனத்தான் கண்டாய்
மறைக்காட் டுறையு மணாளன் தானே. (அ)

யாழைப்பழித் தன்னமொழி மங்கையொரு பங்கன்
பேழைச்சடை முடிமேற்பிறை வைத்தானிடம் பேணில்
தாழைப்பொழி லூடேசென்று பூழைத்தலை நுழைந்து
வாழைக்கனி கூழைக்குரங் குண்ணும்மறைக் காடே. (க)

**230.** மாகறல் : [தொ ; ச ; அகத்தீசுரர் – திரிபுவனேஸ்வரி.]

காஞ்சீபுரத்துக்குத் [56] தெற்கு 10-மைல். வழியில் வேகவதி யாற்றையும் பாலாற்றையுங் கடக்கவேண்டும்.

இந்த ஸ்தலத்துக்குத் தெற்கு ½-மைலிற் சேயாறு ஓடுகின்றது. அதன் தென்கரையிற் கடம்பர் கோயிலும், அப்பால் 7-மைலில் உத்திரன்மேரூரும் இருக்கின்றன. விநாயகர் பொய்யா விநாயகர். தேவேந்திரன் பூஜித்த ஸ்தலம்.

ராஜேந்திர சோழனுக்கு ஸ்வாமி பொன்னுடும்பாகத் தோன்றி, அவன் துரத்துங்கால் ஓடிப் புற்றில் ஒளித்து வெளிப்பட்டருளின ரென்ப. இத்தலத்திற் சோமவார தரிசநம் விசேடம். பிள்ளைவரம் வேண்டுபவர் அங்கப் பிரதக்ஷிணஞ் செய்கிறார்கள். அந்தப் பிராகாரம் நல்ல ஸ்திதியில் இருக்கின்றது. அக்கினி மூலையில் அக்கினி தீர்த்தம் இருக்கின்றது. காஞ்சியிற், 'சர்வ தீர்த்த ஸ்நாநம் சஹஸ்ரேஸ்வர தர்சநம், யமலோகே பயம் நாஸ்தி சிவலோகே நிரந்தரம்' என்பது போல, இங்கும், 'அக்நி தீர்த்த ஸ்நாநம் அகஸ்த்யேஸ்வர தர்சநம் யமலோகே பயம் நாஸ்தி சிவலோகே நிரந்தரம்' என்னும் வழக்குள்ளது.

விங்குவிளை கழனிமிகு கடைசியர்கள் பாடல்விளை யாடலரவ
மங்குலொடு நீள்கொடிகண் மாடமலி நீடுபொழின் மாகறலுளான்
கொங்குவிரி கொன்றையொடு கங்கைவளர் திங்களணி செஞ்சடையினான்
செங்கண்விடை யண்ணலடி சேர்பவர்க டீவினைக டீருமுடனே. (க)

**231.** திருமாணிகுழி :

[நடு ; ச ; மாணிக்க வரதர் - மாணிக்கவல்லி ; கெடிலநதி.]

திருப்பாதிரிப்புலியூர் [199] ரெயில்வே ஸ்டேஷனுக்கு மேற்கே $2\frac{1}{2}$-மைல் சென்று, 'திருவஹீந்திரபுரம்' என்னும் விஷ்ணுக்ஷேத்திரத்துக்குத் தென்புறத்திலிருக்கும் கெபர்மலை யோரமாகக் கொடிவழியே மேற்கு 1-மைல் சென்றால், இந்த ஸ்தலத்தை யடையலாம். வாருகால்பட்டு ரெயில்வே ஸ்டேஷனிலிருந்தும் போகலாம.

_க்ஷிண கங்கை' எனப்படும் கெடில நதியின் தென்கரை. ஸ்வாமி தேவியாருடன் இருப்பதாக ஐதிஹ்யம். எப்பொழுதும் திறையிட்டிருக்கின்றது. திறையில் ஏகாதச ருத்திரர்களுள் பீம ருத்திரரின் உருவம் இருக்கின்றது. இவருக்குத் தான் முதலில் அர்ச்சனை தீபாராதனை முதலிய செய்கின்றார்கள். அதன் பின்பு தான் இலிங்கமூர்த்தியைத் தரிசிக்கலாம்.

வாமனாவதாரஞ் செய்த விஷ்ணு சிவபெருமானைப் பூஜித்த ஸ்தலம்.

" பண்டு வாமனனாய் மண்ணிரந்த செங்கணவன் வழிபட்ட திருமாணிகுழி " பெரியபுராணம் - தடுத்தாட்கொண்ட புராணம்-௯௦.

ஸ்தலபுராண மிருக்கின்றது.

*நித்தநிய மத்தொழில னாகிநெடு மால்குறள னாகிமிகவுஞ்
சித்தமதொ ருக்கிவழி பாடுசெய நின்றசிவ லோகனிடமாங்
கொத்தலர்ம லர்ப்பொழிலி னீடுகுல மஞ்ஞைநட மாடலதுகண்
டொத்தவரி வண்டுகளு லாவியிசை பாடுதவி மாணிகுழியே. (ச)

## 232. திருமாந்துறை.

[சோ ; ச ; ஆம்பிரவனேசுரர் – அழகாலுயர்ந்த அம்மை; மாவிருக்ஷம்.]

திரிசிராப்பள்ளிக்கு [132] வடக்கிலுள்ள திருஆனைக்கா [31] வுக்கு வடகிழக்கு 6-மைல். லால்குடி ரெயில்வே ஸ்டேஷனுக்கு மேற்கு 3-மைல். பிக்ஷாண்டவர் கோயில் ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடகிழக்கு 3-மைல்.

கண்ணுவமுநிவர் பூஜித்த ஸ்தலம்.

இதற்குக் கிழக்கு 6-மைலில் அன்பிலாலந்துறையும் [16], தென் மேற்கு 4-மைலில் திருப்பாற்றுறையும் [202] இருக்கின்றன.

செம்பொ னார்தரு வேங்கையு ஞாழலுஞ் செருந்திசெண் பகமானைக்
கொம்பு மாரமு மாதவி சுரபுனை குருந்தலர் பரந்துந்தி
யம்பொ னேர்வரு காவிரி வடகரை மாந்துறை யுறைகின்ற
எம்பி ரானிமை யோர்தொழு பைங்கழ லேத்துதல் செய்வோமே. (ச)

## 233. திருமாற்பேறு :

[தொ ; ச-அ ; மணிகண்டேசுரர் - அஞ்சனாக்ஷியம்மை.]

காஞ்சீபுரத்துக்கு [56] அடுத்த பள்ளூர் ரெயில்வே ஸ்டேஷனுக்குத் தென்மேற்கு 2½-மைல்.

காஞ்சீபுரத்துக்கு வடமேற்கு 7-மைல்.

ஸம்ஸ்கிருதத்தில் இந்தத் தலத்துக்கு 'ஹரிச்சக்ரபுரம்' என்று பெயர். குபன் என்னும் அரசன்பொருட்டு மகாவிஷ்ணு ததீசி முனிவருடன் போர்செய்யத், தமது சக்கிரம் அம்முனிவருடைய வஜ்ர சரீரத்திற்பட்டு வாய் மடிந்துவிட்டபடியால், வேறு சக்கிரம் பெற யோசித்து, சலந்தரனைக்கொன்ற சக்கிரம் சிவபெருமானிடத்தி லிருப்பதை யறிந்து, அதைப் பெறும் பொருட்டு இந்தத் தலத்துக்கு வந்து, சிவபெருமானைத் தினந்தோறும் ஆயிரந் தாமரை மலர்களைக் கொண்டு அர்ச்சித்து வந்தார். பரமசிவன் அவருடைய பக்தியின் திறத்தைக் காணும்பொருட்டு ஒருநாள் ஒரு மலரை மறைத்தருள, அவர் சஹஸ்ரநாம அர்ச்சனை செய்யும் பொழுது ஒரு திருநாமத்துக் குத் தாமரைமலர் குறைவுபடுதலைக் கண்டு வருந்தி, தமது கண்ணையே யிடந்துசாத்திப் பூஜையை நிறைவேற்றினார். அப்பொழுது பரம சிவன் பிரசந்நமாகி அவருக்குச் 'சுதரிசனம்' என்னும் சக்கிரத்தை யும், கண்ணையிடந்து அர்ச்சித்த காரணத்தினாற் 'பத்மாக்ஷன்' என்னும் பெயரையுங் கொடுத்தருளி, இந்தத் தலத்தில் ஒரு க்ஷணப் பொழுது வதிந்தவர்க்கும் முத்தியளிக்கவேண்டும் என்று அவர் கேட்டுக்கொண்டபடி அநுக்கிரகமுஞ் செய்து மறைந்தருளினார்*. சோமனும் பூஜித்த ஸ்தலம்.

"மன்னி மாலொடு சோமன் பணிசெயு, மன்னு மாற்பேற் றடிகளே". யென்பது சம்பந்த ஸ்வாமிகள் திருவாக்கு.

நந்திகேசுரர் நின்ற திருக்கோலமாய் ஸ்வாமி சந்நிதியில் உட் பிராகாரத்தில் இருக்கின்றார். ஸ்வாமிக்கு எதிரில் விஷ்ணு மூர்த்தி நின்ற திருக்கோலமாய்க் கூப்பிய கரத்துடன் இருக்கின்றார்.

"திருமறு மார்பன் காவற் செயல்பெற அரனைப் பூசித்
திருகா முகிழ்த்து நேர்நின் றேத்திட மிதுவாம்—"

திருவிளை — அருச்சனை-கசு.

திருக்குளம், கோயிலுக்கு வெளியில் கீழைக் கோபுரத்துக்குப் பக்கத்திலும், ஸ்தல விருக்ஷமாகிய வில்வம், தேவியார் சந்நிதிக்குப் போகும் வழியில் வெளிப் பிராகாரத்திலும் இருக்கின்றன. ஸ்வாமி தீண்டாத் திருமேனி; குவளை சாத்தி அபிஷேகம் நடக்கின்றது.

பள்ளூருக்குத் தெற்கு $1\frac{1}{2}$-மைலில் 'கோவிந்தவாடி அகரம்' என்னும் ஊரில், விருத்தக்ஷீர நதியாகிய பழைய பாலாற்றுக்குத் தென்கரையில் தக்ஷிணா மூர்த்தி கோயில் இருக்கின்றது.

'திருந்தவன் குருகவன் கூர்மை யவன்
பெருந்தகை பெண்ணவன் ஆணு மவன்
கருந்தட மலர்க் கண்ணி காதல் செய்யும்
மருந்தவன் வளநகர் மாற் பேறே. (ச)

*பொருமாற் றிண்படை வேண்டிநற் பூம்புனல்
வருமாற் றின்மலர் கொண்டு வழிபடுங்
கருமாற் கின்னருள் செய்தவன் காண்டகு
திருமாற் பேறுதொ ழுவினை தேயுமே. (அ)

## 234. திருமீயச்சூர் :

[சோ ; ச ; முயற்சி நாதேசுரர் - சௌந்தர நாயகி ; வில்வ விருக்ஷம் ; சூரிய புஷ்கரணி.]

பேரளம் ரெயில்வே ஸ்டேஷனுக்கு மேற்கு 1-மைல்.

ஸ்வாமியையும் தேவியாரையும் யானைமேல் வைத்துச் சூரியன் பூஜைசெய்த ஸ்தலம். திருக்கோயிலின் விமானம் யானையிருப்பதுபோ லிருக்கின்றது. தேவியாரும் இருந்த திருக்கோலம்.

காயச் செவ்விக் காமற் காய்ந்து கங்கையைப்
பாயப் படர்புன் சடையிற் பதித்த பரமேட்டி
மாயச் சூரன் றறுத்த மைந்தன் றாதைதன்
மீயச் சூரைத் தொழுதும் வினையை வீட்டுமே. (ச)

## 235. திருமீயச்சூர் இளங்கோயில் :

[சோ ; அ ; சகல புவனேசுரர் - மேகலாம்பிகை.]

இது மீயச்சூர் [234] ஸ்வாமி சந்நிதிக்கு வடபுற மிருக்கின்றது. காளி பூஜித்த ஸ்தலம்.

தோற்றுங் கோயிலுந் தோன்றிய கோயிலும்
வேற்றுக் கோயில் பலவுள மீயச்சூர்க்
கூற்றம் பாய்ந்த குளிர்புன் சடையாற்
கேற்றங் கோயில்கண் டீரிளங் கோயிலே. (அ)

## 236. திருமுண்டீச்சுரம் என்பது கிராமம்.

[நடு ; அ ; சிவலோகநாதர் - கானார்குழலியம்மை.]

திருவெண்ணெய்நல்லூருக்குக் [266] கிழக்கு 3-மைல். திருவெண்ணெய்நல்லூர் ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து திருவெண்ணெய் நல்லூருக்குப் போகும் வழியில் 1-மைல்.

பிரமனும் தேவேந்திரனும் பூஜித்த ஸ்தலம்.

உரிந்தவுடை யார்துவரா லுடம்பை மூடி யுழிதருமவ் வூமரவ ருணரா வண்ணம்
பரிந்தவன்காண் பனிவரைமீப் பண்ட மெல்லாம் பரித்துடனே நிரந்துவரு பாய்நீர்ப் பெண்ணை
நிரந்துவரு மிருகரையுந் தடவா வோடி நின்மலனை வலங்கொண்டு நீள நோக்கித்
திரிந்தலவு திருமுண்டீச் சுரத்து மேய சிவலோகன் காணவனென் சிந்தை யானே. (அ)

**237.** திருமுதுகுன்றம் என்பது விருத்தாசலம்.

[நடு; மூ; பழமலைநாதர் - பெரியநாயகி; மணிமுத்தநதி; வன்னி விருக்ஷம்.]

ரெயில்வே ஸ்டேஷன். சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் பரவையாரின் பொருட்டு ஸ்வாமியை வேண்டிப் பொன் பெற்ற ஸ்தலம்.*

இது விருத்தகாசி யெனப்படும். இங்கு உயிர்விடும் பிராணிகளுக் கெல்லாம் பார்வதிதேவியார் தமது வஸ்திரத்தினால் வீசி இளைப்பாற்ற, சிவபெருமான் பஞ்சாக்ஷரோபதேசஞ் செய்து அப்பிராணிகளைத் தமதுருவ மாக்கும் அரும்பதி யாதலால், இது காசியினுஞ் சிறந்த தெனக் கந்தபுராணம் வழிநடைப் படலத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

தூசினா லம்மை வீசத் தொடையின்மேற் கிடத்தித் துஞ்சு
மாசிலா உயிர்கட் கெல்லா மஞ்செழுத் தியல்பு கூறி
யீசனே தனது கோல மீந்திடு மியல்பா லந்தக்
காசியின் விழுமி தான முதுகுன்ற வரையுங் கண்டான்.

ஸ்தலபுராணம் அச்சிடப்பட்டுள்ளது.

மத்தாவரை நிறுவிக்கடல் கடைந்தவ் விடமுண்ட
தொத்தார்தரு மணிநீண்முடிச் சுடர்வண்ணன திடமாம்
கொத்தார்மலர் குளிர்சந்தகில் ஒளிர் குங்குமங் கொண்டு
முத்தாறுவந் தடிவீழ்தரு முதுகுன்றடை வோமே. (ச)

கருமணியைக் கனகத்தின் குன்றொப் பானைக்
கருதுவார்க் காற்ற எளியான் தன்னைக்
குருமணியைக் கோளரவ மாட்டு வானைக்
கொல்வேங்கை யதளானைக் கோவணவன் தன்னை
அருமணியை யடைந்தவர்கட் கமுதொப் பானை
ஆனஞ்சு மாடியைநா னபயம் புக்க
திருமணியைத் திருமுதுகுன் றுடையான் தன்னைத்
தீவினையேன் அறியாதே திகைத்த வாறே. (அ)

நெடியோ னான்முகனு மிர வியொடு மிந்திரனும்
முடியால் வந்திறைஞ்ச முது குன்றம மர்ந்தவனே
படியா ரும்மியலாள் பர வையிவள் தன்முகப்பே
யடிகேள் தந்தருளா யடி யேனிட்ட ளங்கெடவே. (சு)

## 238. திருமுருகன்பூண்டி:

[கொ; சு; முருகநாதேசுரர் - முயங்குபூண் முலையம்மை.]

ஈரோட்டுக்கு மேற்கிலுள்ள திருப்பூர் ரெயில்வேஸ்டேஷனுக்கு வடக்கே அவிநாசிக்குப் [12] போம் வழியில் 5-மைல். இதற்கப்பால் அவிநாசி 3-மைல்.

இதற்கு 'மாதவி வனம்' என்றும் பெயர். துருவாச முனிவர் கற்பகலோகத்திலிருந்து மாதவி (குருக்கத்தி) மரத்தை இங்குக் கொண்டு வந்தன ரென்பர். அவர் முதலினோருக்குப் "பிரம தாண்டவ" தரிசநந் தந்த நடராஜர் சந்நிதி விசேடம்.

பிறைவதி சடையவன் பிரம தாண்டவ
முறைமையிற் புரிதிரு முருகன் பூண்டியென்
றறைதரு வைப்பினை யடுத்து வாழ்ந்தினி
துறைதரு முயிர்சிவ வுருவ மெய்துமால்

—திருமுருகன்பூண்டிப் புராணம்.

முருகக்கடவுள் பூஜித்த ஸ்தலம். ஆதலால் முருகன்பூண்டி என்னும் பெயர் போந்தது.

செருமலைத் திருவேற் செங்கைத் தேசிகன் வழிபா டாற்றும்
பெருமையிற் சிறந்த தாலப் பெருந்தலம் பொருந்து தெய்வ
வரமலி வானோ ராதி மகிதலத் தோர்க்கும் யார்க்கும்
அருமையான் முருகன் பூண்டி யாயதே யதற்கு நாமம்

—திருமுருகன்பூண்டிப் புராணம்.

சேரமான் பெருமா ணாயனார் கொடுத்த திரவியங்களை யெடுப்பித்துக்கொண்டு சுந்தரமூர்த்திநாயனார் திருவாரூருக்குச் செல்லுகையில், ஸ்வாமி பூதர்களை வேடர்களாக்கி அனுப்பி அத் திரவியங்களைப் பறிக்கச்செய்து, பின்பு நாயனார் பதிகம்பாடித் துதிக்க, அவைகளை மீட்டுங் கொடுத்தருளிய ஸ்தலம். வழிமறித்து நிதிபறித்த இறைவன் இருக்கும் இடத்தைக் கூவென்று கூவிச் சுந்தரமூர்த்திக்குக் காட்டிய விநாயகர் திருமுருகன்பூண்டிக்கு $\frac{1}{8}$-மைலில் அவிநாசிக்குப் போகும் வழியில் வீற்றிருக்கின்றார். அவருக்குக் "கூப்பிடு பிள்ளையார்" என்று பெயர்.

கோயிலுக்கு வெளியிற் பிள்ளையார் கோயிலொன் றிருக்கின்றது. அதற்கெதிரில் ஒரு பாறையிற் சிறுகுழியொன் றிருக்கின்றது. அதில் 12-வருஷத்துக் கொருவிசை ஜலம்பொங்குவதாகச் சொல்லுகிறார்கள்.

பறிகொடுத்து முகம் வாடிய சுந்தரமூர்த்தி ஸ்வாமிகளுடைய உருவமும், இழந்த நிதியை மீட்டும் பெற்ற அவருடைய உருவமும் கோயில் வாயிலி லுள்ளன.

ஸ்தலபுராணம் அச்சிடப்பட்டுள்ளது.

கோடுகு வெஞ்சிலை வடுக வேடுவர் விரவலாமை சொல்லித்
திடுகு மொட்டெனக் குத்திக் கூறைகொண் டாறலைக்குமிடம்
மூடுகு நாறிய வடுகர் வாழ் முருகன் பூண்டி மாநகர்வா
யிடுகு நுண்ணிடை மங்கை தன்னொடு மெத்துக்கிங் கிருந்தீ
எம்பிரானிரே. (சு)

## 239. வடதிருமுல்லைவாயில் :

[தொ ; சு ; மாசிலாமணீசுரர் - கொடியிடைநாயகி.]

சென்னப்பட்டணத்துக்கு மேற்கு 10-மைலிலுள்ள அம்பத்தூர் ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடமேற்கு 1½–மைல். ஆவடி ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடகிழக்கு 2½-மைல். சுப்பிரமணிய ஸ்வாமி பூஜித்த ஸ்தலம். தொண்டைமான் சக்கிரவர்த்தி அநுக்கிரகம் பெற்ற திருப்பதி.* அவருக்கு அவசரக் காக்ஷி கொடுத்து யுத்தத்துக்குத் துணையாக நந்தியை யனுப்பினதாகச் சொல்லுகிறார்கள். ஒரு நந்தி கிழக்கு நோக்கி யிருக்கின்றது. ஸ்வாமி தீண்டாத் திருமேனி. சந்தனக் காப்பிடுகிறார்கள். ஸ்வாமி சந்நிதியில் இரண்டு எருக்கந் தூண்கள் இருக்கின்றன. இவைகளுக்கு மூன்று இடங்களிற் பூணிட்டிருக்கின்றது. அடியார்கள் சந்தனத் தைலம் பூசுகின்றார்கள்.

ஸ்தலபுராணம் அச்சிடப்பட்டுள்ளது.

சொல்லரும் புகழான் தொண்டைமான் களிற்றைச்
சூழ்கொடி முல்லையாற் கட்டிட்
டெல்லையி லின்பம் அவன்பெற வெளிப்பட்
டருளிய இறைவனே யென்று
நல்லவர் பரவுந் திருமுல்லை வாயில்
நாதனே நரைவிடை யேறீ
பல்கலைப் பொருளே படுதுயர் களையாய்
பாசுப தாபரஞ் சுடரே. (சு)

**240**. தென்திருமுல்லைவாயில் :

[சோ ; ச ; முல்லைவனநாதர் — கோதையம்மை.]

இது கடலோரத்தி லிருக்கின்றது. சீகாழிக்குக் [88] கிழக்கு 9—மைல்.

தேவேந்திரனும் கார்க்கோடகனும் சுதர்மனும் பூஜித்த ஸ்தலம்.

வரைவந் தெடுத்த வலிவா ளரக்கன் முடிபத்து மிற்று நெரிய
உரைவந்த பொன்னி னுருவந்த மேனி யுமைபங்க னெங்கள் பரனூர்
வரைவந்த சந்தொ டகிலுந்தி வந்து மிளிர்கின்ற பொன்னி வடபாற்
றிரைவந்து வந்து செறிதேற லாடு திருமுல்லை வாயி லிதுவே. (ச)

**241**. திருமுக்கீச்சுரம் என்பது உறையூர்.

[சோ ; ச ; பஞ்சவர்ணேசுரர் - காந்திமதியம்மை ]

திரிசிராப்பள்ளிக்கு [132] மேற்கு 1—மைல். பிரமன் வந்து பூஜிக்கும்பொழுது சிவபெருமான் வேளைக்கொரு வர்ணமாக வீற்றிருக்கக்கண்டு அவருக்குப் பஞ்சவர்ணநாதேசுரர் என்று பெயர் கொடுத்த ஸ்தலம். புகழ்ச்சோழநாயனாருடைய ஸ்தலம். மூவேந்தருஞ் சேர்ந்து தொழுத திருப்பதி. * இங்கு உதங்கமுனிவருக்கு ஐந்து காலங்களில் ஐந்து வர்ணமாகச் சிவபெருமான் காட்சி கொடுத்தருளினராம். யானையைக் கோழி வென்றமையால் இத்தலத்துக்குக் கோழியூர் என்றும் ஒரு பெயருண்டு. சூரவாதித்தன் என்னுஞ் சோழனாற் சீர்திருத்தப்பட்டு ஆலயம் முதலிய அமைக்கப் பெற்றனவாம்.

மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை யவர்கள் பாடிய ஸ்தலபுராணம் அச்சிடப்பட் டிருக்கின்றது.

* நீருளா ரும்மலர் மேலுறை வானெடு மாலுமாய்ச்
சீருளா ருங்கழ றேடமெய்த் தீத்திர ளாயினன்
சீரிள லங்கொளிர் தென்னவன் செம்பியன் வில்லவன்
சேருமுக் கீச்சுரத் தடிகள்செய் கின்றதோர் செம்மையே. (ச)

**242**. திருவக்கரை : [தொ ; ச ; சந்திரசேகரர் — வடிவாம்பிகை.]

மயிலம் ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து (3—மைல்) மயிலம் ஊருக்குச் சென்று, அங்கிருந்து வானூர் போகும் வழியில் 4—மைல் சென்று, 88—ஆவது மைல் கல் இருக்கும் இடத்துக்கு அப்பாற் சுமார் $\frac{1}{4}$-மைல் சென்று, அங்கு வழியை விட்டு வயல்வழியாகச்

செல்லும் வண்டிப் பாதையில் 5-மைல் சென்றால், இத்தலத்தை அடையலாம். வழியில் எரையூரும் ஞெமலியு மிருக்கின்றன.

விழுப்புரம் ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து வடக்கு 5½-மைல் சென்று, புறவார் பனங்காட்டூரை [209] யடைந்து, அங்கிருந்து கிழக்கு 8-மைல் சென்று கூனிச்சம்பட்டைச் சேர்ந்து, அங்கு வடக்கே திரும்பி 1-மைல் சென்று கொடுக்கூர் ஆற்றைக் கடந்து, அப்பால் ½-மைல் சென்றாலும் திருவக்கரையை அடையலாம்.

சந்திரனுக்காக ஒரு முகமும், பிரமனுக்காக ஒரு முகமும், திருமாலுக்காக ஒரு முகமும் என ஸ்வாமி மும்முகத்துடன் விளங்குகின்றார். வக்கிராசூரன் பூஜித்த லிங்கம் கோயிலுக்குள் முற்புறத்தில் வடபால் இருக்கின்றது. கட்டிடம் இடிந்து கிடக்கின்றது. பரிதாபம். வக்கிராசுரனைத் திருமால் சங்கரித்தபொழுது அவனிரத்தம் பூமியிற் படாதபடி நாவை நீட்டி உறிஞ்சின காளியின் உருவம் தென்பால் இருக்கின்றது. காளியின் வலது காதில் ஒரு குழந்தையின் உருவம் குண்டலமாகத் தொங்குகின்றது. இடது கையில் வில் இருக்கின்றது. பெரிய பிராகாரத்தில் வடக்கில் விஷ்ணு ஆலயம் மேற்குப் பார்த்திருக்கின்றது.

திண்டிவனம் தண்டகவனம் எனவும், திருவக்கரை குண்டலிவனம் எனவும் சொல்லுகிறார்கள். குண்டலருஷி உருவம் வடக்குப் பிராகாரத்தில் இருக்கின்றது.

சந்திர சேகரனே யரு ளாயென்று தண்விசும்பி
லிந்திர னும்முதலா விமையோர்கள் தொழுதிறைஞ்ச
அந்தர மூவெயிலு மன லாய்விழ வோரம்பினுன்
மந்தர மேருவில்லா வளைத் தானிடம் வக்கரையே. (ச)

## **243.** வடுகூர் : [நடு ; ச ; வடுகேசுரர் - வடுவகிர்க்கண்ணம்மை ]

இஃது ஆண்டார்கோயில் என வழங்குகின்றது.

புதுச்சேரிக்கு மேற்கு 10-மைலிலுள்ள சின்னபாபு சமுத்திரம் ரெயில்வே ஸ்டேஷனுக்கு மேற்கு 2-மைல். பிரென்சுக்காரரைச் சேர்ந்தது.

வடுகனாகிய வைரவர் பூஜித்த ஸ்தலம். கோயில் சிறிதாயினும் கவனிப்பாரில்லை. பரிதாபம்.

சுடுகூ ரெரிமாலை யணிவர் சுடர்வேலர்
கொடுகூர் மழுவாளொன் றுடையர் விடையூர்வர்
கடுகூர் பசிகாமங் கவலை பிணியில்லார்
[illegible] (க)

## 244. திருவலஞ்சுழி :

[சோ; ச - அ; கற்பகநாதேசுரர் - பெரியநாயகி; காவிரிநதி.]

கும்பகோணத்துக்கு [97] மேற்கு 4-மைல். ஸ்வாமிமலை ரெயில்வே ஸ்டேஷன்.

தேவேந்திரன் பூஜித்த ஸ்தலம். தலத்துக்கு வடக்கில் அரிசிலாறு ஓடுகின்றது. விநாயகர் — வெள்ளை விநாயகர். அவர் வீற்றிருக்கும் மண்டபம் மிக்க வேலைப்பாடுடையது. இவ்விநாயகரைப் பூஜித்ததால் அமுதம் திரண்டதெனவும், தேவேந்திரன் இந்த விநாயகரைப் பூஜித்தனனெனவும், அவன் திருவலஞ்சுழிக்கு வந்தகாலத்தில் இவ்விநாயகர் அந்தத்தலத்தில் நின்றுவிட்டனரெனவும் சொல்லுகிறார்கள். பிரமோற்சவம் முதலிய விநாயகருக்குத்தான் நடக்கின்றன. விநாயகரைத் தீண்டக்கூடாதாம். பிலத்திற் சென்றுவிட்ட காவிரி வெளிப்படு நிமித்தம் ஏரண்டமுநிவர் தம்மைப் பலி கொடுத்தபின், அது மேலேவந்து வலமாகச் சுழித்துக்கொண்டு சென்ற காரணத்தால், ஊருக்குத் திருவலஞ்சுழி என்று பெயர் வந்ததென்று சொல்லுகிறார்கள். அம் முநிவருடைய உருவமும் கோயிலி லிருக்கின்றது. அவருக்குப் பக்கத்தில் வலஞ்சுழிநாதர் அல்லது தக்ஷிணாவர்த்தர் என்னும் சிவலிங்கபெருமான் வீற்றிருக்கின்றார்.

பூச நீர்பொழி யும்புனற் பொன்னியிற் பன்மலர்
வாச நீர்குடை வாரிடர் தீர்க்கும் வலஞ்சுழித்
தேச நீர்திரு நீர்சிறு மான்மறி யீர்சொலீ
ரேச வெண்டலை யிற்பலி கொள்வதி லாமையே. (ச)

ஓத மார்கட லின்விட முண்டவர்
பூத நாயகர் பொற்கயி லைக்கிறை
மாதொர் பாகன் வலஞ்சுழி யீசனைப்
பாத மேத்தப் பறையுநம் பாவமே. (அ)

## 245. திருவலம்புரம் என்பது பெரும்பள்ளம்.

[சோ; மூ; வலம்புரிநாதர் - வடுவகிர்க் கண்ணம்மை.]

சீகாழியிலிருந்து [88] தென்கிழக்காய்க் காவிரிப்பூம்பட்டினம் [87] போகும் வழியில் 7-மைல் சென்று, திருவெண்காட்டைச் [263] சேர்ந்து, பின்னும் அந்தவழியில் $1\frac{1}{4}$-மைல் சென்று, அங்கு வழியைவிட்டு மேற்கே $\frac{1}{4}$-மைல் சென்றால், இத் தலத்தை யடையலாம். இதற்குத் தென்மேற்கு $1\frac{1}{4}$-மைலில் தலைச்சங்காடு[145]இருக்கின்றது.

விஷ்ணு பூஜித்து வலம்புரிச் சங்கு பெற்ற ஸ்தலம்.

திருஞானசம்பந்த ஸ்வாமிகளுடன் அப்பர் ஸ்வாமிகள் தலங்கள் தோறுந் தரிசித்துச் சென்றபொழுது சிவபெருமான் அப்பர் ஸ்வாமிகளைத் தாமே இத்தலத்துக்கு வரவழைத்துத் தரிசநந் தந்தனர்.

"பண்மலிந்த மொழியவரும் யானுமெல்லாம் பணிந்திறைஞ்சித் தம்முடைய பின்பின் செல்ல, மண்மலிந்த வயல்புடைசூழ் மாடவீதி வலம்புரமே புக்கங்கே மன்னினாரே",—"வாவா எனவுரைத்து மாயம்பேசி வலம்புரமே புக்கங்கே மன்னினாரே",—என்பன தேவாரம்.

கோடியுடை மும்மதி லூடுருவக் குனிவெஞ் சிலைதாங்கி
இடிபட வெய்த அமரர்பிரா னடியா ரிசைந்தேத்தத்
துடியிடை யாளையொர் பாகமாகத் துதைந்தா ரிடம்போலும்
வடிவுடை மேதி வயல்படியும் வலம்புர நன்னகரே. (ச)

மூவாத மூக்கப்பாம் பரையிற் சாத்தி மூவருரு வாய முதல்வ ரிந்நாட்
கோவாத வெரிகணையைச் சிலைமேற் கோத்த குழகனார் குளிர் கொன்றை சூடி யிங்கே
போவாரைக் கண்டடியேன் பின்பின் செல்லப் புறக்கணித்துத் தம்முடைய பூதஞ் சூழ
வாவா வெனவுரைத்து மாயம்பேசி வலம்புரமே புக்கங்கே மன்னினாரே.(அ)

எனக்கினித் தினைத்தனைப் புகலிட மறிந்தேன்
பனைக்கனி பழம்படும் பரவையின் கரைமேல்
எனக்கினி யவன்தமர்க் கினியவ னெழுமையும்
மனக்கினி யவன்தன திடம்வலம் புரமே. (க)

**246.** திருவலிதாயம் என்பது பாடி.

[தொ; ச; வலிதாய நாதர் - தாயம்மை.]

சென்னபட்டணத்துக்கு மேற்கு 6-மைலிலுள்ள வில்லிவாக்கம் (கொன்னூர்) ரெயில்வே ஸ்டேஷனுக்குத் தென்மேற்கு 2-மைல். குறட்டூர் ரெயில்வே ஸ்டேஷனுக்குத் தெற்கு 1½-மைல்.

பாரத்துவாஜர், பிருஹஸ்பதி, ஹநுமார் முதலியோர் பூஜித்த ஸ்தலம். கோயில் சிறிது. அதன் கிணற்று நீர் நன்றாயிருக்கின்றது.

ஸ்தல மான்மியம் அச்சிடப்பட்டுள்ளது.

ஐய ஞெய்யன்னணி யன்பிணி யில்லவ ரென்றுந் தொழுதேத்தச்
செய்யன் வெய்யபடை யேந்தவல் லான்றிரு மாதோ டுறைகோயில்
வையம் வந்துபணி யப்பிணி தீர்த்துயர் கின்ற வலிதாயம்
உய்யும் வண்ணந்நினை மின்னினைந் தால்வினை தீருந் நலமாமே. (ச)

## 247. வலிவலம் :

[சோ; மூ; மனத்துணைநாதர் - வாளையங்கண்ணியம்மை; புன்னை விருக்ஷம்.]

திருவாரூருக்குத் [23] தென்கிழக்கு 6-மைல். இதற்கு வடக்கு 2-மைலிற் [44] கன்றாப்பூர் இருக்கின்றது.

சூரியனும், காரணருஷியும், கரிக்குருவியும் பூஜித்த ஸ்தலம். ஸ்வாமி சந்நிதி கட்டுமலைமேல் இருக்கின்றது. கோயிலைச் சுற்றிக் கிழக்குப் பக்கந் தவிர மற்றெல்லாப் பக்கங்களிலும் மாலையிட்டது போல ஓடை யொன் றிருக்கின்றது.

பிராகாரத்திற் பலா விருக்ஷம் இருக்கின்றது.

ஆதி யாய நான்முகனு மாலு மறிவரிய
சோதி யானே நீதியில்லேன் சொல்லுவ னின்திறமே
ஓதி நாளு முன்னை யேத்து மென்னை வினையவலம்
வாதி யாமே வந்து நல்காய் வலிவலம் மேயவனே. (ச)

நல்லான்கா ணான்மறைக ளாயி னான்கா
ணம்பன்கா ணணுகாதார் புரமூன் றெய்த
வில்லான்காண் விண்ணவர்க்கு மேலா னான்காண்
மெல்லியலாள் பாகன்காண் வேத வேள்விச்
சொல்லான்காண் சுடர்மூன்று மாயி னான்காண்
தொண்டாகிப் பணிவார்க்குத் தொல்வா னீய
வல்லான்காண் வானவர்கள் வணங்கி யேத்தும்
வலிவலத்தான் காணவனென் மனத்து ளானே. (அ)

ஊனங் கத்துயிர்ப் பாயுயிர்க் கெல்லா மோங்கா ரத்துரு வாகிநின் றானை
வானங் கத்தவர்க் கும்மளப் பரிய வள்ளலை யடி யார்க டம்முள்ளத்
தேனங் கத்தமு தாகியுள் ளூறுந் தேச னைத்திளைத் தற்கினி யானை
மானங் கைத்தலத் தேந்த வல்லானை வலிவலந் தனில் வந்து கண்டேனே. (சு)

## 248. திருவல்லம் :

[தொ; ச; வல்லநாதர் – வல்லாம்பிகை.]

இது திருவலம் என்று வழங்குகின்றது.

ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து 2-மைல். நீவா என்னும் நதியின் மேல்கரையி லிருக்கின்றது. விநாயகர்-வரசித்தி விநாயகர்.

நவக்கிரகங்களும், வல்லாளனென்னும் அரசனும் பூஜித்த ஸ்தலம். நந்தி கிழக்குத்திசை நோக்கி யிருக்கின்றது.

திருவல்லத்துக்கு வடக்கு 8-மைலில் "வள்ளிமலை" என்னும் சுப்ரமண்ய ஸ்தலம் இருக்கின்றது. இம்மலையில் வள்ளியம்மை காத்த தினைப்புனம், நீராடியசுனை, சூரியன் காணாச் சுனை முதலிய உள்ளன.

எரித்தவன் முப்புர மெரியின் மூழ்கத்
தரித்தவன் கங்கையைத் தாழ் சடைமேல்
விரித்தவன் வேதங்கள் வேறு வேறு
தெரித்தவ னுறைவிடந் திரு வல்லமே. (ச)

## 249. திருவன்னியூர் :

[சோ ; அ ; அக்நீசுரர் — பார்வதியம்மை ; அக்நி தீர்த்தம்.]

திருவீழிமிழலைக்கு [261] வடமேற்கு 2-மைல்.

அக்கினி பூஜித்த ஸ்தலம். கோயில் மிகவும் சிறிது.

ஞானங் காட்டுவர் நன்னெறி காட்டுவர்
தானங் காட்டுவர் தம்மடைந் தார்க்கெல்லாம்
தானங் காட்டித்தன் றாளடைந் தார்கட்கு
வானங் காட்டுவர் போல்வன்னி யூரரே. (அ)

## 250. திருவாஞ்சியம் :

[சோ ; மூ ; வாஞ்சிலிங்கேசுரர் - மங்களநாயகி ; குப்தகங்கை தீர்த்தம்; சந்தன விருக்ஷம்.]

நன்னிலம் ரெயில்வே ஸ்டேஷனுக்கு மேற்கு 6-மைல். வழியில் 1½-மைலில் திருக்கொண்டீச்சுரமும் [113], அப்பால் 1½-மைலில் நன்னிலமும் [163] இருக்கின்றன. திருவாரூர் ஸ்டேஷனி லிறங்கி வடமேற்கு கும்பகோணம் போகிற வழியில் 11-மைல் சென்றாலும் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

இது புத்தாறு என்னும் நதியின் வடகரையி லிருக்கின்றது. விஷ்ணுமூர்த்தி சிவபெருமானைப் பூஜித்துத் தம்மைவிட்டுப் பிரிந்து போன லக்ஷ்மியை யடையப்பெற்ற ஸ்தலம். அவர் திருவை வாஞ்சித்த இடம் திரு வாஞ்சியம். கோயில் பெரிது. சந்தன விருக்ஷம் பிராகாரத்தி லிருக்கின்றது. குப்தகங்கை தீர்த்தம் கோயிலுக்கு வடக்கில் இருக்கின்றது. இதிற் கார்த்திகைமீ ஞாயிற்றுக்கிழமைக ளில் ஸ்நானஞ் செய்வது விசேஷம். இத் தலத்தில் இறப்பவர்க ளுக்கு இயம்வாதனை யில்லை. கோயிலில் இயமனுக்கு ஒரு சந்நிதியும்

ஸ்வாமிக்கு இயமவாகனமும் இருக்கின்றன. இத்தலம் காசிக்குச் சமமாகச் சொல்லப்படுந் தென்னாட்டுத்தலங்கள் ஆறனுள் ஒன்று.

முத்தி யளிக்குந் தலங்களுள் ஒன்று - அநுபந்தம் III பார்க்க.

"முத்தி யருள்தரு திருவாஞ்சி யத்தி லமரர்கள் பெருமாளே."

—திருப்புகழ்-816.

வன்னி கொன்றை மதமத்த மெருக்கொடு கூவிளம்
பொன்னியன்ற சடையிற் பொலிவித்த புராணனார்
தென்ன வென்றுவரி வண்டிசை செய்திரு வாஞ்சியம்
என்னை யாளுடை யானிட மாக வுகந்ததே. (ச)

அங்க மாறு மருமறை நான்குடன்
தங்கு வேள்வியர் தாம்பயி லுந்நகர்
செங்கண் மாலிட மார்திரு வாஞ்சியம்
தங்கு வார்நம்ம மரர்க்க மரரே. (அ)

பொருவ னார்புரி நூலர் புணர்முலை யுமையவ ளோடு
மருவ னார்மரு வார்பால் வருவது மில்லைநம் மடிகள்
திருவ னார்பணிந் தேத்துந் திகழ்திரு வாஞ்சியத் துறையும்
ஒருவ னாரடி யாரை யூழ்வினை நலியவொட் டாரே. (கூ)

## **251**. வாட்போக்கி :

[சோ; அ; ரத்நகிரீசுரர் — சுரும்பார் குழலம்மை; காவிரி தீர்த்தம்.]

இஃது இரத்தினகிரி என வழங்குகின்றது. ஆதிசேஷனுக்கும் வாயுதேவனுக்கும் உண்டான போரில் வாயுதேவன் மேருமலையி லிருந்து வெளிப்படுத்த வந்ததொரு முடியாதலின் இப்பெயர் போந்த தென்பர். குழித்தலை ரெயில்வே ஸ்டேஷனுக்குத் தெற்கு மணப்பாறை போகும் வழியில் 6½-மைல்.

கோயில் உயரிய மலைமே லிருக்கின்றது. இந்திரன், சயந்தன், வாயு, ஆதித்தன், ஆதிசேடன், அகத்தியர் முதலியோர் பூஜித்த ஸ்தலம். ஆரிய தேசத்தரசன் மாணிக்கம் வேண்டி ஸ்தலங்கள்தோறுஞ் சென்றுங் கிடையாமல் இங்குவர, சிவபெருமான் ஒரு நீர்த்தொட்டி யைக் காட்டி, அதைக் காவிரி ஜலத்தினால் நிரப்பும்படிச் சொல்ல, அரசன் அவ்வாறு செய்தும் அத்தொட்டி நிறையாமலிருக்கக் கோபங் கொண்டு; உடைவாளையுருவி ஓச்ச நினைக்க, சிவபெருமான் அவ் வாளைப் போக்கிவிட்டு இரத்தினத்தைக் காண்பித்தருளவும், அரசன் அதை விரும்பாது விட்டுச் சிவபணிவிடை ஒன்றையே செய்து

முத்திபெற்ற ஸ்தலம். இத்தலத்தில் அகஸ்தியர் மத்தியான தரிசநம் பெற்றபடியால் இங்கு மத்தியான தரிசநம் விசேஷம். ஸ்வாமிக்கு மத்தியான சுந்தரர் என்றும் பெயர். இங்கு இந்திரனு லுண்டாக்கப் பட்ட வேப்ப விருக்ஷத்தையும், இரத்தினகிரீசரைத் தரிசித்துத் திரும்பும்பொழுது வீரப்பெருமாளென்னும் வீரவாகுவையுந் தரிசித்தல் வேண்டும்.

ஆரியராஜனுல் வெட்டுப்பட்ட வாட்குறி இலிங்கத்தில் இருக்கின்றது. ஸ்வாமிக்கு "முடித்தழும்பர்" என்னும் ஒரு திருநாமம் உண்டு. பன்னிருவருடத்துக் கொருவிசை இடி பூஜை உண்டாம். இம்மலை "காகம் அணுக முடியாத மலை" என்ப.

"காக மேவுறிற் கடுந்தழல் வீசிடு பரம்பு"

—நாகைக் காரோணப் புராணம்.

வந்திவ் வாறு வளைத்தெழு தூதுவர்
உந்தி யோடி நரகத் திடாமுனம்
அந்தி யின்னொளி தாங்குமாட் போக்கியார்
சிந்தி யாவெழு வார்வினை தீர்ப்பரே. (அ)

## 252. திருவாய்மூர் :

[சோ ; ச-அ ; வாய்மூர் நாதர் - பாலினு நன்மொழியம்மை.]

திருவாரூருக்குத் [23] தென்கிழக்கு 15-மைல். திருக்கோளிலிக்குத் [126] தென்கிழக்கு 2-மைல். வழியில் எட்டிக்குடி இருக்கின்றது.

இது சப்தவிடங்க ஸ்தலங்களுள் ஒன்று. சூரியன் பூஜித்தது. கோயிலுக்கு எதிரிற் சூரிய தீர்த்தம் இருக்கின்றது.

எட்டு வைரவமூர்த்திகள் இந்தத் தலத்தில் இருந்தனவாம். இப்பொழுது ஏழு இருக்கின்றன.

திருநாவுக்கரசு நாயனர் வேதாரணியத்தி லிருந்தபொழுது சிவபெருமான் அவருக்குத்தோன்றியருளித் திருவாய்மூருக்கு வரும்படிக் கட்டளையிட அவர்,

எங்கே யென்னை யிருந்திடந் தேடிக்கொண்
டங்கே வந்தடை யாளம் அருளினர்
தெங்கே தோன்றுந் திருவாய்மூர்ச் செல்வனர்
அங்கே வாவென்று போனர் அதென்கொலோ.—

என்று பாடிக்கொண்டு செல்லும்பொழுது, அவருக்குப் பின் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரும் வர, இருவருங் கூடிக்கொண்டு சென்று தரிசித்த ஸ்தலம்.

திறக்கப் பாடிய என்னினுஞ் செந்தமிழ்
உறைப்புப்பாடி யடைப்பித்தா ரும்நின்றார்
மறைக்க வல்லரோ தம்மைத் திருவாய்மூர்ப்
பிறைக்கொள் செஞ்சடை யாரிவர் பித்தரே—

என்னுந் தேவாரம் ஈண்டுணரற் பாலது.

தளிரிள வளரென வுமைபாடத் தாளம் மிடவோர் கழல்வீசிக்
கிளரிள மணியர வரையார்த் தாடும் வேடக் கிறிமையார்
விளரிளமுலையவர்க்கருணல்கிவெண்ணீறணிந்தோர்சென்னியின்மேல்
வளரிள மதியமொ டிவராணீர் வாய்மூ ரடிகள் வருவாரே. (க)

பாலின் மொழியாளோர் பாகங் கண்டேன்
பதினெண் கணமும் பயிலக் கண்டே
னீல நிறமுண்ட கண்டங் கண்டே
னெற்றி நுதல்கண்டேன் பெற்றங் கண்டேன்
காலைக் கதிர்செய் மதியங் கண்டேன்
கரந்தை திருமுடிமேற் றோன்றக் கண்டேன்
மாலைச் சடையு முடியுங் கண்டேன்
வாய்மூ ரடிகளைநான் கண்ட வாறே. (அ)

## 253. திருவாளொளிபுற்றூர் :

[சோ ; ச - சு ; மாணிக்கவண்ணர் - வண்டார்பூங்குழலம்மை.]

வைத்தீசுரன் கோயிலுக்கு [207] மேற்கு 2-மைலிலுள்ள திருப்புன்கூருக்கு [211] மேற்கு 3-மைல்.

விஷ்ணுமூர்த்தி மாணிக்கத்தை வைத்துப் பூஜித்த ஸ்தலம். அதனால் ஸ்தலத்துக்கு அரதனபுரம் எனவும் பெயருண்டு. வண்டு பூஜித்த ஸ்தலம். விஜயனுடைய கைவாளை ஸ்வாமி ஒரு புற்றில் ஒளித்துவைத்த ஸ்தலம். அக்காரணத்தால் 'வாள் ஒளி புற் றூர்' என்னும் பெயர் வந்தது. "உன் கரவாள், நின்ற வாகையி னயற் புற்றேளித்தனன்"—என்பது ஸ்தலபுராணம்.

மீநாக்ஷிசுந்தரம்பிள்ளை யவர்கள் பாடிய தலபுராணம் அச்சிடப்பட்டுள்ளது.

தண்டுந் தாளமுங் குழலுந் தண்ணுமைக் கருவியும் புறவில்
கொண்ட பூதமு முடையார் கோலமும் பலபல வுடையார்
கண்டு கோடலு மரியார் காட்சியு மரியதோர் கரந்தை
வண்டு வாழ்பதி யுடையார் வாளொளி புற்றூ ருளாரே. (க)

திருவி ஞயக ஞகிய மாலுக் கருள்கள் செய்திடுந் தேவர் பிரானை
உருவி ஞனையொன் ருவறி வொண்ணு மூர்த்தி யைவிச யற்கருள் செய்வான்
செருவி லேந்தியோர் கேழற்பின் சென்று செங்கண் வேடஞு
யென்ஞெடும் வந்து
மருவி ஞன்றனை வாளொளி புற்றூர் மாணிக் கத்தை மறந்
தென்னினைக் கேனே. (௬)

## 254. திருவான்மியூர் :

[தொ ; ச - அ ; மருந்தீசுரர் - சொக்கநாயகி.]

இது கடற்கரை யோரம். மயிலாப்பூருக்குத் [225] தெற்கு 3-மைல்.

வான்மீகருஷி பூஜித்த ஸ்தலம். ஸ்வாமி பால் நிறமான சுயம்பு மூர்த்தி. சந்நிதி மேற்குப் பார்த்தது.

திருக்குளம் கோயிலுக்குக் கிழக்கில் இருக்கின்றது. இலிங்க மூர்த்தி சற்று வடபாற் சாய்ந்திருக்கின்ருர். பசு பால் சொரிந்து அபிஷேகித்தபொழுது பட்ட குளம்பின் வடு தெரிகின்றதாம்.

வான்மீக ரிஷியின் உற்சவ விக்கிரகம் பிராகாரத்தி லிருக்கின்றது. ஊரின் வடமேற்கில் வான்மீக ராலயம் ஒன்றிருக்கின்றது. மேலைக் கோபுர வாயிலில் வான்மீகருக்குத் தியாகராஜர் பருவந்தோறும் நடந தரிசனந் தருகின்ருர். நடநம் கோயிலைச் சுற்றியும் மாடவீதிகளிலும் நடக்கின்றது.

விரையார் கொன்றையிஞய் விட முண்ட மிடற்றினனே
உரையார் பல்புகழா யுமை நங்கையொர் பங்குடையாய்
திரையார் தெண்கடல்சூழ் திருவான்மியூ ருறையும்
அரையா வுன்னை யல்லா லடையா தென தாதரவே. (௪)

ஒட்டை மாடத்தி லொன்பது வாசலுங்
காட்டில் வேவதன் முன்னங் கழலடி
நாட்டி நாண்மலர் தூவி வலஞ்செயின்
வாட்டந் தீர்த்திடும் வான்மியூ ரீசனே. (அ)

## 255. விஜயமங்கை :

[சோ ; ச - அ ; விஜயநாதர் - மங்கைநாயகி ; அருச்சுன தீர்த்தம்.]

கும்பகோணத்துக்கு [97] வடமேற்கு $5\frac{1}{2}$-மைலிலுள்ள திருப்புறம்பயத்துக்கு [208] மேற்கு $2\frac{1}{2}$-மைல். அப்பால் மேற்கே $1\frac{1}{2}$-மைலில் திருவைகாவூர் [274] இருக்கின்றது. கும்பகோணத்துக்கும் திருப்புறம்பயத்துக்கும் வழியில் இன்னம்பர் [42] இருக்கின்றது.

இந்த விஜயமங்கை ஒரு சிறு கிராமம்; கோயிலுஞ் சிறிது. கொள்ளிடக்கரைக் கோவந்தபுத்தூருக் கடுத்துள்ளது விஜயமங்கை என்பது தேவாரத்தால் தெரிகின்றது. விஜயனுகிய அருச்சுனன் தவஞ்செய்து பாசுபதாஸ்திரம் பெற்ற ஸ்தலம். *

குறிப்பு :— " கோதனம் வழிபடக் குலவு நான்மறை
வேதியர் தொழுதெழு விஜய மங்கையே "

கொள்ளிடக் கரைக் கோவந்த புத்தூரில்
வெள்விடைக் கருள் செய்விஜய மங்கை "

எனவரும் தேவாரப் பதிகங்களானும் கல் வெட்டுக்களானும், ' விஜய மங்கை ' என்பது கோவந்த புத்தூரிலுள்ள சிவலயமே என்பர் ஆராய்ச்சி வல்லுநர்.

மருவமர் குழலுமை பங்கர் வார்சடை
அரவமர் கொள்கையெம் அடிகள் கோயிலாம்
குரவமர் சுரபுன்னை கோங்கு வேங்கைகள்
விரவிய பொழிலணி விசய மங்கையே. (ச)

பாண்டு வின்மகன் பார்த்தன் பணிசெய்து
வேண்டு நல்வரங் கொள்விச யமங்கை
ஆண்ட வன்னடி யேநினைந் தாசையாற்
காண்ட லேகருத் தாகியி ருப்பனே. (அ)

**256.** <u>திருவியலூர்</u> : [சோ ; ச ; யோகாநந்தர் - சௌந்தரநாயகி.]
கும்பகோணத்துக்குக் [97] கிழக்கு 4-மைல் ; மண்வழி.

திருமங்கலக்குடியில் [221] திருப்பணி செய்து இறந்துபோன ஒரு அடியவரை, இந்த ஸ்தலத்துக்குக் கொண்டு வரும்பொழுது, அவர் திருமங்கலக்குடி தேவியாருடைய திருவருளால் உயிர்த்தெழுந்தனர். கோயில் பெரிது, கோபுரம் இருக்கின்றது.

' விரிநீர் வியலூரே ' என்று திருஞானசம்பந்த ஸ்வாமிகள் அருளிச்செய்தாங்கு திருவியலூர் எங்கும் ஜலமயமா யிருக்கின்றது.

குரவங்கமழ் நறுமென்குழ லரிவை யவள் வெருவப்
பொருவெங்கரி படவென்றத னுரிவை யுட லணிவோ
னரவும்மலை புனலும்மிள மதியுந் நகு தலையும்
விரவுஞ்சடை யடிகட்கிடம் விரிநீர் வியலூரே. (ச)

**257.** <u>விளநகர்</u> :

[illegible]

மாயூரத்துக்குக் [224] கிழக்கு $4\frac{1}{2}$-மைல். மாயூரத்துக்கடுத்த மண்ணம்பந்தல் ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து 1-மைல்.

அருள்வித்தன் என்னும் பிராமணன் ஸ்வாமிக்காக புஷ்பக் கூடையை யெடுத்துக்கொண்டு யாற்றில் வரும்பொழுது, வெள்ளம் வந்து அடித்துச் செல்ல, அவ்வேதியன் பூக்கூடையை விடாது சிவபெருமானையே தியானிக்க, அவர் அவ்வன்புக் கிரங்கி அவனுக்குத் துறைகாட்டிக் கரையேறவிட்டு, ஞானோபதேசஞ் செய்தருளிய ஸ்தலம். இக்காரணத்தால் ஸ்வாமிக்குத் துறைகாட்டு வள்ளல் என்னும் பெயர் உண்டாயிற்று.* ஊருக்கு விழல் நக ரென்றும் ஸ்வாமிக்கு உசீரவனேசுரர் என்றும் பெயர். உசீரம்=விழல்.

ஆறுமுகக் கடவுளுடைய விக்கிரகம் சிறிதாயும் வெகு அழகாயு மிருக்கின்றது.

*சொற்றரு மறை பாடினார் சுடர்விடுஞ் சடை முடியினார்
கற்றருவ் வடங் கையினார் காவிரித் துறை காட்டினார்
மற்றரு திர டோளினார் மாசில்வெண் பொடிப் பூசினார்
விற்றரு மணி மிடறினார் மேயது விள நகரதே. [சு]

## 258. விளமர்:

[சோ ; ச ; பதஞ்சலிமனோகரர்—யாழினு மென்மொழியம்மை; அக்கினி தீர்த்தம்.]

திருவாரூருக்குத் [23] தென்மேற்கு 2-மைல். ஓடம்போக்கி யாற்றின் தென்கரையி லிருக்கின்றது.

கோயில் சிறிது. அதற்கெதிரில் அக்கினி தீர்த்தம் உள்ளது. பதஞ்சலிமுனிவர் பூஜித்த ஸ்தலம். பதஞ்சலி, வியாக்கிரபாதர்களுடைய விக்கிரகங்கள் கோயிலி லிருக்கின்றன.

மத்தக மணிபெற மலர்வதொர் மதிபுரை நுதல்கர
மொத்தக நகமணி மிளிர்வதொ ரரவின ரொளிகிளர்
ரத்தக வடிதொழ வருள்பெறு கண்ணொடு முமையவள்
வித்தக ருறைவது விரிபொழில் வளநகர் விளமரே. (சு)

## 259. திருவிற்குடி: [சோ ; ச ; வீரட்டானேசுரர்—ஏலவார்குழலி.]

திருவாரூருக்கு [23] வடக்கிலுள்ள வெட்டாறு ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடகிழக்கு $3\frac{1}{2}$-மைல்.

அட்டவீரத்தலங்களில் ஒன்று. சலந்தராசுரனைச் சங்கரித்த ஸ்தலம்.

" திண்டிற லவுணன் றன்னைப் பெருவிரற் நீட்டு நேமி
உண்டிட விருந்தாக் கொண்டோன் உறையதாம்.
திருவிளை - அருச்சனை - உச.

வடிகொண் மேனியர் வானமா மதியினர் நதியினர் மதுவார்ந்த
கடிகொள் கொன்றையஞ் சடையினர் கொடியின ருடைபுலி யதளார்ப்பர்
விடைய தேறுமெம் மானமர்ந் தினிதுறை விற்குடி வீரட்டம்
அடிய ராகிநின் றேத்தவல் லார்தமை யருவினை யடையாவே. (ச)

**260.** திருவிற்கோலம் என்பது கூவம்.

[தொ ; ச ; திரிபுராந்தகர் - திரிபுராந்தகியம்மை.]

சென்னபட்டணத்துக்கு மேற்கிலுள்ள கடம்பத்தூர் ரெயில்வே ஸ்டேஷனுக்குத் தெற்கு 6-மைல். இலம்பையங் கோட்டூர் [41] இதற்குச் சமீபத்தி லிருக்கின்றது. ஸ்வாமி-தீண்டாத் திருமேனி. அதிக மழை பெய்கிறதாக இருந்தால் ஸ்வாமிமேல் வெண்மையான வர்ணம் படருகிறதும், யுத்தம் நேரிடுவதா யிருந்தாற் சிவந்த வர்ணம் படருகிறதுமான அதிசயமான ஸ்தலம்.* கோயிலுக்குக் கிழக்கில் திருக்குளம் இருக்கின்றது. திரிபுர மெரித்த மூர்த்தி திருக்கையில் விற்கோலமாகத் தங்கிய இடம்.

" புரங்கள் வெந்தறச், செகுத்தவ னுறை விடந் திருவிற் கோலமே "- என்பது சம்பந்தர் திருவாக்கு.

சிவப்பிரகாசஸ்வாமிகள் அருளிய தலபுராணம் அச்சிடப்பட்டுள்ளது.

* ஐயனல் லதிசய னயன்விண் ணோர்தொழு
மையணி கண்டனார் வண்ணம் வண்ணவான்
பையர வல்குலாள் பாக மாகமுஞ்
செய்யவ னுறைவிடந் திருவிற் கோலமே. (ச)

**261.** திருவீழிமிழலை :

[சோ ; மூ ; நேத்திரார்ப்பணேசுரர் – சுந்தரகுஜாம்பிகை ; விஷ்ணு தீர்த்தம் ; வீழி விருக்ஷம்.]

மாயூரத்துக் கடுத்த குற்றாலம் [150] ரெயில்வே ஸ்டேஷனுக்குத் தெற்கு 6-மைல். பேரளம் ஸ்டேஷனுக்குத் தென்மேற்கு 8-மைல். ஆடுதுறை, பூந்தோட்டம் ஆகிய ஸ்டேஷன்களிலிருந்தும் போகலாம்.

வீழிச்செடிகள் நிறைந்திருப்பதால் இவ்வூருக்குத் திருவீழிமிழலை என்று பெயர் வந்தது. கோயிலுக் கெதிரில் ஒரு பெரிய குளம்

இருக்கின்றது. மூலலிங்கத்துக்குப் பின் பார்வதி பரமேசுரர் திருவுருவங்கள் இருக்கின்றன. சக்கிரம் வேண்டித் திருமால் பூஜை செய்யும்பொழுது, ஒருநாள் ஒரு பூ குறைபடத் தமது கண்ணையே யிடந்து சாத்திச் சக்கிரம் பெற்ற ஸ்தலம்.*

ஊர் சிறிது. கோயில் பெரிது. முதற்பிராகாரத்தில் நூற்றுக் கால் மண்டபத்தின் கற்றூண்கள் மேலே வளைவு வளைத்துக் கட்டியிருக்கும் வேலை அருமையாக யிருக்கின்றது. வடக்கு வீதி கீழைக் கோடியிற் சம்பந்தஸ்வாமி கோயிலும் மேலைக் கோடியில் அப்பர் ஸ்வாமி கோயிலும் இருக்கின்றன.

கலியாண கோலமாயுள்ள மூர்த்தியின் பாதத்தில் விஷ்ணு தமது கண்ணைப்பறித்து அருச்சித்த குறி யிருக்கின்றது. உற்சவமூர்த்தியின் வலப் பாதத்தின் மேலே திருமாலுடைய கண்ணும் கீழே சக்கிரமும் இருக்கின்றன.

ஸ்வாமி வீற்றிருக்கும் இடம் விண்ணிழி விமானம் என்று சொல்லப்படுகின்றது. விண்ணிழி விமானம் திருமால் கொணர்ந்த தென்பதனைத்,

"தன்றவம் பெரிய சலந்தர னுடலந் தடிந்தசக் கிரமெனக் கருளென்
றன்றரி வழிபட் டிழிச்சிய விமானத் திறையவன் பிறையணி சடையன்"—

என்னுஞ் சம்பந்தர் திருவாக்கா லறிக.

திருஞான சம்பந்தமூர்த்தி நாயனாரும் திருநாவுக்கரசு நாயனாரும் இந்தத் தலத்தி லெழுந்தருளியிருந்தபொழுது பஞ்சமுண்டாக, அவ்விருவர்களுக்கும் சிவபிரான் படிக்காசு கொடுத்தருளி, அவர்கள் மூலமாய் அடியார்களுக் கமுதளித்த அரும்பதி†. அங்ஙனம் படிக்காசு வைத்த பலிபீடங்கள் கிழக்கிலும் மேற்கிலும் இருக்கின்றன. மேற்கே இருக்கும் பலிபீடத்தருகிற் படிக்காசு பிள்ளையார் வீற்றிருக்கின்றார். அவருக் கருகில் அப்பர் சம்பந்தர்களுடைய விக்கிரகங்கள் இருக்கின்றன. ஸ்வாமி தாம் ஸ்ரீகாழியிலிருக்குந் திருக்கோலத்தைத் திருஞான சம்பந்தருக்கு இங்குள்ள விண்ணிழிந்த விமானத்திலே காட்டியருளினார். தேவாரத்திலும் பாராட்டப் பட்டுள்ள அந்தணர்கள் வாழும் அரும்பதி. "தில்லை மூவாயிரர் போல வீழி ஐஞ்ஞூற் றந்தணர்" என்ப.

"ஐஞ்ஞூற் றந்தண ரேத்தும் எண்ணில் பல்கோடி
குணத்த ரோர் வீதியவர் நம்மை யாளுடையாரே"

—திருவிசைப்பா.

நீறு பூசினீர், ஏற தேறினீர், கூறு மிழலையீர், பேறு மருளுமே. (க)

* நீற்றினை நிறையப் பூசி நித்தலா யிரம்பூக் கொண்டு
ஏற்றுழி யொருநா ளொன்று குறையக்கண் ணிறைய விட்ட
ஆற்றலுக் காழி நல்கி யவன்கொணர்ந் திழிச்சுங் கோயில்
வீற்றிருந் தளிப்பர் வீழி மிழலையுள் விகிர்த னாரே. (அ)

பரந்த பாரிட மூரி டைப்பலி பற்றிப் பார்த்துணுஞ் சுற்ற மாயினீர்
தெரிந்த நான்மறையோர்க் கிடமாய திரு மிழலை
யிருந்து நீர்தமி ழோடிசை கேட்கு மிச்சை யாற்காசு நித்த னல்கினீ
ரருந்தண் வீழிகொண்டீ ரடியேற்கு மருளுதிரே. (க)

## 262. வெஞ்சமாக்கூடல் :

[கொ ; ச ; விகிர்தநாதேசுரர் - விகிர்தநாயகி.]

கருவூருக்குத் [76] தெற்கு அரவக்குறிச்சிக்குப் போகும் வழியில் 12-மைல் சென்று, அப்பால் கிழக்கே 3-மைல் சென்று, (மணிமுத்தநதியை) குழகனாற்றைக் கடந்தால் இத்தலத்தை அடையலாம். ஆறு தெற்கே ஓடுகின்றது. 3—மைலும் வழி கெடுதலாயிருக்கின்றது. கோயிலும் நல்ல ஸ்திதியி லில்லை. கவனிப்பா ரில்லை.

வெஞ்சன் என்னும் அசுரன் பூஜித்த ஸ்தலம்.

கோயில் சற்றுப் பள்ளத்தி லிருக்கின்றது. சிவபெருமான் தம் மாட்டுப் பத்தி முதிர்ந்த ஒரு கிழவியிடம் தம் பிள்ளைகளை ஈடுகாட்டிப் பொன் வாங்கிச் சுந்தரமூர்த்திக்கு அளித்த ஸ்தலம்.

இதனை வெஞ்சமாக் கூடற் றலபுராணத்திலும், கொங்கு மண்டல சதகம் - "கிழவேதிய வடிவாகி" என்னுஞ் செய்யுளிலுங் காண்க.

வரைமா னனையார் மயிற்சா யனல்லார்
வடிவேற் கணல்லார் பலர்வந் திறைஞ்சத்
திரையார் புனலுட் பெய்துகொண்டு மண்டித்
திளைத்தெற்று சிற்று றதன்கீழ்க் கரைமேல்
நிரையார் கமுகுந் நெடுந்தாட் டெங்கும்
குறுந்தாட் பலவும் விரவிக் குளிரும்
விரையார் பொழில்சூழ் வெஞ்சமாக் கூடல்
விகிர்தா வடியே னையும்வேண் டுதியே. (க)

## 263. திருவெண்காடு :

[சோ ; மூ ; சுவேதாரணியேசுரர் - பிரமவித்யாநாயகி ; சோம, சூர்ய, அக்நி ஆகிய முக்குளம்.]

சீகாழிக்குத் [88] தென்கிழக்கு 7-மைல்.

வெளிப்பிராகாரத்தில் அக்கினி மூலையில் அக்கினி தீர்த்தமும், தெற்குப் பிராகாரத்திற் சூரிய தீர்த்தமும், வடக்குப் பிராகாரத்தில் அம்மன் கோயில் தீர்த்தம் என வழங்கும் சந்திர தீர்த்தமும் இருக்கின்றன. உட்பிராகாரத்தில் அகோர வீரபத்திரமூர்த்தி சந்நிதானமும் நடராஜர் சந்நிதானமும் உள்ளன. அகோரமூர்த்தி கையிற் சூலத்துடன் தெற்கு நோக்கி வீற்றிருக்கின்றார்; ஞாயிற்றுக்கிழமை இரவுகளில் தரிசநம் விசேடம்; எதிரிற் காளி சந்நிதி யிருக்கின்றது. நடராஜர் சந்நிதி சிதம்பரத்திற் போலவே அமைந்து பிரபலமாயிருக்கின்றது.

இத் தலத்தில் மூன்று தீர்த்தங்களும், மூன்று மூர்த்திகளும், மூன்று விருக்ஷங்களும் விசேஷ மென்கிறார்கள். விருக்ஷங்களிற் கொன்றையும் ஆலும் இருக்கின்றன. பிறிதொன்று இன்னதெனத் தெரியவில்லை.

வெள்ளையானை பூஜைசெய்து பேறுபெற்ற ஸ்தலம்.*

"வெள்ளானை வேண்டும் வரங் கொடுப்பார் வெண்காடு மேவிய
விகிர்த னாரே"

என அப்பர் ஸ்வாமிகளும்,

"வெளிய வுருவிலானை வணங்கும் வெண்காடே,"

"அயிராவதம் பணிய மிக்கதனுக் கருள் சுரக்கும் வெண்காடு,"
எனச் சம்பந்த ஸ்வாமிகளும் திருவாய் மலர்ந்துள்ளனர்.

"காழுற்ற தந்தம் அற ஏகி வெண்காட்டில் ஈசன்
கேழுற்ற தாளர்ச் சனைசெய்து கிடைத்து வைகும்—வேழம்"
என்பது கந்தபுராணம் - திருவிளையாட்டுப் படலம் - சஙு.

"கோடு நான் குடைய வேழந் தானவன் குறைத்த கோட்டைப்
பாடற நோற்றுப் பெற்ற பதியிது"
—திருவிளை - அருச்சனை - உ0.

தேவேந்திரன் வழிபட்டுப் பூஜித்த ஸ்தலம்.

"விண்ணவர்கோன் வழிபடவெண் காடிடமா விரும்பினனே"
என்பது சம்பந்தர் திருவாக்கு.

சோம, சூரிய, அக்கினி என்னும் முக்குளங்களில் ஸ்நாநஞ் செய்வோர்க்கு நினைத்த காரியம் தப்பாது சித்தியாகும். இதனைத் திருஞான சம்பந்த ஸ்வாமிகள்,

பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினோ டுள்ளநினை
வாயினவே வரம்பெறுவ ரையுறவேண் டாவொன்றும்
வேயனதோ ளுமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையா ரவர்தம்மைத் தோயாவாந் தீவினையே

என்னும் பாடலால் அறிவுறுத்தி யுள்ளனர்.

சைவ - எல்லப்ப நாவல ரியற்றிய திருவெண்காட்டுப் புராணம் அச்சிடப்பட்டுளளது.

*சக்கிரமாற் கீந்தானுஞ் சலந்தரனைப் பிளந்தானு
மக்கரைமே லசைத்தானு மடைந்தயிரா வதம்பணிய
மிக்கதனுக் கருள்சுரக்கும் வெண்காடும் வினைதுரக்கு
முக்குளநன் குடையானு முக்கணுடை யிறையவனே. (௪)

கோள்ளி வெந்தழல் வீசிநின் றாடுவார்
ஒள்ளிய கணஞ் சூழுமை பங்கனூர்
வெள்ளி யன்கரி யன்பசு வேறிய
தெள்ளி யன்திரு வெண்கா டடை நெஞ்சே. (அ)

படங்கொ ளரகஞ் சென்னி சேர்த்திப் பாய்புலித்தோ லரையில் வீக்கி
அடங்க லாரூ ரெரியச் சிறி யன்று மூவர்க் கருள்பு ரிந்தீர்
மடங்க லானைச் செற் றுகந்தீர் மனைக டோறுந் தலைகை யேந்தி
விடங்க ராகித் திரிவ தென்னே வேலை சூழ்வெண் காடனீரே. (சு)

## 264. திருவெண்டுறை :

[சோ ; ச ; வெண்டுறைநாதர் - வேனெடுங்கண்ணியம்மை.]

இது திருவண்டுதுறை என வழங்குகின்றது. தஞ்சை ஜில்லா மன்னார்குடி ரெயில்வே ஸ்டேஷனுக்குக் கிழக்கு 6-மைல். கோட்டூருக்கு [120] வடமேற்கு $5\frac{1}{4}$-மைல். கோயிலுக்கு வடபுறம் ஒரு குளம் இருக்கின்றது.

இங்கு பிருங்கிருஷி வண்டுருபமாய் அர்த்தநாரீசுரருடைய உருவத்தைத் தொளைத்துச் சென்று ஸ்வாமியை மட்டும் பிரதக்ஷணம் செய்தன ரென்பர்.

வித்தியாதரர் முதலியோர் பூஜித்த ஸ்தலம்.

காலனை யோருதை யில்லுயிர் வீடுசெய் வார்கழலான்
பாலொடு நெய்தயி ரும்பயின் றாடிய பண்டரங்கன்
மாலை மதியொடு நீர வம்புனை வார்சடையான்
வேலன கண்ணியொ டும்விரும் பும்மிடம் வெண்டுறையே. (௧)

## 265. திருவெண்ணி:

[சோ ; ச ; அ ; வெண்ணிக்கரும்பர்-அழகிய நாயகி.]

இது தஞ்சாவூருக்குக் கிழக்கு 15-மைலிலுள்ள கோயில்வெண்ணி ரெயில்வே ஸ்டேஷன். அம்மா பேட்டை ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடகிழக்கு 3-மைல். மணல்வழி. நீடாமங்கலத்துக்கு மேற்கு 4-மைல். ஸ்வாமி கருப்பங்கழிகளை ஒன்று சேர்த்து வைத்தாற் போன்ற உருவத்தினர். சுயம்புமூர்த்தி. விக்கிரகங்களெல்லாம் வெகு அழகாயிருக்கின்றன.

சடையானைச் சந்திர னோடுசெங் கண்ணரா
உடையானை யுடைதலை யிற்பலி கொண்டூரும்
விடையானை விண்ணவர் தாந்தொழும் வெண்ணியை
யுடையானை யல்லதுள் காதென துள்ளமே. (ச)

வெண்ணித் தொன்னகர் மேயவெண் டிங்களார்
கண்ணித் தொத்த சடையர் கபாலியார்
எண்ணித் தம்மை நினைந்திருந் தேனுக்கு
அண்ணித் திட்டமு தூறு மென் னாவுக்கே. (அ)

## 266. திருவெண்ணெய்நல்லூர்:

[நடு ; சு ; தடுத்தாட்கொண்டநாதர் - வேற்கண்ணியம்மை ; பெண்ணை நதி.]

திருவெண்ணெய் நல்லூர் ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து 4-மைல். பண்ணுருட்டிக்கு மேற்கு 15 - மைல். விழுப்புரத்திலிருந்து 12-மைல். திருக்கோவலூரி [124] லிருந்து 14-மைல்.

இத்தலத்திலுள்ள ஆலயத்துக்குத் 'திருவருட்டுறை' யென்று பெயர். இவ்வாலயத்தில் வீற்றிருக்குஞ் சிவபெருமான் சுந்தரமூர்த்தி ஸ்வாமிகளைத் தடுத்தாட்கொண்ட மூர்த்தி. "வெண்ணெய் நல்லூரில் அற்புதப்பழ வாவணங்காட்டி யடியனு என்னை யாளது கொண்ட நற்பதத்தை",—என்பது சுந்தரர் திருவாக்கு. மெய்கண்ட தேவரென்னுங் காரணப்பெயரையுடைய ஸ்வேதவனப் பெருமாளாகிய சந்தானாசாரியர் வீற்றிருந்தருளிய ஸ்தலம். இதற்குச் சமீபத்திலுள்ள புத்தூரிலே சுந்தரமூர்த்தி ஸ்வாமிகளுக்குத் திருமணமாகுஞ் சமயத்திற் சிவபெருமான் ஒரு விருத்தப் பிராமண வேடங்கொண்டு, வந்து தடுக்க, மணந் தவிர்ந்தபடியால், அவ்வூர் 'மணந் தவிர்ந்த புத்தூர்' என்று நாளைக்கும் வழங்குகின்றது ; பண்ணுருட்டிக்கு மேற்கு 4-மைலில், திருவெண்ணெய் நல்லூருக்குப் போகும்வழியில் இருக்

கின்றது. இதுவன்றித் 'தடுத்தாட்கொண்டவூர்' என்ற ஒரு கிராமம் திருவெண்ணெய்நல்லூருக்குக் கிழக்கு 1½-மைலி லிருக்கின்றது.

வெண்ணெய் நல்லூர்க் கலம்பக மொன் றிருக்கின்றது.

பித்தாபிறை சூடிபெரு மானேயரு ளாளா
எத்தான்மற வாதேநினைக் கின்றேன்மனத் துன்னை
வைத்தாய்பெண்ணைத் தென்பால் வெண்ணெய் நல்லூ ரருட்டுறையு
ளத்தாவுனக் காளாயினி யல்லேனெனை லாமே. (கு)

## 267. திருவெண்பாக்கம்:

[தொ ; சு ; ஊன்றீசுரர்—மின்னலொளியம்மை ; இலந்தை விருக்ஷம்.]

சென்னபட்டணத்துக்கு மேற்கு 26-மைலிலுள்ள திருவெவ்வுளூர் ரெயில்வேஸ்டேஷனி லிறங்கி, வடக்கு 2½-மைல் சென்று, ஊரை யடைந்து, அங்கிருந்து மேற்கே திருப்பாசூருக்குப் [195] போகும்வழியில் ½-மைல் சென்று, வடக்கே திரும்பி, நாகலாபுரம் சத்தியவேடு ஆகிய இடங்களுக்குப் போகும் வழியில் 1½-மைல் சென்று, வழியைவிட்டு மேற்கே திரும்பித் தங்கானூர், கொழுந்தலூர், வெண்பாக்கம் என்னுங் கிராமங்கள் வழியாய்ச் சுமார் 2-மைல் சென்று, மறுபடி வடக்கே திரும்பி ½-மைல் சென்றால் ஆலயத்தை யடையலாம். திருவெவ்வுளூர் ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து 7-மைல். ஆலயமிருக்கும் ஸ்தலம் இப்பொழுது திருவுளம்பூதூர் என வழங்குகின்றது. சுந்தரமூர்த்திநாயனர் இந்த ஸ்தலத்துத் திருப்பதிகத்தின் ஒவ்வொரு செய்யுளிலும், "உளோம்போகீர் என்றானே"—என்று அருளிச் செய்திருப்பதால், "உளோம்போகீர்" என்பது மருவி, "உளம்பூதூர்" என்றாகி, இந்த ஊருக்குத் திருவுளம்பூதூர் என்னும் பெயர் உண்டாயிற்றுபோலும். திருவெண்பாக்கம் என்னும் ஊர் திருவுளம்பூதூருக்குத் தெற்கு ½-மைல். அங்கும் ஒரு சிறு ஆலயமிருக்கின்றது.

சுந்தரர், சங்கிலி நாச்சியாருக்குச் செய்த பிரமாணந் தவறித் திருவொற்றியூர் எல்லையைக்கடந்து சென்றதாற் பார்வை யிழந்து, இங்குவந்து சிவபெருமானைத் துதித்து ஊன்று கோல் பெற்றனர்.*

நந்தியின் வலது கொம்பு சிறிது ஒடிந்திருக்கின்றது. பக்கலில் இடதுகையில் ஊன்று கோலுடன் சுந்தரமூர்த்தி ஸ்வாமியின் உருவம் இருக்கின்றது. ஊன்றுகோல் பட்டு நந்தியின் கொம்பொடிந்ததாம். சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் காஞ்சீபுரம் போகும் வரையில் அவர் முன்-

தேவியார் மின்னல்போலத் தோன்றித் தோன்றி மறைந்த காரணத்தால் 'மின்னலொளியம்மை' எனப்பெயர் போந்ததாம்.

> * மான்றிகழுஞ் சங்கிலியைத் தந்துவரு பயன்களெல்லாந்
> தோன்றவருள் செய்தளித்தா யென்றுரைக்க வுலகமெல்லா
> மீன்றவனே வெண்ணிகோயி லிக்கிருந்தா யோவென்ன
> வூன்றுவதோர் கோலருளி உளோம்போகீ ரென்றானே. (ரு)

**268**. திருவேட்களம்: [சோ; ச-அ; பாசுபதேசுரர் - நல்லநாயகி.]

சிதம்பரத்துக்குக் [122] கிழக்கு 2-மைல்.

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் சிதம்பரத்திலே யிருப்பதற்கஞ்சி இங்கே இருந்துகொண்டு சிதம்பரத்துக்குப் போய்ச் சபாநாயகரைத் தரிசித்துவந்தனர். இங்குள்ள ஆலயமும், சிவபுரியி [176] லுள்ள இரண்டு ஆலயங்களும் ஒரேவிதமான அமைப்பும் அளவும் கொண்டுள்ளன. அருச்சுனனுக்குப் பாசுபதாஸ்திரம் கொடுத்த ஸ்தலம். பாசுபதாஸ்திரம் கையிலேந்திய உற்சவ விக்கிரகமும் அருச்சுனனுடைய உற்சவ விக்கிரகமும் கோயிலி லிருக்கின்றன. வைகாசி விசாகத்தில் இவ்வுற்சவம் நடக்கின்றது.

> அந்தமு மாதியு மாகிய வண்ண லாரழ லங்கை யமர்ந்திலங்க
> மந்த முழவ மியம்ப மலைமகள் காண நின்றாடிச்
> சந்த மிலங்கு நகுதலை கங்கை தண்மதியம் மயலே ததும்ப
> வெந்த வெண் ணீறு மெய்பூசும் வேட்கள நன்னக ராரே. (ச)

> கட்டப் பட்டுக் கவலையில் வீழாதே
> பொட்ட வல்லுயிர் போவதன் முன்னநீர்
> சிட்ட னார்திரு வேட்களங் கைதொழப்
> பட்ட வல்வினை யாயின பாறுமே. (அ)

**269**. திருவேட்டக்குடி: [சோ; ச; திருமேனியழகர் - சாந்தநாயகி.]

காரைக்காலுக்கு வடகிழக்கு 5½-மைல்.

அருச்சுனன் தபசு செய்துகொண்டிருக்கும்பொழுது சிவபெருமான் வேடரூபமாக வெளிப்பட்டருளிய ஸ்தலம்.

> நாவாய பிறைச்சென்னி நலந்திகழு மிலங்கிப்பி
> கோவாத நித்திலங்கள் கொணர்ந்தெறியுங் குளிர்கான
> லேவாரும் வெஞ்சிலையா லெயின்மூன்று மெரிசெய்த
> தேவாதி தேவனார் திருவேட்டக் குடியாரே. (ச)

**270. திருவேதிகுடி:** [சோ; ச-அ; வேதபுரீசுரர் - மங்கையர்க்கரசி.]

தஞ்சாவூரிலிருந்து வடக்கே திருவையாற்றுக்குப் [50] போகும் வழியில் 6 மைல் சென்று திருக்கண்டியூரை [68] அடைந்து, அங்கிருந்து கிழக்கே 1-மைல் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம். இதற்குச் சமீபத்தில் வடகிழக்கில் 1-மைலில் திருச்சோற்றுத்துறை [142] யிருக்கின்றது. இவ்விரண்டு ஸ்தலங்களுக்கும் மத்தியிற் குடமுருட்டி யாறு ஓடுகின்றது.

திருவேதிகுடி சப்தஸ்தானங்களில் 4-ஆவது ஸ்தலம். வேதங்கள் பூஜித்த ஸ்தலம். ஸ்வாமி வாழைமடுவில் உற்பத்தியானவர். வாழைமடுநாதர் என்ற பெயரும் உண்டு. பிள்ளையாருக்கு வேதப்பிள்ளையார் என்று பெயர். பங்குனி 13–15 தேதிகளிற் சூரிய பூஜை.

நீறுவரி யாடரவொ டாமை மன வென்பு நிரை பூண்ப ரிடபம்
ஏறுவரி யாவருமி றைஞ்சுகழ லாதியரி ருந்தவிட மாம்
தாறுவிரி பூகமலி வாழைவிரை நாற வின வாளை மடுவில்
வேறுபிரி யாதுவிளை யாடவள மாரும் வயல் வேதிகுடியே. (ச)

முன்பின் முதல்வன் முனிவனெம் மேலை வினைகழித்தான்
அன்பி னிலையி லவுணர் புரம்பொடி யானசெய்யுஞ்
செம்பொனை நன்மலர் மேலவன் சேர்திரு வேதிகுடி
யன்பனை நம்மை யுடையானை நாமடைந் தாடுதுமே. (அ)

**271. திருவேள்விக்குடி:**

[சோ; ச—சு; கலியாண சுந்தரேசுரர் – பரிமளசுகந்த நாயகி.]

மாயூரத்துக்குத் [224] தென்மேற்கு 5½-மைலிலுள்ள குற்றாலத்துக்கு [150] வடகிழக்கு 3-மைல்.

இதற்கு வடமேற்கு 2-மைலில் திருஎதிர்கொள்பாடியும் [46], அதற்கு வடகிழக்கு ½-மைலில் திருமணஞ்சேரியு [222] மிருக்கின்றன.

ஓ ரிராசகுமாரனுக்கு மணம்புரிய நிச்சயித்திருந்த பெண்ணை, மணம் நிறைவேறுமுன் அவள் தாய்தந்தையர் இறக்கவே, அவள் சுற்றத்தார் கொடாதொழிய, இராசகுமாரன் சிவபெருமானை நோக்கித் தவஞ்செய்யச் சிவபெருமான் அப்பெண்ணை ஒரு பூதத்தால் எடுப்பித்துக்கொண்டுவந்து அவனுக்குத் திருமணவேள்வி செய்தருளிய ஸ்தலம்.

ஓங்கிமே லூழிதரு மொலிபுனற் கங்கையை யொருசடைமேற்
றாங்கினா ரிடுபலி தலைகல னாக்கொண்ட தம்மடிகள்
பாங்கினா லுமை யொடும் பகலிடம் புகலிடம் பைம்பொழில் சூழ்
வீங்குநீர் திருத்தியா ரிரவிடத் துறைவர் வேள் விக்குடியே. (ச)

மூப்பது மில்லை பிறப்பது மில்லை யிறப்பதில்லை
சேர்ப்பது காட்டகத் தூரினுமாகச் சிந்திக்கி னல்லால்
காப்பது வேள்விக்குடி தண்டுருத்தி யெங்கோ னரைமேல்
ஆர்ப்பது நாக மறிந்தோமே லாயிவர்க் காட்படோமே. (சு)

**272.** திருவேற்காடு : [தொ ; ச ; வேதபுரீசுரர் - வேற் கண்ணியம்மை.]

சென்னப்பட்டணத்துக்கு மேற்கு 13-மைலிலுள்ள ஆவடி ஸ்டேஷனி லிறங்கி, அங்கிருந்து தெற்கே பூவிருந்தவல்லிக்குப் போகும் வழியிலே 3½-மைல் சென்று, அப்பால் கிழக்கே செல்லல் வேண்டும். "காடுவெட்டியாறு" என்று இப்பொழுது வழங்கும் பழைய பாலாற்றின் கரையில் இந்த ஸ்தல மிருக்கின்றது. இதற்குத் தெற்கே 2-மைலில் பூவிருந்தவல்லி இருக்கின்றது.

மூர்க்கநாயனார் திருவவதாரஞ்செய்த ஸ்தலம். அவருடைய சிலையுருவம் துவார பாலகர்களுக்கு வடபாலும், அகஸ்தியருக்கு மணக்கோல தரிசனங் கொடுத்தருளிய பார்வதி பரமேஸ்வரருருவங்கள் இலிங்கமூர்த்திக்குப் பின்பாலும், விநாயக ருருவம் வலப்பாலும் இருக்கின்றன.

திருவாவடுதுறை யாதீனத்தார் பாடிய ஸ்தலபுராணம் அச்சிடப்பட்டுள்ளது.

பூதம் பாடப் புறங்காட் டிடையாடி, வேத வித்தகன் வேய்காடு
போதுஞ் சாந்தும் புகையுங் கொடுத்தவர்க், கேத மெய்துத லில்லையே. (ச)

**273.** வைகன்மாடக்கோயில் : [சோ; ச; வைகனாதர்-வைகலாம்பிகை.]

ஆடுதுறை [102] ரெயில்வே ஸ்டேஷனுக்குத் தெற்கு 2-மைலிலுள்ள திருநீலக் குடிக்குத் [172] தென்கிழக்கு 3-மைல்

'வைகல்' என்னுமிடத்திற்குத் தென்மேற்கு ¼-மைலில் 'மாடக் கோயில்' இருக்கின்றது. இரண் டிடங்களிலும் கோயில்கள் உள்ளன. இவ்வாலயம் கோச்செங்கட்சோழராற் கட்டப்பட்ட மாடக் கோயில்களுள் ஒன்று. *

கோம்பியல் கோதைமுன் னஞ்சக் குஞ்சரத்
தும்பிய துரிசெய்த துங்கர் தங்கிடம்
வம்பியல் சோலைசூழ் வைகன் மேற்றிசைச்
செம்பியன் கோச்செங்க ணன்செய் கோயிலே. (ச)

## **274.** திருவைகாவூர் :

[சோ ; ச ; வில்வவனேசுரர் — வளைக்கை நாயகியம்மை ; யமதீர்த்தம் ; வில்வ விருக்ஷம்.]

கும்பகோணத்துக்கு [97] வடமேற்கு 8-மைலிலுள்ள விஜய மங்கைக்கு [255] மேற்கு 1½-மைல். கொள்ளிடத்தின் தென்கரை.

இது வில்வவன க்ஷேத்திரம். சிவராத்திரிக்கு முக்கியமான ஸ்தலம். சிவராத்திரி தினத்தில் ஒரு வேடன் புலிக்குப் பயந்து வில்வமரத்தின் மேலேறியிருந்து, இரவெல்லாம் வில்வபத்திரங்களைட் பறித்துப் போட்டுக்கொண்டிருக்கக் காலையிற் சிவபெருமான் வெளிப் பட்டு அநுக்கிரகஞ் செய்தருளினூர். இந்த ஐதிஹ்யம் கோயிலிற் காட்டப்பட்டிருக்கின்றது. எதிரில் இயமதீர்த்தம் இருக்கின்றது. கோயிலில் துவாரபாலகர்கள் இல்லை. இயமனை நிக்ரஹிப்பதற்காக நந்தி திரும்பி யிருக்கின்றூராம். எல்லா நந்திகளும் திரும்பியே உள்ளன. விக்கிரகங்கள் எல்லாம் நன்று யிருக்கின்றன. ஆறுமுக ஸ்வாமி அதிசுந்தரமா யிருக்கின்றூர்.

கோழைமிட றுககவி கோளுமில வாகவிசை கூடும் வகையா
லேழையடி யாரவர்கள் யாவைசொன சொன்மகிழு மீசனிடமாந்
தாழையிள நீர்முதிய காய்கமுகின் வீழநிறை தாறுசிதறி
வாழையுதிர் வீழ்கனிக ளூறிவயல் சேறுசெயும் வைகாவிலே. (ச)

# அநுபந்தம் I.

## இருப்புப் பாதைகள்.

1. அறக்கோணம்—காட்டுப்பாடி.
2. அறக்கோணம்—செங்கற்பட்டு.
3. ஈரோடு—திரிசிராப்பள்ளி.
4. ஈரோடு—போத்தனூர்.
5. செங்கற்பட்டு—விழுப்புரம்.
6. சென்னை—அறக்கோணம்.
7. சென்னை—செங்கற்பட்டு.
8. சென்னை—நெல்லூர்.
9. சேலம்—ஈரோடு.
10. சோரனூர்—எர்ணாகுளம்.
11. திரிசிராப்பள்ளி—மதுரை.
12. திரிசிராப்பள்ளி-மானாமதுரை.
13. திருத்தருப்பூண்டி—அகத்தியான்பள்ளி.
14. திருவாரூர்—தஞ்சாவூர்.
15. திருவாரூர்—நாகபட்டினம்.
16. நீடாமங்கலம்—மன்னார்குடி.
17. பாம்பன்—இராமேசுரம்.
18. பேரளம்—காரைக்கால்.
19. மணியாச்சி—தென்காசி.
20. மதுரை—பாம்பன்.
21. மதுரை—விருத்நகர்.
22. மாயூரம்—அறந்தாங்கி.
23. மாயூரம்—தரங்கம்பாடி.
24. மாயூரம்—திரிசிராப்பள்ளி.
25. ரேணுகுண்டா—கூடூர்.
26. விருதுப்பட்டி—தென்காசி.
27. விழுப்புரம்—காட்டுப்பாடி.
28. விழுப்புரம்—திரிசிராப்பள்ளி.
29. விழுப்புரம்—புதுச்சேரி.
30. விழுப்புரம்—மாயூரம்.



| ரெயில்வே ஸ்டேஷன். | ரெயில்வே யின் எண். | தரிசிக்கக்கூடிய ஸ்தலம். |
|---|---|---|
| 1. அகத்தியான்பள்ளி. | 13 | அகத்தியான்பள்ளி. |
| 2. அச்சிறுபாக்கம். | 5 | அச்சிறுபாக்கம். |
| 3. அம்பகரத்தூர். | 18 | திருக்கோட்டாறு. |
| 4. அம்பத்தூர். | 6 | (வடதிரு) முல்லைவாயில். |
| 5. அம்மாபேட்டை. | 14 | திருவெண்ணி. |
| 6. அரியலூர். | 28 | திருப்பழுவூர். |
| 7. அறக்கோணம். | 1,2,6 | திருவூறல். |
| 8. அறந்தாங்கி. | 22 | திருவாடானை, திருப்புத்தூர், திருப்புனவாயில். |

| ரெயில்வே ஸ்டேஷன். | ரெயில்வே யின் எண். | தரிசிக்கக் கூடிய ஸ்தலம். |
|---|---|---|
| 9. ஆக்கூர். | 23 | ஆக்கூர், திருக்கடவூர், திருக்கடவூர் மயானம், திருத்தலைச்சங்காடு, திருவலம்புரம். |
| 10. ஆடுதுறை. | 24 | திருவாப்பாடி, தென்குரங்காடுதுறை, திருநீலக்குடி, திருப்பனந்தாள், திருமங்கலக்குடி, திருவன்னியூர், திருவீழிமிழலை, வைகன்மாடக்கோயில். |
| 11. ஆநந்ததாண்டவபுரம். | 30 | திருக்கடைமுடி, திருநனிபள்ளி, திருநின்றியூர். |
| 12. ஆலத்தம்பாடி. | 22 | திருச்சிற்றேமம். |
| 13. ஆலப்பாக்கம். | 30 | திருச்சோபுரம், திருத்தினைநகர். |
| 14. ஆவடி. | 6 | வடதிருமுல்லைவாயில், திருவேற்காடு. |
| 15. இராமநாதபுரம். | 20 | திருவாடானை. |
| 16. இராமேசுரம். | 17 | இராமேசுரம். |
| 17. இருஞாலக்கடை. | 10 | திருவஞ்சைக்களம். |
| 18. இருந்தை. | 28 | திருநாவலூர். |
| 19. ஈரோடு. | 3,4 | திருநணா. |
| 20. உளுந்தூர்பேட்டை. | 28 | திருநெல்வெண்ணை. |
| 21. எழுமனூர். | 3 | திருப்பாராய்த்துறை. |
| 22. ஐயம்பேட்டை. | 24 | ஆலூர், திருக்கருகாவூர், (வட) குரங்காடுதுறை, சக்கிரப்பள்ளி, திருப்பழனம். |
| 23. கடம்பத்தூர். | 6 | இலம்பையங் கோட்டூர், திருப்பாசூர், திருவிற்கோலம். |
| 24. கருவூர். | 3 | கருவூர், வெஞ்சமாக்கூடல். |
| 25. காஞ்சிபுரம். | 2 | ஓணகாந்தன்தளி, திருவோத்தூர், கச்சி அநேகதங்காபதம், கச்சி ஏகம்பம், கச்சிநெறிக்காரைக்காடு, கச்சிமேற்றளி, |

